உ

ஸ்ரீராமஜயம்.

# தமிழ்நாட்டுக் கணக்குப்பதிவு நூல்



இது

தமிழ்நாட்டுக் கடைகளில் வேலை பழக வேண்டிய சிறுவர்களுக்கும், தமிழ் நாட்டுப் பள்ளிக்கூடங்களில் படிக்கும் மாணுக்கர்களுக்கும் உபயோகப்படும் படி நாட்டுக்கோட்டை நகரத்தார்களுடைய வழியை அனுஸரித்து வர்த்தகத் தமிழ் நடையில்,

M. N. சுப்பிரமணிய அய்யரால்,

இயற்றப்பட்டது.



தஞ்சாவூர்
லாலி எலக்டிரிக் அச்சுக்கூடம்,
கருணாநிதி வைத்தியசாலை.

1915.

# பொருளடக்கம்.

## முதல் பாகம்.

# நூன்முகம்.

நாம் வாஸஞ்செய்கின்ற இத்தமிழ்நாட்டில் வெகு காலமாகக் கொடுக்கல் வாங்கல் வியாபாரம் வரவு செலவு முதலியவைகள் நடந்துவந்திருக்கின்றன. அவற்றைப் பற்றிய கணக்குவழக்குக்களும் அவ்வக்காலத்திற்கு ஏற்றபடி ஏற்பட்டிருக்கின்றன. ஆங்கிலக்கல்விமுறை இந்நாட்டில் பிரசாரத்திற்கு வருமுன் கணக்குவைத்துக்கொள்ளும் முறை ஆங்காங்குத் தமிழ்முறையாகவே இருந்தது. அதையே நம்மவரெல்லோரும் எடுத்தாண்டுவந்திருக்கிறார்கள். தற்காலத்திலுங்கூட நாட்டுக்கோட்டை நகரத்தாரிடத்திலும் மற்ற வியாபாரிகளிடத்திலும் அம்முறையே வழக்கத்தில் இருந்து வருகிறது. வியாபாரத்தொழிலை விட்டு வேறு பல உத்தியோகங்கள் செய்யவிரும்பிய நம்மவர் பலரும் ஆங்கிலபாஷை கற்று மற்ற வியவஹாரங்களில் தலையிடவே அவர்களுக்குத் தமிழ்நாட்டுக் கணக்குமுறை முற்றிலும் மறந்துபோயிற்றென்று சொல்லலாம். சிலகாலமாக வியாபாரமுறையில் பழகுவது மிக அவசியமென்று நம்மிற் பலருக்கும் உணர்ச்சி உண்டாயிருக்கிறது. அத்தொழிலின்முறையைக் கற்றுக்கொள்ள இதுவரையில் ஒரு ஸாதநமும் இல்லாதிருந்தது. இப்போது 'தமிழ்நாட்டுக் கணக்குப் பதிவுநூல்' என்ற இச்சிறு புஸ்தகத்தை ம:்ஹா-ா-ா-ஸ்ரீ M. N. சுப்பிரமணிய அய்யரவர்கள் எளிய நடையில் எழுதி எல்லாருக்கும் உபயோகப்படும்படி வெளியிட்டிருப்பது அம்முறையில் அவாவுடையவர்களுக்கு அதிக உதவியாயிருக்குமென்பதற்கு ஸந்தேகமில்லை. ஆங்கில

முறை கற்றவர்களும் இம்முறையைக் கற்பதனால் அவ்விரு முறைகளிலும் ஸமர்த்தராவார்கள். ஆங்கிலேயரது முறையை மட்டிலும் கற்றுக்கொண்டவர்களுக்கு அம்முறையில் பயிலாத தமிழ்நாட்டு வியாபாரிகளிடத்தில் உத்தியோகம் பெற இட மில்லை. இதுவன்றி அவர்களது கணக்குவழக்குக்களைப் பரி சோதிக்கத்தக்க நிலைமையில் நம்மிற் பலருமிருந்தால் அதற் கேற்ற ஸர்க்காருத்தியோகத்தில் அமருவதற்கும் இடம்பாடு கள் இருக்கின்றன. இவ்விராஜதானியிலுள்ள சில தமிழ் ஜில் லாக்களில் இத்தமிழ்முறை தெரிந்தவர்களுக்கு ஐம்பது ரூபாய்களுக்குக் குறையாமல் அவ்விலாகாவில் ஸர்க்காருத்தி யோகம் கொடுப்பதாக ஆங்காங்கு கெஜட்டுமூலமாக வெளி யிட்டிருப்பதையும் நம்மவர் அறிந்துகொண்டிருப்பார்கள். ஆகவே ஆங்கிலமுறை கற்றவர்களும் மற்றவர்களும் இப்புஸ்த கத்தை உபயோகித்து மிக்கப் பயனடைவார்களென்று நம்பு கிறேன்.

பண்டித S. சுப்பிரமணிய சாஸ்திரி,

கல்யாணசுந்தரம் ஹைஸ்கூல்,

4—7—15. தஞ்சாவூர்.



# முகவுரை.



இவ்வுலகத்திலுள்ள ஜனங்கள் ஒவ்வொருவரும் ஸௌக்கியத்தை அடையவேண்டுமானால் (Wealth) பொருளை ஸம்பாதிக்கவேண்டும். அப்படி ஸம்பாதித்ததைக் காப்பாற்ற வேண்டும். காப்பாற்றியதை விருத்திபண்ணவேண்டும். விருத்திபண்ணியதைத் தானும் அனுபவித்துத் தர்மத்தின் பொருட்டும் செலவழிக்கவேண்டும். அப்படி ஸம்பாதிக்கப்பட்டுக் காப்பாற்றப்படாத திரவியம் நாசமாகும். விருத்திபண்ணாதது குறையும்.

தான் அனுபவியாமலும் தர்மத்தின் பொருட்டுச் செலவு செய்யாமலும் இருக்கிற திரவியம் வீணாகும் என்று நம் முன்னோர்கள் பல நூல்களிலும் நமக்கு வற்புறுத்திக் காட்டியிருக்கின்றனர்.

அப்படிப்பட்ட பொருள் என்பது என்ன என்பதை ஆங்கிலேயர்களில் மிகக் கற்றுணர்ந்த புத்திமான்கள் விவரித்திருப்பதில் "பொலிட்டிக்கல்எக்கானமி"(PoliticalEconomy) என்னும் நூலில் "Those things which are transferable limited in supply and useful are called wealth" என்பதாக ஒரு ஆங்கிலேய வித்துவானால் எழுதப்பட்டிருக்கிறது. அதாவது எந்த பதார்த்தங்கள் ஒருவர் கையிலிருந்து மற்றொருவர் கைக்கு மாற்றப்படக்கூடியனவாயும் அருமையாய் அகப்படக்கூடியனவாயும் பிரயோஜனமுள்ளனவாயும் இருக்கின்றனவோ அவைகள்தாம் செல்வம் என்று சொல்லப்படும்.

இம்மூன்று குணங்களும் பொருந்திய செல்வத்தை நாம் ஸம்பாதிக்கவேண்டுமானால் அதற்குப் பலவித வழிகள் இருந்

தபோதிலும் முக்கியமாய் "பயிர்த்தொழில்" "கைத்தொழில்" "வியாபாரம்" ஆகிய இம்மூன்றைக்கொண்டே ஸம்பாதிப்பது தான் மேன்மை என்பது பல ஜனங்களுடைய அபிப்பிராய மும் அனுபவமுமாயிருக்கிறது. முக்கியமாய் ஐரோப்பியர் களின் அபிப்பிராயமும் அனுபவமும் இதுவே.

அப்படிப் பயிர்த் தொழில் செய்து ஸம்பாதிப்பவர்க ளென்ன, கைத்தொழில் செய்து ஸம்பாதிப்பவர்களென்ன, வியாபாரம் செய்து ஸம்பாதிப்பவர்களென்ன இம்மூவர்களும் அவரவர்கள் ஸம்பாதித்ததைக் காப்பாற்றி விருத்தி பண்ண வேண்டியது முக்கியமாயிருக்கிறது.

அதற்கு ஸாதனம் "எண்ணுமெழுத்துங் கண்ணெனத் தகும்" என்றபடி கண்ணுக்கு ஸமானமான கணக்கேயன்றி வேறில்லை. எப்படியென்றால் பொருளை ஸம்பாதித்த ஒவ் வொருவரும் அப்பொருளைக் காப்பாற்றி விருத்திபண்ணும் பொருட்டு வரவு செலவு கணக்கு வைத்துக்கொள்ளவேண்டும். அப்படிக் கணக்கு வைத்துக்கொள்ளும் வழியை நமது ஆங்கி லேய நண்பர்கள் புக் கீப்பிங் (Book-keeping) என்னும் அருமையான நூலில் வெளிப்படுத்தி அதை ஆங்காங்குள்ள கல்விச்சாலைகளில் ஒரு பாடமாக வைத்து மாணுக்கர்களுக்குப் போதிக்கும்படி செய்திருப்பதால் அதில் தேறினவர்களில் பலர் வர்த்தக சாலைகளில் காரியதரிசிகளாக நியமிக்கப்பட்டு வருகிறார்கள் என்பதை நாம் எல்லோரும் அறிந்திருக்கிறோம்.

சென்ற முப்பது வருஷகாலமாய்ப் பலவியாபாரங்களில் அமர்ந்தும் பலகடைக் கணக்குக்களை ஆடிட்செய்து அதிலுள்ள பிசகுகளைக் கண்டுபிடித்துக் கொடுத்துக்கொண்டும் வருகிற நான், அந்தந்தவியாபாரங்களில் உள்ள அனுபவங்களை அனு ஸரித்து ஆடிட் செய்து வருவதில் கண்டுபிடிக்கப்படும் பிசகு களைக் குறித்துவைத்துக் கொண்டுவந்து அவைகளை ஆதார மாய் வைத்து இன்னின்ன வியாபாரங்களில் இன்னின்ன முறையாய்க் கணக்கு வைக்கவேண்டும் என்பதை எழுதிவைத் திருந்தேன்.

அப்படி நான் எழுதிவைத்திருந்ததை என் நண்பர்களில் சிலர் பார்த்து, புஸ்தகமாக அச்சிட்டு வெளியாக்கினால், நம் தமிழ்நாட்டுக் குடும்பஸ்தர்களுக்கும், வியாபாரிகளுக்கும், வியா

பாரத்தில் அமரவேண்டுமென அபேக்ஷிக்கும் சிறுவர்களுக்கும் உபயோகப்படும் என்றும், இதுவுமன்றி நாட்டுக்கோட்டை நகரத்தார்களில் கணக்கு அனுபவம் ஜாஸ்தியுள்ள பிரமுகர்களில் சிலர் இந்நூல் முற்றிலும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களுடைய அனுபவத்தையே ஒட்டி வருவதால் இப்புத்தகத்தை நகரப்பள்ளிகூடங்களில் பாடமாக வைத்து நடத்தினுல் அப்பள்ளிக்கூடங்களில் படிக்கும் சிறுவர்களுக்குப் பேருதவியாய் இருக்கும் என்றும் கேட்டுக்கொண்டபடியால் இதை அச்சிட்டு வெளியாக்கத் துணிந்தேன்.

இப்புத்தகத்தில் சொல்லியிருக்கும் வழிகள் வியாபாரத்தில் மிகத்தேர்ந்தவர்களாகிய நாட்டுக்கோட்டை நகரத்தார்களுடைய அனுபவத்தை ஒட்டியே எழுதப்பட்டிருக்கின்றன.

முக்கியமாய் இந்நூலை வெளிப்படுத்தியதின் காரணம் மற்ருென்றுண்டு. அதாவது நம் நாட்டுக் கடைகளில் எவ்வளவோ சிறுவர்கள் வேலை பழகவேண்டும் என்ற ஒரு அபிப்பிராயத்தைக்கொண்டு, நீண்டகாலம் சம்பளமில்லாமலேயே கடைகளில் ஏவப்பட்டவேலைகளைச் செய்துகொண்டு வருகிருர்கள். அதன் பிறகு அநேக மாதங்கள் சென்ற சிறு கணக்குக்கள் பார்க்கத்தெரிந்தவுடன் இரண்டு அல்லது மூன்று ரூபாய் சம்பளத்தில் நியமிக்கப்படுகிருர்கள். அச்சம்பளத்திலேயே சிலர் ஐந்து ஆறுவருஷம் வரை இருந்துவர நேரிடுகிறது. அதற்குள் வயது 16, 17 ஆய்விடுகிறது. அப்படியாகியும் வரவு செலவு கணக்குக்களைச் சிட்டைவாரியாய் எழுதவும் அவைகளை அஸல் குறிப்பு எழுதவும், அவைகளைப் பெயரேடு பதியவும் கூடச் சக்தியற்றவர்களாய் இருக்கிருர்கள்.

இப்படிப்பட்டவர்கள் இதர கடைகளில் இருந்துவரும் கணக்குக்களை வரவு செலவு பார்த்துக் கணக்கு தாக்கல் செய்யவும், அவைகளை செக் செய்யவும் எப்படிச் சக்தியுடையவர்களாவார்கள்? அப்பால் வியாபார நோக்கம் எவ்விதமென்பதையும் ஆங்கிலேய ஏற்பாடுகளில் நமக்கு மிகவும் அவசியமாய் வேண்டியபாங்கிவிபரங்களையும் இன்ஷ்யோரன்ஸ் போஸ்டல், தந்தி, கோர்ட்டுக்கட்டணம் முதலிய விஷயங்களையும் எப்படி அறிந்துகொள்ளப்போகிருர்கள் ?

ஆங்கிலேயருடைய பிள்ளைகளையோ கொஞ்சம் படித்த வுடனேயே, வர்த்தகப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பிவிடு கிறார்கள். அங்கு அவர்கள் வர்த்தகவிபரங்களை முற்றிலும் கற்றுக்கொண்டு வர்த்தகப் பரீக்ஷையில் தேறி ஆரம்பத்திலேயே உயர்ந்த சம்பளத்திற்குப்போய் விடுகிறார்கள். நம் இந்தியர்களுக்கோ அப்படிப்பட்ட பள்ளிக்கூடங்கள் இப்பொழுது தான் ஏற்படுத்தப்பட்டு வருகின்றன. அவைகளும் ஆங்கிலத்தில் குறைந்தது ஸ்கூல் பயினல் (School final) வரை படித்த மாணக்கர்களுக்கே உபயோகப்படுகின்றன அப்படிப் படித்தவர்கள் ஆங்கிலேய ஸம்பந்தமான, பாங்கி வர்த்தகசாலை முதலிய இடங்களில் வேலையை அபேக்ஷிப்பார்களேயன்றி நம் தமிழ் நாட்டுக்கடைகளில் ஏன் அபேக்ஷிப்பார்கள்?

அப்படி அபேக்ஷித்தாலும் நமது தமிழ் நாட்டுக் கடைகளின் வேலைகளைப் பொறுப்பேற்று நடத்துவது அவர்களுக்கு மிகவும் கஷ்டம்.

அது அப்படியிருக்க, நமது தமிழ்நாட்டுப் பள்ளிக்கூடங்களில் வாசித்த பிள்ளைகளாவது ஷை வேலைகளுக்கு உபயோகப் படுவார்களோ என்றால் அவர்களும் அப்பள்ளிக்கூடங்களில் "மூதுரை" என்னும் பாடத்திற்கு மேல் கற்றுக்கொள்வதே கஷ்டமாய் இருக்கிறது. அப்படியிருக்க வியாபார முறைகளை எப்படிக் கற்றுக்கொள்ளப் போகிறார்கள்? அல்லது வீடுகளிலாவது அவர்கள் பழக இடமுண்டோவென்றால் அதற்குத் தக்க நூல்களும்இல்லை.

மேற்கண்ட காரணங்களால் நம் தமிழ் நாட்டு வர்த்தகர்கள் ஒவ்வொருவருக்கும் சிறுவயது முதல் கடைகளில் இருந்து பழகி சிலகாலம் சம்பளமில்லாமலும் சிலகாலம் மிகச் சொற்ப சம்பளத்திலும் இருந்து வந்து அநேக வருஷங்கள் சென்று ஜாஸ்தியான சம்பளம் வாங்கும்படியான ஸ்திதி வந்திருக்கிறது.

ஆங்கிலேய வர்த்தகர்களுக்கோ அப்படியல்ல. சிறுவர்களுக்கு சுய பாஷை எழுதப்படிக்கத் தெரிந்தவுடனேயே வியாபார ஸம்பந்தமான அடியிற்கண்ட நூல்களைப்படிக்கும் படி செய்து ஷை நூல்களில் பரீக்ஷைகள் ஏற்படுத்தி

ஷெ பரீக்ஷைகளில் தேறினவர்களுக்கு யோக்யதா பத்திரங்கள் கொடுத்து அப்படி யோக்கியதா பத்திரங்கள் பெற்றவர்களையே கடைகளில் அமர்த்தி வியாபாரங்களை நடத்துகிறார்கள்.

ஷெ யார்களுக்குஉபயோகப்படும்படி, கணக்குக்கள் தெரிந்துகொள்ள "வர்த்தகக் கணக்கு" (Commercial Arithmetic) என்னும் புஸ்தகத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

அப்படியே, தபாற்கடிதங்கள் எழுதும்படி கற்றுக்கொள்ள "கம்மர்ஷியல் கரஸ்பாண்டென்ஸ்" (Cormmercial Correspondence) என்னும் புஸ்தகத்தையும்;

வியாபார முறைகளை விபரமாய்த் தெரிந்துகொள்ள, வர்தகப்பயிற்சி நூல் (Commercial Practice and Law) என்னும் புஸ்தகத்தையும்;

வியாபாரத்திற்கு முதன்மையான திரவியத்தை ஸம்பாதிக்கும் வழியையும், செலவழிக்கும் வழியையும், கற்பிப்பதற்கு பொலிட்டிக்கல் எக்கானமி (Political Economy) என்னும் புஸ்தகத்தையும் ; கணக்குக்கள் எழுதிவைத்துக்கொள்ளும் வழியைக் கற்றுக்கொள்ளுவதற்கு "கணக்குப்பதிவு:நூல்" "புக் கீப்பிங்" (Book-keeping) என்னும் புஸ்தகத்தையும்; .

இப்படியெல்லாம் பலவித நூல்களையும் எழுதிவைத்திருக்கிறார்கள்.

அப்படிப்போல நம் தமிழ்நாட்டுக் குழந்தைகள் சுயபாஷையாகிய தமிழைப் பிழையின்றி எழுதவும், படிக்கவும், கற்றுக்கொண்டவுடனே தமிழ்நாட்டு வியாபாரங்களில் பிரவேசிக்கவேண்டும் என்று எண்ணம்கொண்ட சிறுவர்களுக்குப் படிக்க ஸரியான நூல்களும் இல்லை.

வர்த்தகக் கூட்டத்தார்கள் ஸபைகளில் வர்த்தக விஷயங்களில் படித்த பிள்ளைகளைப் பரீக்ஷித்து யோக்யதாபத்திரங்கள் கொடுத்து அவர்களையே வேலையில் அமர்த்துகிறது என்னும் அனுஷ்டானமும் இல்லை.

இவ்வனுஷ்டானம் இல்லாததற்குக் காரணம் நூலில்லாத குறையேயன்றி வேறில்லை.

அப்படி நூல்கள் ஏற்பட்டு அந்நூல்கள் நம் தமிழ்நாட்டு முறையை அனுஸரித்துஎழுதப்பட்டவையானுல், அப்புத்தகங்கள் நம்தமிழ்நாட்டுப் பள்ளிக்கூடங்களில் உள்ள மாணவர்களுக்கும், கடைகளில் வேலைகளில் அமர்ந்திருக்கும் சிறுவர்களுக்கும் இன்றியமையாதனவாய் இருக்கும் என்று என் நண்பர்கள் கேட்டுக்கொண்டபடி வர்த்தகப்பயிற்சி நூல்களை வெளியிடத் துணிந்தேன்.

அப்படி வர்த்தக சம்பந்தமான நூல்களை வெளியிடுவதில் அந்நூல்கள் நமது தமிழ் நாட்டாருடைய நடவடிக்கையை யொட்டியிருக்கவேண்டுவதுடன் ராஜாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் வருமானவரிச் சட்டத்தை அனுஸரித்தும் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் நாம் ஸரியான லாபங்களைத் தெரிந்துகொள்வதுடன் அக்கணக்குக்களைக் கோர்ட்டுகளில் தாக்கல் செய்ய நேர்ந்து அப்படிச் செய்தால் அவைகள் கோர்ட்டாரால் ஒப்புக்கொள்ளப்படக்கூடியனவாயிருக்கும். நம் தமிழ்நாட்டாருடைய கணக்குக்கள் ஸரியான ஏற்பாட்டில் எழுதப்பட்டு வந்தாலும் அவைகளில், வரும்படிகளைத் தனித்தனி பிரித்தும், செலவுகளைத் தனித்தனி பிரித்தும் காட்டுவதில்லை. அக்காரணத்தை யொட்டியே வருமானவரி விதிக்கும் அதிகாரிகள் கணக்குப்படியல்லாமல் உத்தேசமாய் வரிவிதிக்க நேரிடுகிறது.

ஆகையால் "தமிழ்நாட்டுக் கணக்குப்பதிவுநூல்" என்னும் இப்புத்தகம், ஆங்கிலேய வழியை யொட்டியும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களுடைய வழியை அனுஸரித்தும் இதர தமிழ்நாட்டு வர்த்தகர்களுடைய வழியைக் கலந்தும் எளிதான வர்த்தகத் தமிழ்நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இப்புத்தகத்தின் முதல்பாகத்தில் 1 முதல் 6 வரையுள்ள அத்தியாயங்களில் பொதுப்படையாக, சிட்டைக்குறிப்பு, அஸல் குறிப்பு, பெயரேடு, அயன் தொகை, லாபநஷ்டக்கணக்கு இவைகளை விவரித்திருக்கிறேன். மற்ற அத்தியாயங்களிற் சொல்லப்பட்டவைகள் விசேஷமாய் கொடுக்கல் வாங்கல் செய்கிற ரொக்கக் கடைகளுக்கும் பல ஊர்களில் கடைகள் வைத்து நடத்துகிற முதலாளிகளுக்கும் உபயோகப்படக்கூடியவைகளாம்.

இரண்டாவது பாகம் பாதிவரை ஸகலமான வியாபாரிகளுக்கும் குடும்பஸ்தர்களுக்கும் உபயோகப்படக்கூடிய வருமான வரிச்சட்டங்கள் அடங்கியதாம்.

இரண்டாவது பாகக்கடைசியில் பலசரக்குமளிகை, பாத்திரக்கடை, ஜெவுளிக்கடை, புஸ்தகக்கடை, காசுக்கடை, ஷாப்புக்கடை, பல சில்லரைக்கடை, எண்ணெய்க்கடை, மரக்கடை முதலிய கடைகளிலும், ரைஸ்மில், ஸோடாவாட்டர் கம்பெனி, ரெப்ரெஷ்மெண்டுரூம், தங்கவேலைச்சாலை, அச்சுயந்திரசாலை, முதலிய தொழிற்சாலைகளிலும், வருமானவரி சட்டத்தை அனுஸரித்து வைக்கவேண்டிய பெயரேடுகளையும், அவைகளினின்று அஸல் லாபம் இன்னது என்பதைக் கண்டுபிடிக்கும் வழியையும், அந்த லாபத்தொகைக்கு வருமானவரி இன்னது என்று கண்டுபிடிக்கும் வழியையும், நன்கு விளக்கியிருக்கிறது.

மூன்ருவது பாகத்தில் தபால், தந்தி, ரயில்வே, இலாகாக்களின் சட்டங்களையும், சார்ஜ்களையும், மேல்நாட்டாரிடம் வியாபாரம் செய்யும் வழியையும் நன்கு விளக்கியிருக்கிறது.

நான்காவது பாகத்தில் வியாபார ஸம்பந்தமான பல பரீக்ஷை வினுக்கள் அடங்கி யிருக்கின்றன.

இந்நூலையன்றி வர்த்தக ஸம்பந்தமாய்ப் பல நூல்களை வெளியிட எண்ணம் கொண்டிருக்கிறேன். அப்படி வெளியாக்க என்மனது திடப்படும்படி என்னுல் முதலில்வெளியிடப்பட்ட "தமிழ்நாட்டுக் கணக்குப் பதிவுநூல்" என்கிற இம் முதல்நூலை என் நண்பர்கள் ஆதரிப்பார்கள் என்று நம்புகிறேன்.

M. N. S.

நூலாசிரியர்.

# தமிழ்நாட்டுக் கணக்குப் பதிவுநூல்.

## அத்தியாயம், I.

## பீடிகை.

### 1. வரவு செலவு கணக்கு வைத்துக் கொள்வதின் உபயோகம்.

1. வரவுசெலவு கணக்கு வைத்துக்கொள்ளுவதில் பலவிதமான பிரயோஜனங்கள் இருக்கின்றன :—

(a) நம்மால் இன்னின்ன வகையில் இவ்வளவு இவ்வளவு ஸம்பாதிக்கப்பட்டிருக்கிறதென்பது நன்ருய் விளங்கும்.

(b) நம்முடைய செலவுகள் இன்னின்னவகையில் இவ்வளவிவ்வளவு செய்யப்பட்டிருக்கின்றன என்பதை நாம் எளிதில் அறிந்து அதற்குத் தகுந்தபடி குறைத்தோ அதிகப்படுத்தியோ செய்துவரலாம்.

(c) நம்முடைய குடும்பமெம்பர்கள் ஒவ்வொருவர் விஷயத்திலும் இன்னின்ன வகையில் இவ்வளவிவ்வளவு செலவழிக்கப்பட்டிருக்கின்றன, அவர்கள் ஒவ்வொருவரால் இவ்வளவிவ்வளவு வரவு வந்திருக்கின்றன என்பதை செவ்வையாய் அறிந்துகொள்ளலாம்.

(*d*) தர்மவிஷயத்தில் வருஷந்தோறும் நம்மால் உத்தேசிக்கப்பட்ட தொகை ஸரியாய் செலவழிக்கப்படு கிறதா என்பதைக் கவனித்து அதற்குத் தக்கபடி நடந்துவரலாம்.

(*e*) பிறரிடத்தில் நம்மால் வாங்கப்பட்டிருக்கும் கடன்கள், இன்னின்ன தேதிக்கு இன்னின்ன வட்டிக்கு இன்னின்னாரிடத்தில் இவ்வளவிவ்வளவு வாங்கப்பட்டதென்றும் ஷை கடன்களில் இவ்வளவிவ் வளவு செலுத்தப்பட்டிருக்கின்றன என்பதையும் இவ் வளவு பாக்கி என்பதையும் நன்றாய் அறிந்துகொள்ள லாம்.

(*f*) பிறரிடம் நம்மால் கொடுக்கப்பட்டிருக்கும் கடன்கள் விஷயத்திலும் அப்படியே.

(*g*) மிராசுதார்களாய் இருந்தால் இன்னின்ன கிராமங்களில் இன்னின்ன ஸர்வே நம்பர்களுக்கு இவ் வளவிவ்வளவு மராமத்துச் செலவு, விதை கூலிச் செலவு ஸர்க்கார் கிஸ்திச் செலவு அதற்கு இன்னின்ன வரும்படி என்பது நன்றாய் விளங்கும்.

(*h*) வியாபாரிகளாய் இருந்தால் இன்னின்ன வியாபாரங்களில் இவ்வளவிவ்வளவு லாபம் அல்லது நஷ்டம் என்பதைக் கண்டுணரலாம். கடைசியாக கணக்கு மூலமாய் ஒவ்வொரு விஷயங்களையும் செவ் வையாய் நாம் அறிந்துகொள்வதுமாத்திரமல்ல; அவ சியமான காலத்தில் அன்னியர்களுக்கு மெய்ப்பிக்கவும், நமது குடும்பத்தைச் சேர்ந்த பின் வர்ஸ்களுக்குச் செய்யாமற் செய்த உதவியாகவும் இருக்கிறது.

ஆகையால் வரவு செலவு கணக்கை ஒரு குடும்பத்தலைவர் ஸரியாயும் ஒழுங்காயும் வைத்துக்கொண்டால் அக்குடும்பத்தாருக்கும் அக்குடும்பத்தைச் சேர்ந்த அல்லது சம்பந்தப்பட்ட ஒவ்வொருவருக்கும் அளவில்லாத சௌகரியங்கள் ஏற்படுகின்றன.

ஆங்கிலேயர்களும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களும் இக்குடும்பக் கணக்கு வைக்கும் விஷயத்தில் நிரம்பவும் ஊக்கமுடையவர்கள் என்பது எல்லோரும் நன்றாய் அறிந்த விஷயம். அக்காரணத்தைக் கொண்டே மேற்கண்ட வகுப்பினர்களிடத்தில் கடித மூலமாகவே கொடுக்கல் வாங்கல் செய்கிறார்கள்.

இதரர்களிடத்தில் கொடுக்கல் வாங்கல் செய்வதானால், பிராமிசரிநோட்டு என்றும், பந்தகக் கடன் பத்திரமென்றும் இப்படியெல்லாம் எழுதுவதும் தவிர சாக்ஷிக் கையெழுத்துகளும் அதிகமாய்ப் போடப்பட வேண்டும் என்றும் சொல்லுகிறார்கள். இதற்குக் காரணம் கணக்கில்லை என்னும் காரணத்தைத்தவிர வேறில்லை. ஆகையால்தான் கொடுக்கல் வாங்கல் செய்து லாபத்தையடைய இதரர்களுக்கு இடமில்லாமல் இருக்கிறது.

ஆங்கிலேய குழந்தைகளும் நாட்டுக்கோட்டை நகரத்தார் குழந்தைகளும் தின்பண்ட விஷயங்களிற் கூட கணக்குப்பண்ணி வைத்துக்கொள்ளுவதாய்ச் சொல்லப்படுகிறது. வருமான வரிவிதிக்கும் அதிகாரிகளும் ஆங்கிலேயர்களுடைய கணக்கின்படிக்குள்ள செலவு நீக்கி வரும்படிக்குள்ளாகும் தொகைக்கே வருமான வரிவிதித்து விடுகிறார்கள்.

நம்மவர்களுக்கோ கணக்கு வைத்துக்கொள் ளாதவர்களிடம் மாத்திரமல்ல கணக்கு வைத்துக் கொண்டிருப்பவர்களிடமுங்கூட அக்கணக்குகள் சரி யாய் வைக்கப்படாமையால் உத்தேசமாகத் தங்களுக் குத் தோன்றும் வரியை விதித்துவிடுகிறார்கள். அப் படி விதிக்கப்படும் வரி நமது வருமானத்திற் கேற் படும் வரியைவிட ஒருபொழுதும் குறைந்து ஏற்படவே மாட்டாது. ஆகையால் கணக்கு வைத்துக்கொள்ளா மல் இருந்தால் வருமானவரி ஜாஸ்தியாய் விதிக்கப்பட மாட்டாது என்று நினைப்பவர்களுக்குக்கூட கணக்கு வைத்துக்கொள்ளுவதுதான் நன்மை என்று ஏற்படு கிறது.

அப்படி வைத்துக்கொள்ளாத விஷயத்தில் வரு மான வரி விதிக்கும் அதிகாரிகளுக்குக் கஷ்டத்தை யும் காலதாமதத்தையும் உண்டுபண்ணுவதாய் ஏற் படுமேயல்லாது அவர்களுக்கு லாபத்தை ஒருபொழு தும் உண்டாக்கமாட்டாது.

ஆகையால் எந்த வழியில் பார்த்தாலும் வரவு செலவு கணக்கு வைத்துக்கொள்ளவேண்டியதுதான் நலம் என்று ஏற்படுகிறது.

## 2. வரவு செலவு கணக்கு வைத்துக் கொள்ளும் விதம்.

வரவு செலவு கணக்கு வைத்துக்கொள்ளுவதில் ஆங்கிலேயர்களின் வழி ஒருவிதமும் நாட்டுக்கோட் டை நகரத்தார்களின் வழி ஒருவிதமுமாய் இருக்கின் றன.

இரண்டு வழிகளும் சரியானவைகள் என்றாலும் தமிழ்நாட்டார் ஆங்கிலேய வழியையொட்டி நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் வழியிலேயே கணக்கு வைத்துக்கொள்ளுவது சுலபமாயும் மேன்மையுள்ள தாயும் இருக்கிறது.

அப்படி வைத்துக்கொள்ளவேண்டிய வழிகள் இன்னின்ன விதம் என்பதை விளக்குவோம் :—

(a) கணக்கு எழுதுவது சுலபமான வழியா யிருக்கவேண்டும்.

(b) யார் அல்லது எந்தக் கணக்கில் என்ன பாக்கியென்று கேட்டால் உடனே தாமதியாமல் கண்டு பிடிக்கக்கூடியவைகளாய் இருக்கவேண்டும்.

(c) எத்தனை வருஷத்துக் கணக்கை கவர்ன் மெண்டார் பரிசோதித்தாலும் அப்போதைக்கப்போது எழுதினதல்லாமல் பின்னிட்டு யோஜித்து எழுதப்பட் டது அல்ல என்று நன்கு மதிக்கக்கூடியதாய் இருக்க வேண்டும்.

(d) குமஸ்தாக்களேயும் ஏஜண்டுகளேயும் வைத் துக் கணக்குகள் எழுதவேண்டிய வீடுகளில் அவர்க ளால் ஒன்று எழுதப்பட்டு அதை மாற்றி வேறு எழு தப்பட்டிருந்தால் அதை அவ்வீட்டு எஜமானர் எளி தில் கண்டுபிடிக்கக்கூடியதாய் இருக்கவேண்டும்.

(e) ஒவ்வொரு குடும்பத்திலும் வருஷாவரு ஷம் இன்னின்ன வகையில் இவ்வளவிவ்வளவு ஆதா யம் என்பதைத் தனித்தனி கண்டுபிடிக்கக்கூடியதாய் இருக்கவேண்டும்.

(*f*) அந்தந்த இனங்களில் வரும் ஆதாயம் அந்தந்தப் பெயரேடுகளில் சேர்க்கப்பட்டு அதற்கு நேரிடும் செலவை அததிலேயே கழிக்கக்கூடியதாயிருக்கவேண்டும்.

ஆகையால் மேற்கண்டவிதமாய் கணக்கு எழுதி வந்தால் வருமானவரி விதிக்கும் அதிகாரிகளும், கோர்ட்டாரும் தகராலன்னியில் ஒப்புக்கொள்ளுவார்கள்.

**3. கணக்குகள் சரியாய் எழுதிவர ஏற்படுத்திக்கொள்ளவேண்டிய புஸ்தகங்கள்.**

(*a*) சிட்டைக் குறிப்பு. இதற்குப் படுகுறிப்பு என்றும் சொல்லுவதுண்டு. ஆங்கிலேயத்தில் இதற்கு வேஸ்டு புக்கு (Waste Book) என்று பெயர்.

(*b*) அஸல் குறிப்பு. இதற்கு ஆங்கிலேயத்தில் ஜர்னல் (Journal) என்று பெயர்.

(*c*) பெயரேடு. (Ledger லட்ஜர்.)

(*d*) அயன் தொகைப் புஸ்தகம். (Balance Sheet.)

(*e*) லாப நஷ்டக்கணக்கு. (Profit or Loss.)

(*f*) அட்டவணைப் புஸ்தகம். (Index Book.)

(*g*) அனுப்புத் தபால் காப்பிப் புஸ்தகம். (Copying Book.)

(*h*) வரவு தாபால் பயில் புஸ்தகம். (File Book of received letters.)

(*i*) தபால் அனுப்பு வரவு புஸ்தகம். (Letter Despatching and Receiving Book.)

(*j*) உண்டியல் அனுப்பு வரவு புஸ்தகம். (Hundial Despatching and Receiving Book.)

(*k*) கைச்சாற்று வவுச்சர் பயில் புஸ்தகம். (Voucher File.)

(*l*) உண்டியல் புஸ்தகம். (Hundiyal Book.)

(*m*) செக்குப் புஸ்தகம். (Cheque Book.)

(*n*) கரன்ஸி நோட்டுப் பதிவு புஸ்தகம் (Currency Note Book.)

ஷை புஸ்தகங்களில் பக்கத்திற்குப் பக்கம் தொடர்ச்சி நம்பர் அச்சிடப்பட்டதாய் இருக்கவேண்டும்.

## 4. புஸ்தகங்கள் இருக்கவேண்டிய விதமும் அவைகளில் எழுதவேண்டியவைகளும்.

(*a*) சிட்டைக் குறிப்பு.

ஒவ்வொரு பக்கங்களிலும் தலைவரிசை எழுத ஒரு கோடுபோட்டதாயிருக்கவேண்டும். ஒவ்வொரு பக்கத்திலும் 4 கலங்கள் ஏற்பட்டிருக்கவேண்டும்.

ஷை தலைவரிசைக் கோட்டில் இன்ன வருஷம் இன்ன மாதம் தேதி முதல் சிட்டைக் குறிப்பு என்று எழுதப்படவேண்டும்.

முதலாவது கலம் வருஷம், மாதம் தேதி. இக் கலத்தில் கணக்கு எழுதப்படும் வருஷம் மாதம் தேதி இவைகளைப்போடவேண்டும்.

இரண்டாவது விபரம் என்ற கலத்தில், முதற் கலத்தில் கண்ட தேதியின் கணக்கு, இன்னின்ன

வகையில் இன்னார் பெயரால் இன்ன காரணத்திற்காக என்ற விபரம் எழுதப்படவேண்டும்.

மூன்றாவது கலம் பற்று ரூ. அ. பை. இக்கலத்தில் இரண்டாவது கலத்தில் கண்ட கணக்கு பற்று அயிட்டமானால் இதில் அத்தொகையைப் போடவேண்டும்.

நான்காவது கலம் வரவு ரூ. அ. பை. இக்கலத்தில் இரண்டாவது கலத்தில் கண்ட கணக்கு வரவு அயிட்டமானால் அத்தொகையை இதிற் போடவேண்டும்.

ஆக நான்கு கலங்களிலும் மூன்று கலங்கள் தான் எழுதப்பட்டிருக்கும், பற்று கலமாவது வரவு கலமாவது விடப்பட்டிருக்கும்.

(b) அஸல் குறிப்பு.

இப்புத்தகமும் தலைவரிசை எழுத ஒரு கோடு போட்டதாயும் 4 கலங்கள் உள்ளதாயும் இருக்கவேண்டும்.

இன்ன வருஷம் இன்ன மாதம் இன்ன தேதி முதல் குறிப்பு என்று தலைவரிசையில் எழுதப்படவேண்டும்.

முதலாவது கலத்தில் சிட்டைக்குறிப்பிற்கண்ட வருஷம் மாதம் தேதியைப் போடவேண்டும்.

இரண்டாவது கலத்தில் ஷெ தேதியில் உள்ள கணக்கு விபரத்தை எழுதவேண்டும்.

மூன்றாவது கலத்தில் இரண்டாவது கலத்திற் கண்ட கணக்கு பற்று அயிட்டமானல் இதிற் போடவேண்டும்

நான்காவது கலம் வரவு; இரண்டாவது கலத்திற் கண்ட கணக்கு வரவு அயிட்டமானல் அத்தொகையை இதிற் போடவேண்டும்.

இப்புத்தகத்திலும் நான்கு கலங்கள் உள்ளவைகளில் மூன்று கலங்கள் தான் எழுதப்பட்டிருக்கும். பற்று கலமாவது வரவு கலமாவது விடப்பட்டிருக்கும். வேண்டுமானல் பெயரேட்டுப் பக்கத்தையும் முதற் கலத்திலேயே போட்டுக்கொள்ளலாம்.

(c) பெயரேடு.

இந்தப் புஸ்தகத்திற்கும் மேலேகண்டபடி ஒரு தலைவரிசைக்கோடும் 4 கலங்களும் தான் ஏற்பட்டிருக்கும்.

ஷை தலை வரிசையில் இன்ன அல்லது இன்னர் பற்று வரவு என்று போடவேண்டும்.

முதலாவது கலத்தில் வருஷம் மாதம் தேதி.

இதில் அஸல் குறிப்பில் எழுதப்பட்டிருக்கும் ஒவ்வொரு கணக்குகளின் வருஷம் மாதம் தேதியைப் போடவேண்டும்.

இரண்டாவது கலம் விபரம்.

இதில் முதலாவது கலத்தில் உள்ள தேதியில் இதின் தலைவரிசையில் உள்ள பெயரால் உள்ள கணக்குகளை எழுதவேண்டும்.

மூன்ருவது கலம் பற்று ரூ. அ. பை.

இதில் இரண்டாவதுகலத்திற் கண்ட கணக்கு பற்று அயிட்டமானல் இதிற் போடவேண்டும்.

நான்காவது கலம் வரவு ரூ. அ. பை.

இதில் இரண்டாவது கலத்திற் கண்ட கணக்கு வரவு அயிட்டமானால் இதிற் போடவேண்டும்.

இப்புத்தகத்திலும் ஒவ்வொரு கணக்குகளுக்கும் மூன்று கலங்கள் தான் எழுதப்படும். பற்று கலமாவது வரவு கலமாவது ஒன்று பாக்கிப்படும்.

(*d*) அயன் தொகைப் புஸ்தகம்.

இதிலும் தலைவரிசைக் கோடுபோடப்பட்டதாயும் நான்கு கலங்கள் ஏற்பட்டதாயும் இருக்கவேண்டும். தலைவரிசையில் இன்ன வருஷம் இன்ன மாதம் 31 தேதி வரை அயன் தொகையென்று எழுதவேண்டும்.

முதலாவது பெயரேட்டுப் பக்கம் இதில் பெயரேட்டில் எந்தப்பக்கத்தில் கடைசி மொத்தத் தொகை கட்டப்பட்டிருக்கிறதோ அந்தப் பக்கத்தின் நம்பரை எழுதவேண்டும்.

இரண்டாவது கலம் விபரம்.

இதில் முதலாவது கலத்திற்கண்ட பக்கத்தின் பெயரேட்டின் பெயரை எழுதவேண்டும்.

மூன்றாவது கலம் பற்று ரூ. அ. பை.

இதில் இரண்டாவது கலத்திற்கண்ட பெயராலுள்ளதில் உள்ள பற்றுத் தொகையைப் போடவேண்டும்.

நான்காவது கலம் வரவு ரூ. அ. பை

இதில் இரண்டாவது கலத்திற்கண்ட பெயராலுள்ள ஏட்டின் வரவு தொகையைப் போடவேண்டும்.

ஆனால் ஒரு பெயரால், பற்று, வரவு, இரண்டு அயிட்டமும் உண்டானால், கழித்துக் கட்டாமல் பற்று வரவு இரண்டு தொகையையும் போடவேண்டும் அதின் காரணத்தைப் பின்னால் விளக்குவோம்.

(e) லாப நஷ்டக் கணக்கு.

இக்கணக்கு வருஷத்தில் ஒரு முறைதான் எடுக்கப்படும் ஒவ்வொரு வருஷமும் மார்ச்சுமீ 31உ யோடு தான் வருமானவரி விதிக்கிறார்கள். பஸலியும் அப்பொழுதுதான் முடிகிறது ஆகையால் ஒவ்வொரு வருஷமும் லாப நஷ்டக்கணக்கு மார்ச்சுமீ 31உ யோடு ஏற்படுத்துவதுதான் எல்லா விஷயங்களுக்கும் ஸௌகரியமாய் இருக்கும். இக்கணக்கின் தலை வரிசையில் ஒரு கோடுண்டு. ஷை கோட்டில் இன்ன வருஷம் ஏப்பிரல்மீ 1உமுதல் அதற்கடுத்த வருஷம் மார்ச்சுமீ 31உ வரை லாப நஷ்டக் கணக்கு என்று எழுதவேண்டும். இதற்கு 4 கலங்கள் ஏற்படுத்தப் படவேண்டும்.

முதலாவது கலம் பெயரேட்டுப் பக்கம்.

இதில் அயன் தொகையில் கண்டபடிக்குள்ள பெயரேட்டுப்பக்கங்களைப் போடவேண்டும்.

இரண்டாவது கலம் வரவு செலவு விபரம்.

இதில் முதலாவது கலத்திற்கண்ட பக்கத்தினுடைய வரவு செலவுகளைப் பதியவேண்டும்.

மூன்றாவது கலம் பற்று தொகை.

இதில் இரண்டாவது கலத்திற்கண்ட விபரம் பற்று தொகையானால் இதில் பதியவேண்டும்.

நான்காவது கலம் வரவு தொகை.

இதில் இரண்டாவது கலத்திற்கண்ட கணக்கு வரவுதொகையானல் இதிற் போடவேண்டும்.

(*f*) அட்டவணைப் புஸ்தகம்.

இதிலும் முன் சொன்னபடியே தலைவரிசைக் கோடு இருக்கவேண்டும் (*d*) அயன் தொகைப் புத்தகத்திற்கண்டபடி இன்னவருஷம் இன்ன மாதம் இந்தத் தேதி முதல் அட்டவணை என்று எழுதவேண்டும் இதற்கு இரண்டு கலங்கள்தான் உள்ளது.

முதலாவது கலம் பெயரேட்டுப்பக்கம் இதில் அயன் தொகையிற் கண்டபடிக்குள்ள பெயரேட்டைப் போடவேண்டும்.

இரண்டாவது கலம் பெயரேடு இதில் முதற் பக்கத்திற்கண்ட கணக்கு எந்தப்பெயரேடோ அதைப் போடவேண்டும்.

இதுவரையில் சொன்ன 6 புஸ்தகங்கள்தான் ஒவ்வொரு வீட்டிற்கும் கடைகளுக்கும் அவசியமானவைகள். பல ஊர்களில் சொந்தக்கடைகள்வைத்துக் கொண்டும் இதர ஊர்களிலுள்ள அன்னியகடைகளில் பற்று வரவு செய்து கொண்டும் இருப்பவர்களுக்கு அடியிற்கண்ட புஸ்தகங்களும் வேண்டும்.

(*g*) அனுப்புத் தபால் காப்பிப் புஸ்தகம்.

இதில் வியாபார ஸம்பந்தமாய் எழுதப்படும் ஒவ்வொரு கடிதங்களையும் இதில் காப்பியெடுக்க வேண்டும். இப்புஸ்தகம் லேசான கடிதங்களுள்ளதாயும் பக்கங்கள் போட்டதாயும் இருக்கவேண்டும். எழுதப்

படும் ஒவ்வொரு கடிதங்களையும் காப்பி மை என்கிற ஒரு வித மையினால் எழுதிக் காப்பி எடுக்கவேண்டும். இதை பின்னால் விளக்குவோம்.

(h) வரவு தபால் பயில் புஸ்தகம்.

இப்புஸ்தகம் கெட்டியான அட்டையில் செய்யப்பட்டு துண்டுக் காகிதங்கள் மாத்திரம் வைத்துத்தைக் கப்பட்டிருக்கவேண்டும் இதில் வெளியூரில் இருந்தும் உள்ளூரில் இருந்தும் வரும் கடிதங்களை தேதி வாரியாய் ஒட்டிவைக்கவேண்டும் ஆனால் சில கடைகளிலும் வீடுகளிலும் இப்புஸ்தகம் இல்லாமலேயே வந்த கடிதங்களை உரையுடன் கட்டிவைப்பதுண்டு.

(i) தபால் அனுப்பு வரவு புஸ்தகம்.

இது இரண்டு பாகங்களாகும்.

முதல் பாகத்தில் 6 கலங்கள் இருக்கவேண்டும்.

முதற்கலத்தில், தபால் நம்பர், இரண்டாவது கலத்தில் தபால் எழுதப்பட்டதேதி, மூன்றாவது கலத்தில்போஸ்ட் செய்ததேதி, நான்காவது கலத்தில் இன்ன ஊருக்கு, ஐந்தாவது கலத்தில் இன்னாருக்கு, ஆறாவது கலத்தில் காப்பிப் புஸ்தகத்தில் காப்பியெடுக்கப்பட்ட பக்கத்தின் நம்பர். இவைகளை எழுத வேண்டும்

இதின் தலைவரிசையில் இன்ன வருஷம் மாதம் முதல் தபால் அனுப்புவிபரம் என்று எழுதவேண்டும்.

இரண்டாவது பாகம் வரவு தபால் விபரம்.

இதின் தலைவரிசையில் இன்ன வருஷம் இன்ன மாதம் இத்தனாம் தேதி முதல் வரவு தபால் விபரம் என்று எழுதவேண்டும். இதற்கு 6 கலங்கள் இருக்க

வேண்டும். முதற்கலத்தில் கிடைத்த கடிதத்தின் நம்பர், இரண்டாவது கலத்தில் கடிதம் எழுதப்பட்ட தேதி, மூன்றாவது கலத்தில் கடிதம் கிடைத்ததேதி, நான்காவது கலத்தில் இன்ன ஊரில் இருந்து ஐந்தாவது கலத்தில் இன்னாரிட மிருந்து, ஆறாவது கலத்தில் ஷை தபாலுக்கு பதில் எழுதிய கடிதத்தின் நம்பர். இவைகளை எழுத வேண்டும்.

(j) உண்டியல் அனுப்பு வரவு புஸ்தகம்.

இதில் ஒவ்வொரு கடைகளுக்கும் எழுதிக்கொடுக்கும் உண்டியல்களையும், இவ்விடமிருந்து வாங்கி அனுப்பும் உண்டியல்களையும், வெளியூரில் இருந்து எழுதிவரும் உண்டியல்களையும், வெளியூரில் இருந்து வாங்கிவரும் உண்டியல்களையும் பதியவேண்டும். இப்புஸ்தகம் நான்கு பாகங்களாகப் பிரிக்கப்படவேண்டும்.

முதல் பாகம்.

தலைவரிசைக்கோடு போட்டதாயும் 9 கலங்கள் உள்ளதாயும் இருக்கவேண்டும்.

தலைவரிசைக்கோட்டில் இன்னதேதிமுதல் எழுதிக்கொடுக்கப்பட்ட உண்டியல் விபரம் என்று எழுத வேண்டும்.

முதற்கலத்தில் உண்டியல் நம்பர், இரண்டாவது கலத்தில் உண்டியல் எழுதப்பட்ட தேதி, மூன்றாவது கலத்தில் இன்ன ஊருக்கு, நான்காவது கலத்தில் பணம் கொடுப்பவர் பெயர், ஐந்தாவது கலத்தில் இன்னார் பெயருக்கு, ஆறும் கலத்தில் ஆர்டர் அல்லது பேரர், ஏழாம் கலத்தில் தரிசனையா வட்டியா, எட்டாம் கலத்தில் தொகை, ஒன்பதாம் கலத்தில் பணம் கொடுக்

கும்படி தாக்கல் எழுதிய லெட்டர் நம்பர். இவைகளை எழுத வேண்டும்.

இரண்டாவது பாகம்.

தலைவரிசைக் கோடுபோட்டதாயும் 11 கலங்கள் உள்ளதாயும் இருக்கவேண்டும்.

தலைவரிசைக் கோட்டில் இன்ன தேதி முதல் இவ்விடமிருந்து வாங்கி அனுப்பிய உண்டியல் விபரம் என்று எழுத வேண்டும்.

முதற்கலத்தில் உண்டியல் கொண்டு வந்தவர் பெயர், இரண்டாவது கலத்தில் உண்டியல் நம்பர், மூன்றாவது கலத்தில் உண்டியல் பிறந்த தேதி, நான்காவது கலத்தில் உண்டியலில் கையெழுத்துப்போட்டவர் பெயரும் ஊரும், ஐந்தாவது கலத்தில் பணம் கொடுபடவேண்டிய ஊரும் கொடுப்பவர் பெயரும், ஆறாவது கலத்தில் இன்னார் பெயருக்கு, ஏழாவது கலத்தில் ஆர்டர் அல்லது பேரர், எட்டாவது கலத்தில் தரிசனையா வட்டியா, ஒன்பதாவது கலத்தில் தொகை, பத்தாவது கலத்தில் அனுப்பபட்ட ஊரும் பெயரும், பதினோராவது கலத்தில் இன்ன நம்பருள்ள லெட்டருடன் அனுப்பப்பட்டது. என்ற இவ்விபரங்களை எழுத வேண்டும்.

மூன்றாவது பாகம்.

தலைவரிசைக்கோடு போட்டதாயும் 9 கலங்கள் உள்ளதாயும் இருக்கவேண்டும், தலைவரிசைக்கோட்டில் இன்ன தேதி முதல் இதர கடைகளில் இருந்தும் பற்று வரவுகாரர்களிடமிருந்தும் நாம் பணம் கொடுக்

கும்பாடி வந்த உண்டியல்கள் விபரம் என்று எழுத வேண்டும்.

முதலாவது கலத்தில் உண்டியல் நம்பர், இரண்டாவது கலத்தில் உண்டியல் தேதி, மூன்றுவது கலத்தில் எழுதிக்கொடுத்தவர் ஊரும் பெயரும், நான்காவது கலத்தில் இன்னூர் பெயருக்கு, ஐந்தாவது கலத்தில் தரிசனையா வட்டியா, ஆறாவது கலத்தில் ஆர்டர் அல்லது பேரர், ஏழாவது கலத்தில் தொகை, எட்டாவது கலத்தில் பணம் கொடுத்த தேதி, ஒன்பதாவது கலத்தில் கொடுத்த தொகை. இவைகளை வரிசைக் கிரமமாய் எழுத வேண்டும்.

நான்காவது பாகம்.

தலைவரிசைக்கோடு போட்டதாயும் 13 கலங்களுள்ளதாயும் இருக்கவேண்டும்.

தலைவரிசையில் இன்ன தேதி முதல் இதாகடைகளில் இருந்தும் பற்று வரவுகாரர்களிடமிருந்தும் வந்த உண்டியல்கள் விபரம் என்று எழுத வேண்டும்.

முதலாவது கலத்தில் அனுப்பியவர் ஊரும் பெயரும், இரண்டாவது கலத்தில் உண்டியல் நம்பர், மூன்றுவது கலத்தில் உண்டியல் பிறந்த தேதி, நான்காவது கலத்தில் கையெழுத்துப் போட்டவர் பெயரும் ஊரும், ஐந்தாவது கலத்தில் பணம் கொடுப்பவர் ஊரும் பெயரும், ஆறுவது கலத்தில் இன்னூர் பெயருக்கு, ஏழாவது கலத்தில் ஆர்டர் அல்லது பேரர், எட்டாம் கலத்தில் தரிசனையா வட்டியா, ஒன்பதாவதில் தொகை, பத்தாவதில் தொகை வரவு தேதி பதினோராவது கலத்தில் வரவு தொகை பன்னிரண்

டாவது கலத்தில் வேறு ஊருக்கு அனுப்பப்பட்ட ஊரும்பெயரும், பதிமூன்றாவது கலத்தில் இன்ன லெட்டருடன் அனுப்பப்பட்டது, என்ற இவைகளை எழுதவேண்டும்.

(*k*) கைச்சாற்று வவுச்சர் பயில் புஸ்தகம்.

இதில் கைச்சாற்றுகளையும் வவுச்சர்களையும் (*h*) நம்பர் புஸ்தகம் போலொத்த இப்புஸ்தகத்தில் பயில் செய்யவேண்டும்.

(*l*) உண்டியல் புஸ்தகம்.

இப்புஸ்தகம் இரண்டு பாகங்களாக அச்சுப்போடப்பட்டிருக்க வேண்டியது. ஒவ்வொரு பக்கத்திலும் வலது பக்கத்தில் ஒரு பாகமாகவும் இடது பக்கத்தில் ஒரு பாகமாகவும் இருக்கவேண்டியது.

வலது பாகத்தில் உண்டியல் விபரம் எழுதப்படவேண்டும். இடது பாகம் தான் உண்டியல்; இதில் I அணு ஸ்டாம்பு ஒட்டவேண்டியது. கையெழுத்துப் போட்டவுடனே இடது பாகத்தை மாத்திரம் கிழித்து ஆஸாமிகளிடம் கொடுக்கவேண்டியது. வலது பாகம் நகல்களாகப் புஸ்தகத்திலேயே இருக்கவேண்டியது. இதன் மற்ற விபரங்களை உண்டியல் புஸ்தக விளக்கம் என்ற அதிகாரத்தில் காட்டுவோம்.

(*m*) செக்குப் புஸ்தகம்.

இதுவும் மேற்சொன்னபடி இரண்டு பாகங்களாகத்தான் அச்சிடப்பட்டிருக்கும். இப்புஸ்தகம் பாங்கிகளால் பணம்கட்டியிருப்பவர்களுக்கு ஸப்ளை செய்யப்படும். உண்டியலைப் போலவே ஒரு அணு முத்திரை

அடிக்கப்பட்டிருக்கும். வலதுபாகத்தில் செக்கினுடைய விபரம் எழுதப்பட்டிருக்கும். இடதுபாகம்தான் செக்கு. இதில் தொகைமுதலியவைகளை எழுதி, கையெழுத்திட்டுக்கிழித்து ஆஸாமிகளிடம் கொடுக்கவேண்டியது. இதின் இதர விபரங்களைச் செக்குப்புஸ்தக விளக்கம் என்னும் அதிகாரத்தில் விளக்குவோம்.

(n) கர்ரேன்ஸி நோட்டுப் பதிவு புஸ்தகம்.

இப்புஸ்தகத்தில் இன்னதேதிமுதல் கர்ரென்ஸி நோட்டு வரவு செலவு என்று தலைவரிசைக் கோட்டில் எழுதப்படவேண்டும். இதில் 8 கலங்கள் இருக்கவேண்டும். முதல்கலத்தில் நோட்டின் நம்பர், இரண்டாவது கலத்தில் நோட்டின் தேதி, மூன்றுவது கலத்தில் தொகை, நான்காவது கலத்தில் இன்ன ஊர்நோட்டு, ஐந்துவாது கலத்தில் இன்னஊர் இன்னரிடமிருந்து வாங்கினது, ஆறுவது கலத்தில் நோட்டுக் கிடைத்த தேதி, ஏழாவது கலத்தில் நோட்டுச் செலவான தேதி, எட்டாம் கலத்தில் இன்ன ஊர் இன்னருக்கு அனுப்பப்பட்டது, என்று இவைகளை எழுதவேண்டும்.



## அத்தியாயம், II.



## சிட்டைக் குறிப்பு விளக்கம்.

### 1. தேதி வாரியாய் எழுதுவது.

இந்தச் சிட்டைக் குறிப்புப் புஸ்தகத்தில் ஒரு பதிவு கணக்குகளையும், ஒவ்வொரு மாதமும் 31௳ வரை அவசியமாயுள்ள இருபதிவு கணக்குகளையும் தேதிவாரியாய் எழுத வேண்டும். இதரகடைக ளில் இருந்தும் பற்று வரவு காரர்களிடம் இருந்தும் முடித்து அனுப்பப்பட்டுவரும் கணக்குகள் இருபதிவு செய்யப்பட வேண்டியவைகளாயிருந்தாலும் இச்சிட் டைக் குறிப்பில் அவசியம் எழுதப்படவேண்டியவைக ளல்ல. அஸல் குறிப்பில் தாக்கல் செய்தால் போது மானது. ஒவ்வொரு மாஸமும் முதல்தேதி முதல் 31௳ வரை ஸகல கொடுக்கல் வாங்கல் வரவு செலவு இவை களைத் தேதி வாரியாய் அப்போதைக்கப்போது எழுத வேண்டும். அப்படித் தேதிவாரியாய் எழுத விட்டுப் போனகணக்குகள் ஏற்பட்டால், தேதிகலத்தில் கணக்கு எழுதப்பட்ட தேதியைப்போட்டு விபரத்தில் இன்ன தேதியாக என்று எழுத வேண்டும்.

### 2. கணக்கு எழுதிப் பணம் எடுப்பது போடுவது.

ஒருவருக்கு ஒருதொகையைக் கொடுத்து, அல் லது ஒருவரிடமிருந்து ஒரு தொகையை வாங்கி, அப் பால் கணக்கு எழுதுவோம் என்று விட்டுவிடுவது முற் றிலும் பிசகு. கணக்கு எழுதாமல் பெட்டியில் பணம்

போடவாவது எடுக்கவாவது செய்யும் வழக்கம் எப்பொழுதும் திட்டக்கசகலேக் கொண்டு வந்துவிடும். ஆகையால் கணக்கு எழுதிப்பணம் எடுக்கும் போடும் வழக்கத்தையே பின்பற்றவேண்டும்.

### 3. பற்று எழுதுவது வரவு வைப்பது.

ஒவ்வொரு கணக்குகளும் தேதியுடனும் விபரத்துடனும் இருக்கவேண்டும்.

" அண்ணுஸாமி அய்யர் பற்று ரூ 50" என்பதுபோல் எழுதப்படும் கணக்கு ஒருபொழுதும் பிரயோஜனப்படமாட்டாது. இதில் இன்னவருஷம் இன்ன மீ௳ இன்னதேதி. "அண்ணுஸாமி அய்யர் பற்று ரூ 50" என்ருவது அல்லது இன்னவட்டிக்கு பிராமிசரி நோட்டு, பந்தகக்கடன்பத்திரம், வெண்ணலேப்பத்திரம் என்ருவது எழுதவேண்டும். வீட்டிற்கு ஸாப்பாட்டுக்கு நெல் ரூ 50க்கு வாங்கினதாய் வைத்துக்கொள்ளுவோம். இதற்கு "நெல் ரூ 50" என்று எழுதக்கூடாது. ஆனுல் இன்ன வருஷம் மாதம் தேதி "ஸாப்பாட்டுக் கணக்குப்பற்று இன்னுன் வசம் வாங்கிய நெல்லு கலம் 25க்கு கலம் ஒன்றுக்கு ரூ 2 ஆகப்பற்று ரூ 50" என்று எழுதவேண்டும்.

நம்மிடம் பந்தகப்பத்திரத்தின் பேரில் ராமஸ்வாமி அய்யர் என்ற ஒருவர் ரூ 500 கடன்வாங்கியிருப்பதாய் வைத்துக் கொள்வோம். ஷை கடன் பத்திரத்திற்கு வருஷ முடிவில் ஷை ராமஸ்வாமி அய்யர் ரூ 200 அஸலுக்காகவும் ரூபாய் 60 வட்டிக்காகவும் கொடுத்ததாய் வைத்துக்கொள்வோம்.

இந்த இடத்தில் "ராமஸ்வாமி அய்யர் வரவு ரூ 260" என்று எழுதக்கூடாது.

ஆனால் "இன்ன வருஷம் மாதம் தேதி ராம ஸ்வாமி அய்யர் வரவு 500 ரூ பந்தகக்கடன் பத்திரத் திற்கு அஸலுக்கு ரூ 200ம் வட்டிக்கு ரூ 60ம் ஆக வரவு ரூ 260" என்று எழுதவேண்டும்.

## 4. கைமாற்றுப் பற்று எழுதுவது.

கைமாற்று என்பது ஒருவருக் கொருவர் வட்டி யில்லாமல் பற்று வரவு செய்து கொள்ளுவது. அப்படி பற்று வரவு செய்து கொள்ளப்படும் தொகை நாள்பட நின்றுவிட்டால் . அதற்கு வட்டியுண்டு. இது பெரும்பாலும் பற்று வரவு காரர்களுடைய அபிப்பிராயத்தைப் பொறுத்தது. இக்கணக்குகளை அஸல் குறிப்பில் எழுதுவதில்லை. எழுதினல் பெயரேட்டில் பதிய வேண்டும். பெயரேட் டில் பதியப்பட்டால் வட்டியுண்டு. ஆகையால் இக் கைமாற்றுக் கணக்குகளை சிட்டையிலேயே வைத்து விடவேண்டும். ஒருமாதக்கணக்கு முடிந்து அஸல் குறிப்பு எழுதும்பொழுது இக்கைமாற்றுக்கணக்கு மறுமாதச் சிட்டையில் "குறிப்பு இருப்புத்தொகை" எழுதினவுடன் அதற்குக் கீழ் இக்கைமாற்றுப் பற்று வரவுகளை எழுதி அதற்குக் கீழ் இருப்புத் தொகைகட்டவேண்டும். அப்படிக் கட்டின தொகை யும் முன்மாதச் சிட்டைக்கடைசியில் இருப்புக்கட்டி யிருக்கும் தொகையும் ஒரு தொகையாய்வந்ததாஎன்று பார்க்கவேண்டும். இக்காரணங்களை உத்தேசித்தே, இச்சிட்டைக் குறிப்புப்புத்தகம் வைக்கவேண்டியிருக்

கிறது. இச்சிட்டைக் குறிப்பினல் இன்னும் இரண்டு பிரயோஜனங்கள் இருக்கின்றன.

1. சிலகடைகளில் சிட்டை எழுதிக்கொண்டே வந்து மாதமுடிவில் அஸல் குறிப்பை எழுதிச் சிட்டையில்பாக்கியிருக்கும் பற்று வரவுகளை வேறு துண்டுக் கடிதத்தில் எழுதிக் கொண்டு சிட்டையைக்கிழித்து எறிந்து விடுகிருர்கள். பிறகு கையில் இருக்கும் அஸல் குறிப்போ, பணங்கொடுத்து வாங்கிய காலத்தில் எழுதப்பட்டவைகளல்ல, ஆனல் அப்படி எழுதப்பட்டு கிழிபட்டுப் போனசிட்டையில் இருந்து நகல் செய்யப்பட்ட கணக்காய் ஏற்படுகிறது. அப்போதைக் கப்போது எழுதப்பட்ட கணக்கில்லாமல் நகல் செய்யப்பட்ட கணக்குகளை அதிகாரிகள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள், ஆகையால் பணம் கொடுத்து வாங்கும் பொழுது ஏற்பட்ட சிட்டைக் குறிப்பு அவசியம் வேண்டும்.

2. சிட்டையில் கைமாற்று வாங்கிக் கொண்டு வந்த விபரங்களை, முதலாளிகளாவது, பற்று வரவு காரர்களாவது விபரம் தெரிந்து கொள்ள வேண்டுமானல் சிட்டை அப்பொழுது பிரயோஜனப்படும். ஆகையால் சிட்டைக் குறிப்பு வேண்டியதுதான்.

அ. கு. ம. வசம் ரூ 500 கைமாற்று வாங்கினதாக வைத்துக்கொள்ளுவோம். அதற்கு "அ. கு ம. வரவு கைமாற்று ரூ 500" என்று எழுதவேண்டும்.

சு. அ. ரு. வசம் ரூ 250 கைமாற்றுக் கொடுத்ததாக வைத்துக்கொள்ளுவோம்.

அதற்கு " சு. அ. ரு. பற்று கை மாற்று ரூ 250" என்று எழுதவேண்டும்.

## 5. அட்வான்ஸ் கொடுப்பதைப் பற்று எழுதுவது.

ஒரு ஸாமானே ஸரியான காலத்தில் நமக்குக் கொண்டுவந்து கொடுப்பதற்காகவும் ஒரு வேலையைச் சரியான காலத்தில் செய்து முடிப்பதற்காகவும் (முன் பணம்) அட்வான்ஸ் கொடுத்தால் அப்படிக்கொடுக்கும் தொகைகளைக் கணக்கு எழுதும் பொழுது விபரம் கண்டு கணக்கு எழுதவேண்டும்.

ஒரு தோட்டம் காம்பவுண்டு செய்வதற்காக செங்கல் காளவாய் ராமஸாமியிடத்தில் செங்கல் 1,000 த்துக்கு ரூ 6 ஆகப்பேசி செங்கல் 8,0000 இரண்டு மாதக்கெடுவில் கொண்டுவந்து எண்ணுவதாய் முடிவு செய்துகொண்டு ரூ 100 அட்வான்ஸ் கொடுத்ததாக வைத்துக்கொள்ளுவோம். அதற்கு "செங்கல் காளவாய் ராமஸாமி பற்று செங்கல் அச்சாரம் ரூ 100" என்றாவது "தோட்டப்பற்று ரூ 100" என்றாவது கணக்கெழுதக்கூடாது.

ஆனல், "1910ஆம் ஜனவரிமீ 7உ செங்கல் காளவாய் ராமஸாமி பற்று தோட்டக்காம்பவுண்டு செய்ய செங்கல் 1,000க்கு ரூ 6 ஆகப்பேசி செங்கல் 80,000 2. மாதடயனில் கொண்டுவந்து தோட்டத்தில் எண்ணுவதாய் எக்ரீமெண்டு செய்துகொண்டு அட்வான்ஸ் கொடுத்தது ரூ 100" என்று எழுதவேண்டும்.

செங்கல் வரவு கணக்கை அவன் பெயரால் வாங்கியிருக்கும் எக்ரீமெண்டின் பின்புறத்தில் வரப் பட்ட செங்கல்களை தேதிவாரியாய் வரவு வைத்துக் கொண்டு வரவேண்டும்.

நாளடைவில் குறிப்புப்படி பற்றும் தொகையை யும் இதில் பற்றெழுதிவரவேண்டும். கொத்த ரெங்க ஸாமி என்பவனிடம் ஒரு வீட்டில் தளவரிசைபோட சதுரம் 1 க்கு ரூ 1 ஆககண்ட்ராக்ட்பேசி ஒரு மாத கெடுவில்செய்து முடிப்பதாய் முடித்துக்கொண்டு எக்ரீ மெண்டும் எழுதிவாங்கிக்கொண்டு ரூ 10 அட்வான்ஸ் கொடுத்ததாய் வைத்துக்கொள்ளுவோம்.

இதற்கு, "கொத்த ரெங்கஸாமி பற்று ரூ 10" என்றாவது "வீட்டுப்பற்று ரூ 10 "என்றாவது கணக்கு எழுதக்கூடாது.

ஆனால் " 1910௵ ஜனவரிமீ 7உ கொத்த ரெங்கஸாமி பற்று வீடுமுழுவதும் தளவரிசை போட கூலி சதுரம் 1 க்கு ரூ 1 ஆகப்பேசி 1 மாதடயனில் போட்டுக்கொடுப்பதாய் எக்ரீமெண்டு எழுதிவாங்கிக் கொண்டு அட்வான்ஸ் கொடுத்தது ரூ 10" என்று எழுதவேண்டும்

## 6. இருபதிவு வகை.

இருபதிவு வழக்கம் என்பது ஆங்கிலேயர்களின் கொள்கையை ஒட்டியே நாட்டுக்கோட்டை நகரத்தார் களின் கொள்கையும் இருக்கிறது.

அதாவது ஒருவரிடத்தில் ஒருதொகையை வாங்கி மற்றொருவரிடத்தில் கொடுத்தால் அதை வரவு வைத்துப்பற்று எழுதுவதுதான்.

இதை இதர தமிழ்நாட்டார் சிலர் அனுஸரிக்கிற தில்லை. ஏனென்றால் கையில் இருந்து பணம் கொடுக்கப்படும்பொழுதுதான் அதைக் கணக்கு எழுத வேண்டும் என்பது அவர்களின் அபிப்பிராயம். இது பிசகு.

இப்படிப்பட்டவர்களின் கொள்கை இன்னும் ஒன்றுண்டு.

அதாவது வீட்டில் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் ஸம்பந்தமாய் ஏற்படும்செலவுகளையும் குடும்பத் தாரால் ஸம்பாதிக்கப்படும் வரவுகளையும் கணக்கு எழுதவேண்டியதில்லை என்பதும், வெளியில் இதரர் களுக்கு நம்மால் கொடுக்கப்படும் கடன்களையும் இதரர்களிடமிருந்து நாம் வாங்கும் கடன்களையு மாத்திரம் எழுதினல் போதும் என்பதுதான். இது வும் பிசகு.

இப்பொழுது முன்சொன்ன செங்கல் காளவாய் ராமஸாமி மறுபடியும் ரூ 200 கேட்பதாய் வைத்துக் கொள்ளுவோம்.

அதற்கு ரூ 200-க்கு நாஷனல் பாங்கி செக்கு கொடுத்தால் அதை அடியிற்கண்டவாறு எழுத வேண்டும்.

"(1910ளு பிப்ரவரிமீ 1உ நாஷனல் பாங்கி வரவு கொத்த ராமஸாமி பெயரால் 1 நம்பர்

செக்கு 1க்கு வரவு ரூ. 200)" (கொத்த ராமஸாமி பற்று செங்கல்விலை அச்சாரத்திற்காக முன் கொடுத்தது ரூ. 100 நிற்க இப்பொழுது கொடுத்தது ஷை நாஷனல் பாங்கி 1 நம்பர் செக்கு 1க்கு பற்று ரூ. 200) என்று இவ்விதம் எழுதவேண்டும்.

இந்த இடத்தில் இருபதிவு ஏற்படுகிறது. எப்படியெனில் ஷை செங்கல் காளவாய் ராமஸாமிக்கு கொடுத்த ரூபாய் இருநூறும் ரொக்கமல்ல. நாஷனல் பாங்கில் வாங்கிக்கொள்ளும்படி செக்கு என்னும் ஒரு எழுத்து மூலமான ஆர்டரைக் கொடுத்திருக்கிறது. நாஷனல் பாங்கில் ரூ. 200 வாங்கி ராமஸாமிக்குக் கொடுத்ததாய் ஏற்படுகிறது.

ஆகையால் நாஷனல் பாங்கிப் பெயரால் ரூ. 200 வரவு வைத்து கொத்த ராமஸாமி பெயரால் பற்று எழுதப்பட்டிருக்கிறது. குறிப்பில் இருப்பு ஸரியாய்ப் போகும்படிக்கும், ராமஸாமிக்குக் கொடுத்த விபரத்தைக்காட்டியும், நாஷனல் பாங்கில் பணம் வாங்கின விபரத்தைக்காட்டியும் இப்படி மூன்று விபரங்களைத் தெளிவாக்க இரண்டு கணக்குகள் எழுதப்பட்டன. இப்படி வரக்கூடிய பதிவுகளை சிட்டைக் குறிப்பில் எழுதி அஸல் குறிப்பிலும் எழுத வேண்டியதுதான். இப்படி ஒரு இடத்தில் வாங்கி மற்றொரு இடத்தில் கொடுப்பதை ஏன் கணக்கு எழுதவேண்டும் கையில் இருந்து பணம் கொடுக்கவில்லையே யென்றால், ஒருவரிடத்திலிருந்து எப்பொழுது எழுத்து மூலமாகவாவது, நேராகவாவது, வரவேண்டியதையாவது, கடனாகவாவது கொடுக்கும்படி சொன்

ஞேமோ, அப்பொழுதே ஷ தொகை நமது கையில் வந்துவிட்டதாகத்தான்ஏற்படும். ஆகையால் ஒருவர் கையில் ரொக்கம் வாங்கி மற்றொருவருக்குக் கொடுத்தாலும் அல்லதுசரக்கு வாங்கி மற்றொருவராவது நாமாவது அடைந்தாலும் கிரமப்படி வரவு வைத்துப் பணம் பற்றுஎழுத வேண்டியதுதான்.

## 7. அட்வான்ஸ்கணக்கை ஸெட்டில் செய்வது.

ஒருஸாமானுக்காவது அல்லது ஒரு வேலையைச் செய்து முடிக்கும்படிக்காவது அட்வான்ஸ் கொடுக்கப் பட்டிருந்தால் அவைகள் முடிந்தவுடன் கணக்கைஸெட்டில் செய்து பாக்கி கொடுக்கவேண்டியது. அப்படிக் கொடுத்த பிறகு அவரவர்கள் பெயரால் பற்றுயிருக்கும் தொகையை வரவு வைத்து அந்தந்தப்பெயரேடுகளுக்குப் பற்று எழுதிக்கொண்டு போகவேண்டியது.

இப்பொழுது மேற்கண்டபடி அட்வான்ஸ் வாங்கிக்கொண்டு போன ராமஸாமி கணக்கையும் ரெங்கஸாமி கணக்கையும் ஸெட்டில் செய்ய வேண்டுமானல் அடியிற்கண்டவாறு தாக்கல் செய்து ஸெட்டில் செய்ய வேண்டும். செங்கல் காளவாய் ராமஸாமி, பற்று வரவு கணக்கை முதலிலும், கொத்த ரெங்கஸாமி கணக்கைப் பிறகும் தாக்கல் செய்து காட்டப்படுகிறது.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1910 ஹு பிப்ரவரிமீ 20வ. செங்கல் காளவாய் ராம ஸாமி பற்று நாளது | | | | | | |

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| தேதிவரை வரவு செங்கல் எண்பதினுயிரத்திற்கு 6 ஆகக் கூடுதல் ரூ 480க்கு முன்பற்று தாக்கு 2ல் ரூ 300 நீக்கி நாளது உயில் கொடுத்தது ரூ | 180 | 0 | 0 | ... | ... | ... |
| தோட்டப்பற்று காம்பவுண்டு செய்வதற்காக செங்கல் காளவாய் ராமஸாமி வசம் வாங்கிய செங்கல் எண்பதினுயிரத்திற்கு 6 ஆகப் பற்று ரூ | 480 | 0 | 0 | ... | ... | ... |
| செங்கல் காளவாய் ராமஸாமி வரவு தோட்டக் கணக்கு வசம் செங்கல் விலையில் ரூ | ... | ... | ... | 480 | 0 | 0 |
| ரெங்கஸாமிபற்று தளவரிசை போட்டு முடித்த சதுரம் 50க்கு 1 ஆக கூடுதல் ரூ 50க்கு முன் அட்வான்ஸ் கொடுத்தது ரூ 10 நீக்கி பாக்கிகொடுத்தது. ரூ | 40 | 0 | 0 | ... | ... | ... |

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| "வீட்டுப் பற்று தளவரிசை போடகூடுதல் சதுரம் 50க்கு கொத்த ரெங்கஸாமி கணக்கு வசம் ரூ | 50 | 0 | 0 | ... | ... | ... |
| கொத்த ரெங்கஸாமி வரவு வீட்டுக் கணக்கு வசம் தளவரிசை வேலைக்கு தாக்கல் செய்த வகையில்வரவு. ரூ | ... | ... | ... | 50 | 0 | 0 |

மேற்கண்டபடி தாக்கல் செய்யவேண்டும். இந்த இடத்தில் ஒரு ஸந்தேகம் உண்டாகலாம் அதாவது, ஷை தொகைகளை ராமஸாமி பெயராலும் ரெங்கஸாமி பெயராலும் பற்று எழுதிக்கொண்டு வராமல் அப்போதைக்கப்போது தோட்டப் பற்றும் வீட்டுப் பற்றும் எழுதிவிட்டால் என்ன. இதற்காக இரண்டு முறை கணக்கு எழுதுவானேன் என்றால் அந்த விபரம் விளக்கப்படுகிறது.

ஒரு ஸாமானை வாங்கவாவது ஒரு வேலையைச் செய்து முடிக்கவாவது அட்வான்ஸ்கள் கொடுக்கப்பட்டால் ஷை வரவு செலவுகள் முற்றிலும் தீர்ந்தவுடன்தான் அக்கணக்குகள் அந்தந்தப் பெயரேடுகளுக்குக் கொண்டுபோகப்படவேண்டும். அப்படியில்லாமல் அப்போதைக்கப்போது அந்தந்தப் பெயரேடுகளுக்குக் கொண்டுபோய்விட்டால் அந்தந்த ஆஸாமி பெயரால்

என்ன பாக்கி, செல்லானது என்ன என்று விபரங்களைக் கண்டுபிடிக்கவேண்டுமானால் பல கணக்குகள் அடங்கியிருக்கும் அப்பெயரேடுகளைப் பரிசோதித்து எடுப்பது கஷ்டம். இதுவுமல்லாமல் ஷெ ஆஸாமிகள் சொன்னபடி நடக்காவிட்டால் ஷெயார்களிடத்தில் தொகை நஷ்டம் வஸூல் செய்வது, அவர்கள் எக்ரீமெண்டுடன் இப்பெயரேட்டையும் ஆதாரமாய் வைத்துக்கொண்டுதான் செய்யவேண்டும்.

அப்படி வஸூல் செய்வதை, அந்தந்தப்பெயரேடுகளில் தானே கொண்டுபோயிருந்து நடத்தி வஸூல் செய்தால் அத்தொகைகளைமறுபடி அப்பெயரேடுகளில் வரவுவைக்க வேண்டியதாய் வரும். அப்படிப் பற்று எழுதி வரவு வைத்துக்கொண்டு போவது கணக்கிற்கு அழகல்ல. ஆகையாற்றான் ஈரட்டுக் கணக்குகளை வரவு செலவு தீர்த்துக்கொண்டு கணக்குத் தாக்கல் செய்கிற வழக்கம்.

## 8. கச்சாத்து தாக்கல் செய்வது.

எந்தக்கடைகளிலிருந்தாவது வீட்டுச்செலவிற்காவது கடைச்செலவிற்காவது ஸாமான்கள் அனுப்பப்பட்டுக் கச்சாத்துகள் வந்தால் அக்கணக்குகளை உடனுக்குடன் இச்சிட்டைக் குறிப்பில் தாக்கல் செய்ய வேண்டும் அஸல் குறிப்பில் தாக்கல் செய்யலாம் என்று வைத்துக் கொள்ளக்கூடாது.

ஏனென்றால் ஷெ கச்சாத்தில் கண்ட ஸாமான்களில் சிலது, பெயரேடில்லாத பேர்வழிகளுக்குக் கொடுக்க வேண்டியும் வரும். ரொக்கத்திற்கு விற்க

வேண்டியும் வரும். ஆகையால் அக்கணக்குகளை சிட்டைக் குறிப்பிலேயே தாக்கல் செய்ய வேண்டும்.

உதாரணமாக 1909௵ மார்ச்சுமீ 1௳ நமது கல்கத்தாக் கடையில் இருந்து ரூ 250க்கு ஜவுளி வாங்கியனுப்பியிருப்பதாய் வைத்துக்கொள்ளுவோம். ஷை கணக்கு தாக்கல் செய்து காட்டப்படுகிறது.

ஷை ஜவுளிகளில் குடும்பச் செலவிற்காக ரூ. 150க்கும், வீட்டு ஸிப்பந்திகளுக்கு ரூ 30க்கும், கடை ஸிப்பந்திகளுக்கு ரூ 20க்கும், தர்மச்செலவிற்காக ரூ 20க்கும் எடுத்துக்கொண்டு அண்ணுஸாமி அய்யர் என்பவருக்கு ரூ 10க்கும் நடேசன் செட்டியார் என்பவருக்கு ரூ 20க்கும் விற்றிருக்கிறோம்.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| “ 1909௵ மார்ச்சுமீ 9௳ கல்கத்தாக் கடை வரவுநாளது மீ 1௳ அவ்விடமிருந்து வாங்கியனுப்பிய ஜவுளிவிலையில் கச்சாத்துப் படி வரவு ரூ | ... | ... | ... | 250 | 0 | 0 |
| குடும்பஸாதல்வார் செலவு கணக்குப் பற்று தீபாவளிக்காக ஷை ஜவுளியில் எடுத்துக்கொண்டது ரூ | 150 | 0 | 0 | ... | ... | ... |
| இதுவும் பற்று வீட்டு ஸிப்பந்திகள் செலவிற்காக எடுத்துக்கொண்டது ரூ | 30 | 0 | 0 | ... | ... | ... |

| | | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| கடைச் செலவு கணக்குப் பற்று கடை ஸிப்பந்திகளுக்காக வாங்கிக் கொடுத்த ஜவுளி விலையில் | ரூ | 20 | 0 | 0 | ... | ... | ... |
| தர்மச் செலவு கணக்குப் பற்று தீபாவளிக்கு இனும் கொடுக்க ஷை வசம் ஜவுளி | ரூ | 20 | 0 | 0 | ... | ... | ... |
| அண்ணுஸாமி அய்யர் பற்று ஜவுளி விலையில் | ரூ. | 10 | 0 | 0 | ... | ... | ... |
| நடேசன் செட்டியார் பற்று ஷை வகையில் | ரூ | 20 | 0 | 0 | ... | ... | ... |
| ஆக | ரூ | 250 | 0 | 0 | 250 | 0 | 0 |

இதுபோல் தாக்கல் செய்யவேண்டும்.

## 9. ஒரே இனத்தின் பெயரால் கணக்கு எழுதுவது.

ஒருவர் பெயரால் ஒருகணக்கு எழுதினுல் அது பற்று வகையானுல் அதே தேதியில் அக்கணக்கை யடுத்தேவேறு பற்றுவகை வந்தால் அதற்கு இன்னுர் பற்று என்று எழுத வேண்டியதில்லை.

"இதுவும் பற்று" என்று எழுதினல் போதுமானது. அதையடுத்து வரவு வகை வந்தால் "உடன் வரவு" என்றும், அதையடுத்து பற்று வந்தால் "உடன் பற்று" என்றும் அதையடுத்து மறுபடியும் வரவு வந்தால் "உடன் வரவு" என்றும் அதையடுத்து மறுபடியும் வரவுவந்தால் "இதுவும் வரவு" என்றும் இப்படியெல்லாம் கணக்கைச் சுருக்கியும் வாசக அழகைக்காட்டியும் எழுத வேண்டும்.

## 10. முன் வட்டி தாக்கல் செய்வது.

அடியிற் கண்ட உதாரணத்தால் முன்வட்டி தாக்கல் செய்யும் விதத்தைக்காண்க.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ | பை | ரூ. | அ | பை |
| 1913௵ எப்பிரல்௴ 1௳ நரஸிம்மலு நாயுடு பற்று 1 வட்டி பிராமிஸரி நோட்டு 1-க்குப் பற்று ரூபா. | 200 | 0 | 0 | ... | ... | ... |
| இதுவும் பற்று நகையீடு 1 வட்டிக்குப் பற்று ரூபா. | 50 | 0 | 0 | ... | ... | ... |
| உடன் வரவு ஷை கணக்கில் கைமாற்றாக பாக்கி வைத்துக்கொண்டது ரூபா. | ... | ... | ... | 30 | 0 | 0 |
| இதுவும் வரவு நகையீடு 50ரூபாய்க் கணக்கிற்கு ௴ 10க்கு முன் வட்டி வாங்கியது ரூபா. | ... | ... | ... | 5 | 0 | 0 |

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| உடன் பற்று நகை யீடு 50 ரூ கணக்கிற்கு மீ 10க்கு முன் வட்டிக்குப் பற்று ரூபா. | 5 | 0 | 0 | ... | ... | ... |
| வட்டி வரவு ஷ வசம் ஷ வகையில் ரூபா. | ... | ... | ... | 5 | 0 | 0 |
| அ. ரு. சு. வரவு கைமாற்றுக்கு ரூபா. | ... | ... | ... | 215 | 0 | 0 |
| 2உ நரஸிம்மலு நாயுடு பற்று 200ரூபா. பிராமிஸரி நோட்டிற்கு மீ 10க்கு முன் வட்டி ரூபா. | 20 | 0 | 0 | ... | ... | ... |
| உடன் வரவு ஷ வட்டிக்காக வாங்கியது ரூபா. | ... | ... | ... | 20 | 0 | 0 |
| வட்டி வரவு ஷ வசம் வட்டிக்காக ரூபா. | ... | ... | ... | 20 | 0 | 0 |
| நரஸிம்மலு நாயுடு பற்று கைமாற்று பாக்கி ரூபா. | 30 | 0 | 0 | ... | ... | ... |
| க. தெ. வரவு கைமாற்று ரூபா. | ... | ... | ... | 225 | 0 | 0 |
| அ. ரு. சு. பற்று கைமாற்று பாக்கி ரூபா. | 215 | 0 | 0 | ... | ... | ... |
| ஆக ரூபா. | 520 | 0 | 0 | 520 | 0 | 0 |

இக் கணக்கில் 13 வகைகள் இருகின்றன.

1-வது நரஸிம்மலு நாயுடுவுக்கு 1 வட்டி பிராமிஸரிநோட்டு எழுதிவாங்கிக் கொண்டு கொடுத்தது ரூபா. 200.

2-வது வகை 50ரூபா. பற்று.ஷையாருக்கே நகையீட்டில் கொடுக்கப் பட்டிருக்கிறது.

3-வது வகை 30 ரூபா. வரவு ஷை யாரிடத்தில் கைமாற்று பாக்கியாய் வரவு வைக்கப் பட்டிருச்கிறது

4-வது வகை 5ரூபா. வரவு ஷையாரிடம் ரூபா.50 கணக்கிற்கு வட்டி வாங்கி யிருக்கிறது.

5-வது 5 ரூபா. பற்று வகை வட்டிக்காகப் பற்று எழுதப்பட்டிருக்கிறது.

6-வது 5 ரூபா. வரவு வகை வட்டிக்காக வரவு வைக்கப் பட்டிருக்கிறது.

7-வது 215 ரூபாய் வரவு வகை அ. ரு. சு. வசம் கைமாற்று வாங்கி வரவு வைக்கப் பட்டிருக்கிறது.

8-வது 2உ 20 ரூபா. பற்று வகை நரஸிம்மலு நாயுடு 200 ரூபாய்க் கணக்கிற்கு வட்டிக்காகப் பற்று எழுதப் பட்டிருக்கிறது.

9-வது 20 ரூபா. வரவு அயிட்டம் ஷை யாருக்கு வட்டிக்காகப் பற்று எழுதியதை வாங்கப் பட்டிருக்கிறது.

10-வது 20 ரூபா. வரவு அயிட்டம் ஷை வட்டியை வட்டி வரவுவைக்கப் பட்டிருக்கிறது.

11-வது 30 ரூபா. பற்று அயிட்டம் 1௳ நரஸிம்மலு நாயுடு வசம் வாங்கி யிருந்த கைமாற்றுக் காக கொடுத்துப் பற்று எழுதப் பட்டிருக்கிறது.

12-வது 225 ரூபா. வரவு அயிட்டம் க.தெ. வசம் கைமாற்று வாங்கப் பட்டிருக்கிறது.

13-வது 215 ரூபா. பற்று அயிட்டம் 1௳ அ. ரு. சு. வசம் வாங்கி யிருந்த கைமாற்றுக் காகக் கொடுக்கப் பட்டிருக்கிறது. இப்படி முன்வட்டி வாங்கிய கணக்குகளுக்கு மாதா மாதம் கிஸ்தியாக வாவது ஒரேடயத்திலாவது தவணைக் கடைசியில் தொகை வஸூல் செய்யப்படும்.

## 11. பின்னல் வட்டி தாக்கல் செய்வது.

முதலில் பிராமிஸரி நோட்டிலாவது பந்தகத்தி லாவது கடன்கொடுத்துப் பின்னல் வட்டியும் முதலும் சேர்த்து வாங்குவதுண்டு. வட்டி மாத்திரம் பேசின தவணையில் வாங்கி முதலை பாக்கி வட்டியுடன் பேசின தவணையில், வாங்கிக்கொள்ளுவது முண்டு. இதைப் பின்வருமாறு விளக்குவோம்.

கோவிந்தஸாமி அய்யர் என்பவர் பிராமிஸரி நோட்டு எழுதிக் கொடுத்து 1913௵ பிப்ரவரி௴ 28௳ ரூபா. 300 1 வட்டிக்குக் கடன் வாங்கினர்.

அவர் 1914௵ மார்ச்சு௴ 1௳ வட்டியும் முத லும் ரூ 336 கொண்டுவந்து கொடுத்தார். இது அடியிற் கண்டவாறு தாக்கல் பண்ணப் படவேண்டும்.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1913வருஷம் பிப்ரவரிமீ 28வ கோவிந்தஸாமி அய்யர் பற்று 1 வட்டி பிராமிஸரிநோட்டு 1க்குபற்று ரூபா. | 300 | 0 | 0 | ... | ... | ... |
| 1914வருஷம் மார்ச்சுமீ 1வ வரவு வட்டி கூட வாங்கினது ரூபா. | ... | ... | ... | 336 | 0 | 0 |
| வட்டி வரவு ஷை வசம் ரூபா. | ... | ... | ... | 36 | 0 | 0 |
| கோவிந்தஸாமி அய்யர் பற்று நாளது தேதி வரை 300ரூ கணக்கிற்கு மாதம் 12க்கு வட்டி ரூபா. | 36 | 0 | 0 | ... | ... | ... |
| அ. ரு. மு. பற்று கைமாற்று ரூபா. | 36 | 0 | 0 | ... | ... | ... |
| ஆக. ரூ | 372 | 0 | 0 | 372 | 0 | 0 |

ஷை கணக்கில் 1913வருஷம் பிப்ரவரிமீ 28வ கோவிந்தஸாமி அய்யருக்கு ரூ. 300 கொடுத்துப் பற்றெழுதப் பட்டிருக்கிறது. 1914வருஷம் மார்ச்சுமீ 1வ ஷையாரிடம் ரூ 36 வட்டி சேர்த்து ரூ 336 வாங்கப் பட்டிருக்கிறது. ஷை ரூ 36ம் வட்டி வரவு வைக்கப்பட்டிருக்கிறது.

கோவிந்தஸாமி அய்யருடைய பெயரேட்டில் ரூ 300 மாத்திரம் பற்று இருக்க அதற்கு ரூபா. 336

வரவானால் ரூ 36 அதிக வரவு ஏற்படும். அந்த ஏடு பற்று வரவு நேர் ஆவதற்காக வட்டிக்காக ரூ 36 பற்று எழுதவேண்டியிருக்கிறது.

வட்டிக்காக கோவிந்தஸாமி அய்யர் பற்று ரூபா. 36 எழுதி வட்டி வரவு வைப்பதைவிட, கோவிந்தஸாமி அய்யரிடத்தில் வாங்கின ரூபா. 336ல் ரூபா. 300 அஸலுக்காகவும், ரூபா. 36 வட்டிக்காகவும் வரவு வைத்துவிட்டால், கோவிந்தஸாமி அய்யர் ஏடும் பற்று வரவு நேர் ஆகிறது. வட்டித்தொகையும் வட்டியேட்டிற்கு வந்துவிடுகிறது. வேலையும் இரட்டிக்கவில்லை. அப்படி எழுதுவோமென்றால் மேற்கண்டபடி எழுதினால் பிற்காலத்தில் கோவிந்தஸாமி அய்யர் ஏட்டைப்பார்த்தால் வட்டி வரவுவந்ததாகவே தெரியமாட்டாது. ஆகையால்தான் ஆஸாமிகள் பெயரேடுகளில் வட்டி வரவு வைத்துப் பற்றுஎழுதும் வழக்கத்தை அனுஸரிக்க வேண்டியிருக்கிறது.

## 12. உண்டியல் வரவு வைப்பது.

ஒரு கடைக்கு உண்டியல் எழுதிக்கொடுத்துவிட்டால் உடனே அதைக்கணக்கில் வரவு வைக்க வேண்டும். அப்படி வரவு வைப்பதில் இன்னதேதி இன்னார் பெயரால் இவ்வளவு தொகை என்பதும் இன்ன கடைக்கு உண்டியல் என்பதும், தரிசனையிலா வட்டியா என்பதையும் காட்டவேண்டும். 1911௵ ஜனவரி௴ 1௳ கல்கத்தாக்கடை ஏஜண்டைப் பணம் கொடுக்கும்படி அ. நா. சு. பெயருக்கு ரூபா. 200க்கு ஒருதரிசனை உண்டியலும், ஷெ தேதியில் சென்னை உ. அ. ரு. வெங்கடாசலமையரைப் பணம் கொடுக்

கும்படி ரூபா. 500 க்கு வட்டி உண்டியலொன்றும் எழுதிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளைக் கணக்கில் அடியிற் கண்டவாறு கொண்டுவரவேண்டும்.

| | வரவு | | |
|---|---|---|---|
| | ரூபா. | அ | பை |
| 1911௵ ஜனவரி௴ 1௳ கல்கத்தாக்கடை நடப்புக்கணக்கு வரவு இவ்விடம் அ. நா. சு. பெயரால் ஷெயார் ஆர்டருக்கு அவ்விடம் தரிசனையில் பணம் கொடுக்கும்படி எழுதிக் கொடுத்த 1 நம்பர் உண்டியல் 1 க்கு வரவு ரூபா. | 200 | 0 | 0 |
| சென்னை உ. அ. ரு. க்கடை வரவு இவ்விடம் அ. நா. சு. பெயரால் அவ்விடம் நடப்பு வட்டியுடன் பணம் கொடுக்கும்படி எழுதிக்கொடுத்த பேரர் 2 நம்பர் உண்டியல் 1 க்கு வரவு ரூபா. | 500 | 0 | 0 |

இப்பொழுது 1 நம்பர் 200 ரூபா. உண்டியல் நமது கல்கத்தா ஸொந்தக் கடைக்கு என்றும், அது நடப்புக் கணக்கு என்றும், உண்டியல் ஆர்டர் உண்டியல் என்றும் அதாவது அ. நா. சு. கையெழுத்துப் போட்டுத்தான் மாற்றிக்கொள்ள வேண்டும் என்றும் ஏற்படுகிறது. அதுவுமன்றியில் ஷெ உண்டியலுக்கு வட்டியில்லாமல் காட்டின தேதியில் பணம் கிடைக்கும் என்றும் ஏற்படுகிறது.

500 ரூபா. உண்டியலோ நடப்பு வட்டியுண்டியல், வட்டியுடன் பணம் கிடைக்கும். உ. அ. ரு. கடையில்

பணம் வாங்கவேண்டியது என்றும், பணம் மாற்ற அ. நா. சு. கையெழுத்து வேண்டியதில்லை என்றும் ஏற்படுகிறது.

## 13. உண்டியல் பற்று எழுதுவது.

நம்முடைய கையில் இருக்கும் உண்டியலை ஒரு கடைக்கு அனுப்ப வேண்டுமானால் அதைக் கணக்கில் பற்று எழுதும் பொழுது, உண்டியல் தேதி எழுதினவர் பெயர் இன்னாரிடம் இன்ன ஊரில் பணம் வாங்க வேண்டியது, தரிசனையா நடப்பு வட்டியா இவ் விபரங்களைக் கண்டு பற்று எழுதவேண்டும்.

அதன் விபரம் அடியில்கண்ட விபரப்படி காண்க.

1910௵ மார்ச்சுமீ 10௳ அருளானந்தம் பிள்ளை யென்பவர் ஒரு 100 ரூ உண்டியலுக்கு பணம் வாங்கிக்கொண்டு போனதாய் வைத்துக்கொள்வோம். அந்த உண்டியல் பிறந்ததேதி 1910௵ ஜனவரிமீ 1௳ எழுதிக்கொடுத்தது, அ. க. முத்துவய்யரால் எழுதிக் கொடுக்கப்பட்டது, ஸுப்பராமையர் பெயருக்கு பணம்வாங்கவேண்டியது, சென்னை, இ. நா. கடைவசம் உண்டியல் தரிசனையுண்டியல்.

இதை அடியிற்கண்ட விதமாய்ப் பற்று எழுத வேண்டும்.

"1910௵ மார்ச்சுமீ 15௳ சென்னப்பட்டணம் கடைப்பற்று நாளது தேதி ரிஜிஸ்டர் 10 நம்பர் தபாலுடன் அனுப்பியது நாளது மாதம் 1௳யாக இவ்விடம் அ. க. முத்துவையர் பெயரால் அவ்விடம் இ. நா. கடைவசம் தரிசனையில் பணம் வாங்கும்படி இவ்வி

டம் அருளானந்தம் பிள்ளை வசம் வாங்கியனுப்பிய தரிசனை பேரர் 21 செ. உண்டியல் 1க்கு பற்று
ரூ 100—0—0 ... ... ...

என்பது போல் எழுதவேண்டும்.

## 14. புதுக்கணக்கு எழுதுவது.

ஒவ்வொரு தடவையும் புதுக் கணக்கு எழுதும் பொழுது சிட்டைக் குறிப்பிலேயே எழுதுவது நலம். அஸல் குறிப்பிலும் சிலர் எழுதுவதுண்டு. அப்படி அஸல் குறிப்பில் எழுதுவதால் சில காரியங்களுக்கு அஸௌகரியங்கள் ஏற்படும். எப்படியென்றால் புதுக் கணக்கு எழுதும் தேதி மாதம் 1உயல்லாமல் வேறு தேதிகளாய் இருக்கலாம் அப்படி அஸல் குறிப்பில் வேறு தேதி போட்டு கணக்கு எழுதிவிட்டால், பிறகு சிட்டைக் குறிப்பு நகல் பண்ணும் பொழுது, முதல் தேதிக்கும் புதுக் கணக்கு எழுதிய தேதிக்கும் நடுவில் வேறுதேதியில் கணக்குவந்தால் எப்படி எழுதக்கூடும்.

தவிரவும் பணம் கொடுபடும் பொழுது எழுதிய கணக்கும் பணம் வாங்கும்பொழுது எழுதிய கணக்குமே கோர்ட்டாரால் நம்புத்தக்கவைகள். அக்காரியங்களுக்கு இச்சிட்டைக்குறிப்பே தகுந்தது.

தவிரவும் நம்முடைய கையில் எவ்விதமான பணம் வந்தாலும், நாம் எவ்வித காரணத்திற்குப் பணம் கொடுத்தாலும் சிட்டைப் பாக்கியென்றும்குறிப்புப்பாக்கியென்றும், கச்சாத்துப் பாக்கியென்றும் இப்படியெல்லாம் வெவ்வேறு புஸ்தகங்களில் வெவ் வேறு கணக்குகளை எழுதிவைத்துக் கொண்டால் அக்கணக்குகள் ஒரு பொழுதும் மதிக்கப் படமாட்டாது.

ஆகையால் வெளியூர் கணக்குகள் பதிவு செய்வதைத் தவிரவேறு எவ்வித மான கணக்குகளையும் சிட்டைக் குறிப்பிலேயே எழுத வேண்டும்.

முதலாளிகளிடத்திலும், துரைத்தனத்தாரிடத்திலும் மதிப்பான பெயரை வாங்க வேண்டும் என்ற எண்ணத்தை வஹித்த ஒவ்வொரு ஏஜண்டும் இச் சிட்டைக் குறிப்பை அவசியம் வைத்துக் கொள்ள வேண்டியது.

## 15. சிட்டைக் குறிப்பின் உபயோகத்தை விளக்குவது.

மேற் கண்ட ஏற்பாடு களின்படிக்கு நம்மால் செய்யப்படும் ஒவ்வொரு கொடுக்கல் வாங்கல் காரியங்களும் அந்தந்த ஸமயங்களிலேயே எழுதப்பட்டவைகளாகையாலும், மற்ற அஸல் குறிப்பு பெயரேடு அயன் தொகை முதலியவைகள் எல்லாம் ஷை சிட்டைக் குறிப்பைப் பார்த்தே நகல் செய்யப் பட்டவைகளாகையாலும் இச் சிட்டைக் குறிப்பே முதன்மையான தஸ்தவேஜாக இருக்கிறது.

ஒருவர் நடத்தும் தொழிலுக்கு எல்லாப் புஸ்தகங்களிலும் முதன்மையான தஸ்தவேஜ் சிட்டைக்குறிப்புதான். கணக்குகளைச் சிட்டையில் எழுதிவந்து அதைக் குறிப்பில் பெயர்த்து எழுதிவிட்டு, பெயரேட்டிற்கு வரக்கூடாத கைமாற்றுக்கணக்குகளை வேறொரு சிட்டையில் எழுதிக் கொண்டு ஷை பழைய சிட்டைகளைக் கிழித்தெறிந்து விட்டால் ஷை கிழித்தெறிந்த சிட்டையில் என்னென்ன கணக்குகள் இருந்

தன என்று முதலாளிகளுக் காவது வருமான வரி விதிக்கும் அதிகாரிகளுக் காவது அவர்கள் வேண்டும் காலத்தில் காட்டமுடியாது. அப்படி அவர்கள் கேட்டுக் காட்டமுடியா விட்டால் மேல்கண்ட கிழி பட்டுப் போனசிட்டையில் வருமானங்கள் கிடைத்து அவைகளை அஸல் குறிப்பிற்குக் கொண்டு வராமல் ஷே லாபத்தை முதலாளிக்கும் கிடைக்க விடாமலும், அதற்குள்ளவருமானவரி ராஜங்கத்தாருக்கும் கிடைக்காமலும் செய்து ஏஜண்டுகள் எடுத்துக் கொண்டதாய்க்கூட ஏற்படலாம்.

ஆகையால் ஒரு கடையில் எழுதப்பட்ட கணக்கு யாதொன்றும் கிழிவிற்குவரவிடக் கூடாது.

ஒரு இருப்பு திட்டத்திற்கு மேல் வைத்துக் கொள்வதும், அமானி கைமாற்றுப் பணங்களை சிட்டைக் குறிப்பிற்குவராமல் வாங்கவும் கூடாது.

இது தான் ஆங்கிலேய வர்த்தகர்களுடையவும், நாட்டுக்கோட்டை நகரவர்த்தகர் களுடையவும் கொள்கையாக இருக்கிறது.

## 16. செலவு கணக்கு எழுதுவது.

நம் தமிழ் நாட்டார் செலவு கணக்கு மாத்திரம் செவ்வையாய் வைத்துக் கொள்ளாமல் தங்களுக்கு நேரிடும் எச்செலவையும் ஒரே அயிட்டமாய் எழுதி ஒரே பெயரேட்டில் பதிந்து வைத்துக் கொள்ளுகிறார்கள். அவைகளை இன்னின்ன விதத்தில் இவ்வளவு இவ்வளவு செலவு என்று பார்க்க வேண்டுமானால் ரொம்பகஷ்டமாய் ஏற்படுகிறது. வருமான வரிவிதிக்

கும் அதிகாரிகள் இச் செலவைக்கழிக்காமலே, வரி விதித்து விடுகிறார்கள். குடும்ப ஸாப்பாட்டுச் செலவு, ஸாதல்வார்ச்செலவு, வட்டம் கமிஷன்செலவு, வாடகைச் செலவு, வட்டிச்செலவு, ஸ்டாம்புச்செலவு, ஸ்டேஷனரி செலவு, ஸிப்பந்திகள் சம்பளச்செலவு முதலிய செலவுகளைத் தனித்தனி அயிட்டமாய் எழுதி அவைகளை வெவ்வேறு பெயரேட்டில் பதியவேண்டும்.

ஏனென்றால் நமக்கு குடும்ப ஸம்பந்தமாய் நடக்கும் செலவுகளையும், வரும்படி வரவேண்டியவைகள் ஸம்பந்தமாய் நடக்கும் செலவுகளையும், ஒன்றுசேர்த்து நம்முடைய ஸம்பாத்தியத்தில் கழித்து விட்டால், நம்முடைய ஸம்பாத்தியத்தில் இன்னதுதான் வரும்படி என்பதைக் கண்டுபிடிப்பது கஷ்டம்.

இதுவுமல்லாமல் வருமான வரிவிதிக்கும் அதிகாரிகள் இச்செலவு கணக்கை வரும்படியில் கழிக்காமலே வரிவிதித்து விடுகிறார்கள்.

ஆகையால் செலவுகணக்குகளுக்குத் தனித்தனிப் பெயரேடு ஏற்படுத்திப் பதிந்துவந்து வருஷ முடிவில் தொகைகட்டி ஷெ செலவு ஏடுகளை இரண்டு வகைப் படுத்தி, ஸாதல்வார் செலவு என்னும் ஏட்டில் இன்கம் டாக்ஸ் ஸம்பந்தமில்லாத செலவுகளையும், கடைச்செலவு என்னும் ஏட்டில் இன்கம்டாக்ஸ் ஸம்பந்தமுள்ள செலவுகளையும், கொண்டு போகவேண்டும்.

மேற்கண்ட ஏற்பாடுகளை அனுசரித்துத் தான் செலவு எழுதக்கூடியவைகளைச் சிட்டைக் குறிப்பிலேயே விளக்கி எழுதவேண்டும்.

## 17. மொத்தமாய் எழுதிய செலவுகளுக்கு வவுச்சர்வைப்பது.

செலவு கணக்கில் சில ஏடுகளில் பல அயிட்டங்களைச் சேர்த்து, ஒன்றாய் பில்படி கச்சாத்துப்படி, வவுச்சர்ப்படி என்று எழுதநேர்ந்தால் மேற்கண்டபடிக்குள்ள பில் கச்சாத்து வவுச்சர் இவைகளை "ஷெ கச்சாத்து வவுச்சர் பயில்" என்னும் புஸ்தகத்தில் பயில் செய்யவேண்டும்.

## 18. லாபம் வரவு வைப்பது.

நம் தமிழ்நாட்டார் ஆதாயவரவு ஏடு என்னும் ஒரு அயிட்டம் ஏற்படுத்தி அதில் வட்டம், வட்டி, வாடகை, வியாபாரங்களில் வரப்பட்ட இலாபம், நிலங்களில் இருந்துவரும் வரும்படி இவைகளை ஒன்றாய் வரவுவைத்து விடுகிறார்கள். அப்படி வைப்பதில் இன்னின்ன வகையில் இவ்வளவு லாபம் என்பதைச் சுலபமாய்க் கண்டுபிடிக்க முடியாமல் போய்விடுவதும் தவிர இது விஷயத்திலும் வருமான வரிவிதிக்கும் அதிகாரிகளுக்குக் கஷ்டம் ஏற்படுகிறது. ஆகையால் வரவு விஷயத்திலும் ஒவ்வொரு வகைக்கும் தனித் தனிப் பெயரேடு இருக்க வேண்டியதுடன், வருஷ முடிவில் வருமானவரி விதிக்கும்படியான வரவுகளை லாபவரவு என்னும் ஒரு ஏட்டிலும், வருமானவரி விதிக்கக்கூடாத கணக்குகளை ஆதாய வரவு என்னும் ஏட்டிற்கும் கொண்டுபோகவேண்டும்.

## 19. பெயரேடு ஏற்படாத கணக்குகள் பதிவது.

பெயரேடு ஏற்படாத கைமாற்றுக் கணக்குகளை அஸல்குறிப்பில் எழுத வேண்டியதில்லை. ஒருமாதச் சிட்டையைப் பெயர்த்து எழுதும்பொழுது ๑௨ முதல் எழுதுவதில் குறிப்பில் எழுதப்படும் கணக்குகளை (●) இவ்விதம் அடையாளம் பண்ணிக்கொண்டு போக வேண்டும். மாதம்முடிய எழுதினவுடன் மார்க்குப் பண்ணப்படாமல் இருக்கும் சிட்டைக் கணக்குகளை (▬) இவ்விதம் மார்க்குப்பண்ணி மறுமாதச் சிட்டையில் எழுதவேண்டும். முதலில் குறிப்பு எழுதி முன்மாதக் கணக்குடன் சேர்த்து இருப்புக்கட்டின பிறகு ஷை குறிப்பு இருப்பை புதுச்சிட்டையின் தலைப்பில் " குறிப்பு இருப்பு " என்றுகட்டி ஷை தொகையை வரவுகலத்தில் போடவேண்டும்.

அப்பால் பழையசிட்டையில் இருந்து பெயர்த்து எழுதின (▬) இவ்விதம் மார்க்குப்பண்ணின கணக்குகளையும் சேர்த்து பற்றுவரவு போட்டுத் தொகைகட்டி குறிப்பு இருப்புடன் கலந்துபார்த்து வரும்தொகையும் பழைய சிட்டையில் கடைசியில் கட்டியிருக்கும் தொகையும் ஸரியாய்ப் போகவேண்டும்.

அப்பொழுதுதான் சிட்டையை ஸரியானபடி பெயர்த்து எழுதினதாக ஏற்படும்.

அப்படி பெயர்த்து எழுதுவதில் வரவு இன்ன மாதச்சிட்டையில் என்றும், பற்று இன்னமாதச் சிட்டையில் என்றும் எழுதிக்கொண்டு போகவேண்டும்.

அப்படி எழுதினால்தான் ஜாஸ்திமாதம் ஆனவுடனுங் கூட சிட்டையில் இருக்கும் கணக்குகள் இன்னமாதப் பாக்கி என்று தெரியும். தேதி அவசியமானால் அந் தந்த மாதச்சிட்டையில் பார்த்துக் கொள்ளலாம்.

## 20. செக்குகள் வரவுவைப்பது.

பாங்கிகளில் நம்மால் டிப்பாஸிட்டு செய்யப்பட்டிருக்கும் தொகைகளுக்கு பாங்கில் அனேகமாய் வட்டி கிடைக்காது. அப்படிக் கிடைத்தாலும் ஸொல்ப வட்டிதான் கிடைக்கும்.

ஆனால் ஷெ தொகை எந்தஸமயம் செக்கு அனுப்பினாலும் கொடுபடக் கூடியவைகள். செக்கு என்பது ஒரு தொகையை ஒருவருக்குக் கொடுக்கும்படி ஒரு பாங்கிக்கு நம்மால் கொடுக்கப்படும் ஆர்டர்.

அப்படி ஆர்டர் அனுப்ப வேண்டுமானால் நாம் முதலில் பாங்கினிடத்தில் பணம் கட்டியிருந்தாற்றான் ஆர்டர் அனுப்பலாம். ஆகையால் பாங்கிக்கு நம்மால் பணம் கட்டப்படும்பொழுதே ஷெ தொகையை பாங்கிப்பற்று எழுதவேண்டும்.

செக்கு அனுப்பும் காலத்தில் இன்ன பாங்கி வரவு இன்னார் பெயரால் இத்தனும் நம்பர் செக்கு 1க்கு வரவு ரூபா. இவ்வளவு என்று எழுதவேண்டும்.

## 21. பாங்கில் பணம் கட்டி செக்கு மூலம் பெற்றுக்கொள்ளுவதின் உபயோகம்.

நம்முடைய கையில் இருக்கும் தொகைகளை அப்போதைக்கப்போது பாங்கிற்கு அனுப்பி அவர்க

ளால் ஸப்ளை செய்யப்படும் பாஸ்புஸ்தகத்தில் வரவு வைத்து வாங்கிவிட்டால் நாம் கொடுக்கவேண்டியவர் களுக்கு, பாங்கியால் நமக்கு ஸப்ளை செய்யப்படும் செக்குப் புஸ்தகத்தில் இருந்து செக்கு கொடுத்துவிட் டால் அதற்கு பாங்கில் பணம் கொடுத்துவிடுவார்கள்.

அதனுல் நமக்கு இரண்டு வகை பிரயோஜனங்கள் இருக்கின்றன.

1. தொகை பந்தோபஸ்தாய் இருக்கக்கூடியது.

2. நாம் பணம் கொடுக்க வேண்டியவர்களுக்கு செக்கு மூலம் கொடுத்தால் பாங்கி ஒரு சாட்சியா கிறது.



அத்தியாயம் III.



## அஸல் குறிப்பு விளக்கம்

### 1. சிட்டைக் குறிப்பில் இருந்து பெயர்த்து எழுதுவது.

ஒவ்வொரு மாதமும் 30௳ சிட்டைக் குறிப்பி லுள்ள கணக்குகளைப் பெயர்த்து அஸல் குறிப்பில் எழுதவேண்டும் என்று முன் அத்தியாயத்தில் காட்டி யிருக்கிறோம். மேற்கண்டபடி பெயரேடு ஏற்படாமல் இருக்கும் கைமாற்றுக் கணக்குகளை இந்த அஸல் குறிப்பில் எழுதக்கூடாது. அக்கணக்குகளைப் பின் மாதச் சிட்டையிற்றான் வைக்கவேண்டும் என்பதை எப்பொழுதும் ஞாபகத்தில் வைக்கவேண்டும்.

### 2. சிட்டை விபரப்படி எழுதுவது.

ஸாதாரணக் கணக்குகளை இதில் எழுதும் பொழுது அதிக விபரம் எழுதாமல் சிட்டை விபரப்படி என்று எழுதலாம். ஆனால் முக்கியமான கணக்கு களை அப்படி எழுதக்கூடாது. சிட்டைக் குறிப்பில் இருக்கும் கணக்குகளை இதிற் சுருக்கி எழுதவேண்டு மானால் சிட்டைக் குறிப்பிற்கும் இப்புத்தகத்திற்கும் அபிப்ராயம் வேறுபடாமல் இருக்கவேண்டும்.

### 3. முடித்து வரும் கணக்கை ஸரிபார்த்தல்.

வெளியூர்க் கடைகளிலிருந்து முடித்துவரும் கணக்குகளை இருபதிவு ஏற்பாட்டிலேயே எழுதுவது அவசியமாகையால் அவைகளைச் சிட்டைக் குறிப்பில் எழுத வேண்டியது அவசியமில்லை. இந்த அஸல்

குறிப்பிலேயே தாக்கல் செய்யலாம். அவைகளை ஒரு மாதக் கணக்கில் 1உ-யிலாவது 30உ-யிலாவது தாக்கல் செய்யவேண்டும்.

அப்படி தாக்கல் செய்வதில் நம்முடைய சொந்தக் கடைகளாய் இருந்தால், முதலில் பெயரேட்டை எடுத்து கணக்கு முடித்திருக்கும் தேதிவரை பதிவாய் விட்டதா என்று பார்க்க வேண்டும். அதன்பின்னர் இப்பெயரேட்டிற்கும் முடித்து வந்த கணக்கிற்கும் ஒத்துக் கொள்ள வேண்டும்.

இவ்விடமிருந்து நம்மால் எழுதிக்கொடுக்கப்பட்ட உண்டியல்களுக்கு முற்றிலும் பணம் கொடுபட்டாய் விட்டதா என்றும், இவ்விடமிருந்து நம்மால் வாங்கியனுப்பிய உண்டியல்களுக்குப் பணம் முற்றிலும் வாங்கியாய் விட்டதா என்றும் பார்க்கவேண்டும். அதன் பின்னர் அத்துடன் வந்திருக்கும் வட்டிச் சிட்டை ஸரியாய் விட்டதா என்றும் பார்க்கவேண்டும்.

அத்துடன் வந்திருக்கும் கொடுபடவேண்டிய உண்டியல்களுக்கு நகலும், வாங்கவேண்டிய உண்டியல்களுக்கு நகலும் ஸரியாய் விட்டதா என்று பார்த்து நம்மால் செக் செய்யப்பட்டு எழுதிவைத்திருக்கும் கணக்குடன் ஒத்துக் கொள்ளவேண்டும்.

## 4. எழுதிக்கொடுத்த உண்டியல்களில் பணம் கொடுபடாதவைகளைப் பின் கணக்காய் தாக்கல் செய்வது.

அதாவது நம்மால் எழுதிக்கொடுக்கப்பட்டிருக்கும் உண்டியல்களிற் சில அவ்விடம் போய்ச் சேராமல் இருக்கலாம். வட்டி யுண்டியல்களாய் இருந்தா

லும், உண்டியல் வைத்துக்கொண்டிருப்பவர்களுக்குப் பணம் தேவை இல்லாத காலமாய் இருந்தாலும் இவைகளை தாமதத்தின் பேரில் அனுப்பிப் பணம் வாங்குவார்கள். இப்படி நேரக்கூடிய உண்டியல்களைப்பின் கணக்காய் தாக்கல் செய்யவேண்டும். அதாவது முன் கணக்கில் பற்று எழுதிப் பின் கணக்கில் வரவு வைக்க வேண்டும் உதாரணமாக அடியிற் கண்ட கணக்கு ஒன்றை தாக்கல் செய்து விளக்குவோம்.

நம்முடைய கல்கத்தாக் கடையில் இருந்து 1910௵ மார்ச்மீ 31உ யோடு கணக்கு முடித்து வந்திருப்பதாய் வைத்துக் கொள்ளுவோம். ஷை கணக்கில் இவ்விடமிருந்து எழுதிக்கொடுத்திருக்கும் உண்டியல்கள் 10 க்கு ரூபா. 2,000 த்துக்கு உண்டியல் 9 க்கு மாத்திரம் அஸல் ரூபா. 1800-ம் வட்டி ரூபா. 60-ம் கொடுத்திருக்கிறார்கள். உண்டியல் 1 க்கு மாத்திரம் பணம் கொடுபடவில்லை. அதின் தொகை ரூபா. 200 என்று ஏற்படுகிறது.

இவ்விடருமிந்து வாங்கியனுப்பிய உண்டியல்கள் 8 க்கு ரூபா. 1,400 க்கு உண்டியல் 6 க்கு மாத்திரம் அஸல் ரூபா. 1,000-ம் வட்டி ரூபா. 50-ம் வாங்கியிருக்கிறார்கள். பாக்கி உண்டியல் 2 க்கு ரூபா. 400 வாங்கவில்லை.

வட்டிச் சிட்டைப்படி வட்டியில் ரூபா. 180 பற்று எழுதியிருக்கிறார்கள்.

எந்தப் பெயரேட்டின் கணக்கை ஸரி பார்க்கிறோமோ அதுதான் முன் கணக்கு எனப்படும். கணக்கு முடித்துவந்த தேதிக்கு பிறகு உள்ள கணக்

குகள் எந்தப் பெயரேட்டில் பதிவாகிறதோ அது தான் பின் கணக்கு என்று சொல்லப்படுகிறது.

ஷை கணக்குகளை அடியிற்கண்டவாறு தாக்கல் செய்யவேண்டும்.

"1910ஞு ஏப்ரல்மீ 30உ கல்கத்தாக்கடை முன் கணக்குப்பற்று, அவ்விடமிருந்து மார்ச்மீ 31உ ஆகமுடித்து அனுப்பிய கணக்குப்படி பணம் கொடுபடாமல் பின் கணக்காக தாக்கல் செய்து கொண்ட வகையில் 12 நம்பர் தரிசனை உண்டியல் 1க்குப் பற்று ரூபா. 200 0 0"

"கல்கத்தாக்கடை பின்கணக்கு வரவு ஷை வசம் 1910ஞு பிப்ரவரிமீ 10உ யாக அ. ரா. ம. பெயரால் பேரர் 12 நம்பர் தரிசனை உண்டியல் 1க்கு வரவு ரூபா. 200 0 0"

இவ்விதம் தாக்கல் செய்யவேண்டும்.

## 5. வாங்கியனுப்பிய உண்டியல்களில் பணம் வாங்கப் படாதவைகளைப் பின்கணக்காய் தாக்கல் செய்வது.

அதாவது இவ்விடமிருந்து நம்மால் சில உண்டியல்கள் வாங்கியனுப்பப் பட்டிருக்கலாம். அவைகளுக்கு அவ்விடத்தில் பணம் வாங்கி நம்முடைய பெயரால் வரவு வைக்கவேண்டும். ஷை உண்டியல்களை இவ்விடத்தில் நாம் வாங்கும்பொழுதே அவைகள் கையிருப்பு ரொக்கத்தில் சேர்ந்தவைகள் ஆகையால் அவைகளைக் கணக்கில் பற்று எழுதித்தான் அனுப்புவது வழக்கம். ஆனால் அவர்கள் இப்படி-

உண்டியல்களுக்கு, பணம் வாங்கித்தான் வரவு வைப்பார்கள். ஏனென்றால் தரிசனை உண்டியல்களாயிருந்து அவைகள் வந்தவுடன் வரவு வைத்துவிட்டால் நமக்கு வட்டி ஏற்பட்டுவிடும். அவர்களுக்குப் பணம் வாங்கும்வரை வட்டி கிடைக்காது.

வட்டியுண்டியல்களாயிருந்தால், அஸலை முதலில் வரவுவைத்துப் பணம் வாங்கும்பொழுது வட்டியைவரவு வைக்கவேண்டும். அப்பொழுது வாங்கும் வட்டியில் அவர்களுக்கு ஒருபாகம் ஏற்படும். ஒரு ஸமயம் உண்டியலுக்கே பணம் கிடைக்காமல் நமக்கே திருப்பியனுப்ப வேண்டியும் வரும். அப்பொழுது பற்று எழுதவேண்டும். இதுகளை உத்தேசித்து முந்தியே வரவு வைக்காமல் பணம் வாங்கித்தான் வரவு வைப்பார்கள்.

இவ்விதமாகவே இவ்விடமிருந்து எழுதிக் கொடுக்கப்படும் உண்டியல்களுக்கும் பணம் கொடுத்துத்தான் பற்று எழுதுவார்கள்.

பணம் வாங்கப்படாமல் இருக்கும் உண்டியல்களை முன்கணக்காய் வரவு வைத்துப் பின்கணக்காய்ப் பற்று எழுதவேண்டும்.

மேற்கண்டபடி முடித்துவந்த கல்கத்தாக் கடைக் கணக்கில் பணம் வாங்கப்படாமல் இருக்கிற ரூ 400க்குள்ள இரண்டு உண்டியல்களையும் தாக்கல் செய்து காட்டுவோம் :—

“1910ஞு ஏப்ரல்மீ 30உ கல்கத்தாக்கடை முன் கணக்குவரவு அவ்விடமிருந்து நாளது மார்ச்மீ 31உ யாக முடித்து அனுப்பிய கணக்குப்படி அவ்

விடத்தில் பணம் வாங்கப்படாமல் பின் கணக்காய் தாக்கல் செய்துகொண்ட வகையில் வரவு உண்டியல் 2க்கு, ரூ 400 0 0"

"கல்கத்தாக்கடை பின் கணக்குப்பற்று ஷெ வசம் 1910வரு ஜனவரிமீ 3உ யாக காரைக்குடி அ. நா. பெயரால் ஆர்டர் தரிசனை 20 செ. உண்டியல் 1க்கு ரூ 100ம் விருதுபட்டி அ. கூழையநாடார் பெயரால் 1910வரு ஜனவரிமீ 10உ யாக வட்டியுண்டியல் 1க்கு ரூ 300ம் ஆகப்பற்று முன்கணக்கு வசம் உண்டியல். 2க்கு, ரூபா. 400—0—0"

இவ்விதம் தாக்கல் செய்ய வேண்டும்.

## 6. இவ்விடமிருந்து எழுதிக்கொடுத்த உண்டியல்களுக்கு அவ்விடத்தில் வட்டி கொடுத்ததை தாக்கல்செய்வது,

இவ்விடமிருந்து நம்மால் எழுதிக் கொடுக்கப் பட்ட உண்டியல்களுக்கு அவ்விடத்தில் வட்டி கொடுத் திருப்பார்கள். அந்த வட்டித்தொகையை அப்போ தைக்கப்போது லெட்டர்மூலம் தெரிவித்திருப்பார்கள். ஆனல் அத்தொகையை தனித்தனி இவ்விடம் வரவு வைப்பதில்லை. கணக்கு முடித்துவரும் காலத்தில் தான் வரவுவைப்பது வழக்கம்.

அதை இவ்விடம் உதாரண மூலமாய் தாக்கல் செய்து காட்டுவோம்.

"1910வரு ஏப்ரல்மீ 30உ கல்கத்தாக்கடை முன் கணக்குவரவு நாளது மார்ச்மீ 31உ யாக

அவ்விடமிருந்து முடித்தனுப்பிய கணக்குப்படி இவ்விடமிருந்து எழுதிக்கொடுத்த உண்டியல்களில் உண்டியல் 9க்கு அவ்விடத்தில் பணம் கொடுத்ததில் வட்டி கொடுத்தவகையில் வரவு ரூபா. 60 0 0

வட்டிப்பற்று ஷெ. வகையில் ரூபா. 60 0 0

இவ்விதம் தாக்கல் செய்யவேண்டும்.

## 7. இவ்விடமிருந்து வாங்கி யனுப்பிய உண்டியல்களுக்கு அவ்விடத்தில் வட்டி வாங்கியதை தாக்கல் செய்வது.

இவ்விடமிருந்து வாங்கியனுப்பிய உண்டியல்களுக்கு அவ்விடத்தில் பணம் வஸூலாகும் பொழுது அப்போதைக்கப்போது வட்டி வாங்கியவிபரம் எழுதி வரும். ஆனால் அவைகளையும் இவ்விடத்தில் அப்பொழுது தாக்கல செய்வதில்லை. கணக்கு முடித்துவரும் காலத்திற்றான் தாக்கல் செய்யவேண்டும். இப்பொழுது கல்கத்தாக் கடையிலிருந்து முடித்துவந்த கணக்கில் உண்டியல் 6க்கு ரூபா. 50 வட்டி வாங்கியிருக்கிறார்கள்.

அதை அடியிற் கண்டபடி இவ்விடம் கணக்கில் தாக்கல் செய்யவேண்டும்.

"1910ளு ஏப்ரல்மீ 30உ கல்கத்தாக் கடைப் பற்று நாளது மார்ச்மீ 31உக்காக அவ்விடமிருந்து முடித்தனுப்பிய கணக்குப்படி இவ்விடமிருந்து வாங்கியனுப்பிய உண்டியல்களில் உண்டியல் 6க்கு அவ்விடம் பணம் வாங்கியதில் வட்டிக்காக வாங்கியிருக்கிற வகையில் பற்று ரூபா. 50 0 0"

"வட்டி வரவுஷெவகையில் ரூபா. 50 0 0"

இவ்விதம் தாக்கல் செய்யவேண்டும்.

## 8. வட்டி கழித்து தாக்கல் செய்வது.

நாட்டுக்கோட்டை நகரத்தார்களிற் சிலர் இதை இன்னொரு விதமாய் தாக்கல் செய்வார்கள். எப்படியென்றால் இப்பொழுது கல்கத்தாக் கடையில் ரூபா. 60 நமக்காகக் கொடுத்து வட்டிக்காகப் பற்று எழுதியிருக்கிறார்கள். நமக்காக ரூபா. 50 வட்டிக்காக வாங்கி வரவு வைத்திருக்கிறார்கள். ஒன்றிலிருந்து ஒன்றைக் கழித்தால் நமக்காக ரூபா. 10 அவர்கள் அதிகமாய்க் கொடுத்திருப்பதாய் ஏற்படுகிறது. ஷெ ரூபாய் பத்தை மாத்திரம் வரவு வைத்து செலவு எழுதினால் போதுமானது என்பதுதான். ஷெ விவரம் அடியில் தாக்கல் செய்து காட்டப்படுகிறது.

"1910௵ ஏப்ரல்௴ 30௳ கல்கத்தாக் கடை வரவு நாளது மார்ச்௴ 31௳ யாக அவ்விடமிருந்து முடித்தனுப்பிய கணககுப்படி இவ்விடமிருந்து எழுதிக் கொடுத்த உண்டியல்களில் அவ்விடத்தில் பணம் கொடுத்த உண்டியல் 9க்கு வட்டி கொடுத்தது ரூபா. 60-க்கு இவ்விடமிருந்து வாங்கியனுப்பிய உண்டியல்களில் அவ்விடத்தில் பணம் வாங்கிய உண்டியல் 6-க்கு வட்டி வாங்கிய ரூபா. 50 நீக்கி வரவு ரூபா. 10 0 0"

"வட்டிப்பற்று ஷெ வகையில் ரூபா. 10 0 0"

இப்படி எழுதுவதுண்டு.

இப்படி எழுதினால் வருமான வரிவிதிக்கும் அதிகாரிகள் ஆக்ஷேபிக்கிறார்கள். வரப் பட்ட வரும்படி

களுக்குத் தனித் தனி கணக்கும் அது ஸம்பந்தமாய் நேரக் கூடிய செலவுகளுக்கு தனித்தனி கணக்கும் கேட்கிறார்கள்; அதற்கு இது ஸரியாய் வராது.

## 9. நடப்புக் கணக்கிற்கு வட்டி தாக்கல் செய்வது.

அதாவது ஒவ்வொரு வருஷமும் மார்ச்மீ 31உ ஒவ்வொரு கடையிலிருந்தும் நமக்கு கணக்கு முடித்து வந்தால் பலதேதிகளில் நம்மால் அவர்கள் கணக்கில் வரவா யிருக்கும் தொகைகளுக்கு நமக்கு அவர்கள் வட்டி தரவேண்டும்.

நமக்காகத் தொகை கொடுக்கப்பட்டு அவர்களு டைய கணக்கில் நம்முடைய பெயரால் பற்றுயிரு கும் தொகைளுக்கு நாம் அவர்களுக்கு வட்டி கொடுக்க வேண்டும். அதற்கு வட்டி ஏற்பாடு ஒவ்வொரு கடை யில் ஒவ்வொரு விதமா யிருக்கும்.

பாங்குகளாய் இருந்தால் நம்முடைய பெயரால் அதிகப் பற்று யிருக்கும் தொகைகளுக்கு அதிக வட்டி யும், நம்முடைய பெயரால் அதிக வரவாயிருக்கும் தொகைகளுக்கு குறைந்த வட்டியும் தான் போடுவார் கள்.

இப்படிப்பட்ட கணக்குகளுக்கு ஆங்கிலத்தில் கர் ரெண்டு அக்கவுண்ட் என்பதுண்டு.

அவர்களே இதை பற்று வரவு கழித்துத்தான் கணக்கு முடிப்பார்கள். நாட்டுக்கோட்டை நகரத் தார்களும் அப்படித்தான் கணக்குமுடிப்பது வழக்கம்.

இப்பொழுது கல்கத்தாவில் இருந்து முடித்து வந்த கணக்கில் "வட்டிச் சிட்டைப்படி வட்டியில் அதிகப்பற்று ரூபா. 180 0 0" என்று எழுதியிருக்கிறது. அதாவது நாம் அவர்களுக்குக் கொடுக்கவேண்டிய வட்டி. ஜாஸ்தி என்றும், அவர்கள் நமக்குத் தரவேண்டியவட்டி கம்மி யென்றும் அதைக் கழித்துத் தான் அதிகப்பற்று ரூபா. 180 என்றும் ஏற்படுகிறது.

அதை அடியில் வருமாறு தாக்கல் செய்ய வேண்டும்.

"1910ௌ ஏப்ரல்மீ 30உ கல்கத்தாக்கடை வரவு நாளது மார்ச்மீ 31உக்காக அவ்விடமிருந்து முடித்தனுப்பிய கணக்குடன் வந்த வட்டிச்சிட்டைப்படி வட்டியில் அதிக வரவு ரூபா. 180 0 0"

"வட்டிப்பற்று ஷெ வகையில் நடப்புக் கணக்கிற்கு அதிகப்பற்று வட்டி ரூபா. 180 0 0"

என்று எழுதவேண்டும்.

## 10. முன்பாராக்களில் கண்டபடி கல்கத்தாவில் இருந்து முடித்துவந்த கணக்கை ஒன்றுசேர்த்துப் பதிவது

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | ப | ரூ | அ | ப |
| 1910ௌ ஏப்ரல்மீ 30உ கல்கத்தாக் கடை முன் கணக்குப்பற்று, அவ்விடமிருந்து மார்ச்மீ 31உக்காக முடித்துவந்த | | | | | | |

| | பற்று | | | வரவு. | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | ப | ரூ | அ | ப. |
| கணக்குப்படி, இவ்விடமிருந்து எழுதிக் கொடுத்த உண்டியல்களில் பணம் கொடுபடாமல் இருக்கிற 12 நம்பர் தரிசனை உண்டியல் 1க்கு பின் கணக்கு வசம் பற்று ரூபா. | 200 | 0 | 0 | ... | ... | ... |
| கல்கத்தாக்கடை பின் கணக்கு வரவு ஷை வசம் ஷை விபரப்படி வரவு ரூபா. | ... | ... | ... | 200 | 0 | 0 |
| உடன்பற்று அவ்விடமிருந்து ஷை தேதிக்காக முடித்தனுப்பிய கணக்குப்படி முன் கணக்கு வசம் நாளது ௵ ஜனவரி௴ 3உ யாக காரைக்குடி அ. நா. பெயரால் ஆர்டர் தரிசனை 20 நம்பர் உண்டியல் 1க்கு ரூபா. 100ம், விருதுபட்டி அ. கூழைய நாடார் பெயரால், பேரர் நாளது ௵ ஜனவரி௴ 10உ யாகவட்டி உண்டியல் 1க்கு ரூபா. 300ம், ஆகப்பற்று முன் கணக்கு வசம் உண்டியல் 2க்கு, ரூபா. | 400 | 0 | 0 | ... | ... | ... |

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ௹ | அ | ப | ௹ | அ | ப |
| கல்கத்தாக் கடை முன் கணக்கு வரவு ௸ வகையில் ௸ விபரப்படி வரவு ரூபா. | ... | ... | ... | 400 | 0 | 0 |
| இதுவும் வரவு ௸ தேதியாக அவ்விடமிருந்து முடித்தனுப்பிய கணக்குப்படி இவ்விடமிருந்து எழுதிக் கொடுத்த உண்டியல்களில் உண்டியல் 9க்கு ரூபா. 1,800கொடுத்தவகையில்வட்டிகொடுத்தது ரூபா. | ... | ... | ... | 60 | 0 | 0 |
| வட்டிப்பற்று ௸வகையில் வட்டிகொடுத்து ரூபா. | 60 | 0 | 0 | ... | ... | ... |
| கல்கத்தாக் கடை முன் கணக்குப்பற்று இவ்விடமிருந்து வாங்கி யனுப்பிய உண்டியல்களில் அவ்விடம் உண்டியல் 6 க்குப் பணம் வாங்கியதில் வட்டி வாங்கிய வகையில் பற்று ரூபா. | 50 | 0 | 0 | ... | ... | ... |
| வட்டி வரவு ௸ வகையில் ரூபா. | ... | ... | ... | 50 | 0 | 0 |

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| உடன் பற்று கல்கத்தாக்கடையில் இருந்து நாளது மார்ச்மீ 31வுக்காக முடித்த கணக்குடன் வந்த வட்டிச்சிட்டைப் படி வட்டியில் அதிகப்பற்று ரூபா. | 180 | 0 | 0 | ... | ... | ... |
| கல்கத்தாக் கடை முன் கணக்கு வரவு ஷை விபரப் படி ஷை வகையில் ரூபா. | ... | ... | ... | 180 | 0 | 0 |
| ஆக ரூபா. | 890 | 0 | 0 | 890 | 0 | 0 |

இவ்விதம் தாக்கல் செய்ய வேண்டும்.



## அத்தியாயம் IV.

## பேயரேட்டு விளக்கம்.

### 1. குறிப்பில் இருந்து பெயரேடு பதிவது.

பெயரேடுகளில் தலைவரிசையில் இன்னார் அல்லது இன்ன பற்று வரவு கணக்கு என்று எழுத வேண்டும்.

ஒரு கணக்குப் பதிய ஆரம்பித்தவுடன அஸல் குறிப்பிற் கண்டபடி "இன்ன வருஷம் இன்ன மாதம் இத்தனும்வ பற்று" என்று எழுதினல்போதுமானது

வகை விபரங்களை அஸல் குறிப்பிற் கண்டபடி எழுத வேண்டும்.

சில இடங்களில் ஷை விபரப்படி என்று கணக்கு எழுதியிருக்கும் அவைகளைப் பெயரேட்டில் பதியும் பொழுது அதுபோல் எழுதிவிடக் கூடாது.

ஷை விபரம் என்பது என்ன என்று மேல்வரியில் பார்த்து அதுபோல் விபரம் கண்டு எழுத வேண்டும்

### 2. செலவு கணக்கைப் பதிவது.

செலவு கணக்கைப்பதியும் பொழுது அது எந்தச் செலவு கணக்கு என்பதை நன்றாய்க் கவனித்து அந்தந்த செலவேட்டில் பதிய வேண்டும். உதாரணமாக, ஸாப்பாட்டுச் செலவு கணக்கு என்றும், குடும்பச் செலவு கணக்கு என்றும், வட்டிச் செலவு வரவு கணக்கு என்றும், வட்டம் கமிஷன் செலவு வரவு கணக்கு என்றும், வாடகைச் செலவு வரவு கணக்கு,

என்றும், கடைச்செலவு கணக்கு என்றும் இப்படியெல்லாம் பலவிதங்களாய் ஏற்படக்கூடிய தாகையால் அதனை அந்தந்தச் செலவேட்டில்பதிய வேண்டும்.

செலவு கணக்கு எப்பொழுது பதிந்தாலும் அச்செலவை வருமான வரிவிதிக்கும் அதிகாரிகள் தனித்தனி கண்டுபிடிக்கக் கூடிய ஏற்பாட்டுடன் பதிய வேண்டும். வருமான வரிவிதிக்கும் அதிகாரிகளுக்கு வரவு அயிட்டத்தைப் போலவே செலவு அயிட்டமும் தனித்தனியாயும் விபரமாயும் காட்டப்பட வேண்டும். சில்லரையாய் எதிர் பார்க்கப் படாமல் வரக் கூடிய செலவுகளைக் கடைச்செலவு என்னும் பெயரேட்டில் பதிய வேண்டும்.

## 3. வரவு கணக்கைப் பதிவது.

அந்தந்த இனங்கள் பெயரால் வரவா யிருக்கும் தொகைகளை அந்தந்தப் பேயரேட்டில் வரவு கலத்தில் பதியவேண்டும். வரும்படி ரூபமாய் அதாவது, வட்டி வரவு, வாடகை வரவு, கமிஷன் வட்டம் வரவு, இவைகளைத் தனித்தனி ஏட்டில் வரவு வைக்க வேண்டும்.

முன் பாராக்களில் சொன்னபடி வரவு அயிட்டங்களை தனித்தனிபாய் கணக்கிடுவதற்கு வருமானவரி விதிக்கும் அதிகாரி களுக்கு சுலபமாய் இருக்க வேண்டும்.

## 4. வருஷ முடிவில் தொகைகட்டுவது.

வருஷமுடிவில் அந்தந்தப் பெயரேட்டில் கணக்குகள் பதிந்தவுடன் பற்று வரவு அயிட்டங்களைத் தனித்தனியாய்த்தொகை கட்ட வேண்டும்.

அப்படிக் கட்டின ஒவ்வொரு பெயரேட்டிலும் வட்டி தாக்கலாய் விட்டதா என்று பார்க்க வேண்டும். வட்டி தாக்கலாகாத கணக்குகளை வட்டி தாக்கல் செய்யவேண்டும். அப்படி தாக்கல் செய்த பிறகு இனவழி ஏடுகள், நிலவரும்படிப் பற்று வரவு முதலிய வருமான வரிக்கு ஸம்பந்தப் படாத ஏடுகளை மாத்திரம் பற்று வரவு கழித்துக் கட்ட வேண்டும். வட்டிப் பற்று வரவு, வாடகைப் பற்று வரவு, வட்டம் கமிஷன் பற்று வரவு, இதர வியாபாரங்களின் பற்று வரவு முதலிய வருமான வரிக்குள்ளான கணக்குகளை பற்று வரவு கழிக்காமல் கட்டிவைக்க வேண்டும்.

## 5. குறிப்பில்லாமல் கணக்கு தாக்கல்செய்வது.

சில பெயரேடுகளைத் தொகைகட்டி ஒரு ஏட்டி லிருந்து மற்றொரு ஏட்டிற்குத் தொகைகொண்டுபோக வேண்டியதாய் இருக்கும். அவைகளைக் குறிப்பு மூலம் எழுத வேண்டும் என்பதில்லை. குறிப்பில்லாமலே திட்டக் கசகல் வராமல் தாக்கல் செய்து விடலாம். அப்படி தாக்கல் செய்யும் வழியை உதாரண மூலமாய் விளக்குவோம். சென்னப்பட்டணத்தில், அ. ரு. வெங்கடாசலம் செட்டியார் என்பவருக்கு ஷை யார் தகப்பனார் ரூபா. 15,000 மூலதனமாகக் கொடுத்து வியாபாரம் நடத்தச் சொன்னதில் ஷை வெங்கடாசலம் செட்டியார் பலசரக்குகளும், ஜவுளிகளும், ஓல் ஸேலாய் வாங்கி வியாபாரம் செய்து வந்தும், ரொக்கக் கொடுக்கல், வாங்கல் செய்தும் நிலங்கள் வாங்கி ஸாகுபடி செய்தும் வந்தார். ஷை தொழில்களை 1910ஆம்

ஏப்ரல்மீ ௧௨ முதல் ௧௯௧௧௵ மார்ச்மீ ௩௧௨ வரைக்கும் நடத்தி கையிருப்பு சரக்குகளேயும் விற்று, அடியிற்கண்ட பெயரேடுகள் மிகுதி இருக்கின்றன.

1. ஸ்வாமிகள் வரவு
2. நிலம் கொள்முதல் பற்று
3. நகை ,,
4. வீடு ,,
5. ஸாமான் ,,
6. புஸ்தகம் ,,
7. பங்கு முதலுக்கு வரவு
8. சில்லரை இனவழிப்பற்று
9. சில்லரை இனவழி வரவு
10. வட்டிப் பற்று வரவு
11. வட்டம் கமிஷன் பற்று வரவு
12. வாடகைப் பற்று வரவு
13. ஸ்டாம்புச் செலவு
14. கடைச் செலவு
15. பலசரக்குப் பற்று வரவு
16. ஜெவுளிப் பற்று வரவு
17. ஸாப்பாட்டுப் பற்று
18. ஸாதல் வார்ப் பற்று
19. லாபக் கணக்கு வரவு
20. நில வரும்படி வரவு
21. ஆதாய வரவு
22. மதுராஸ் பாங்கிப் பற்று

ஷை பெயரேடுகளை அடியில் விபரமாய்க் காட்டி, குறிப்பில்லாமல் பதியும் விதத்தையும் விளக்கப்படுகிறது.

1911-ளு மார்ச்மீ 31உ சென்னை, அ. ரு. வேங்கடாஜலம் செட்டியாருடைய பெயரேட்டுப் புஸ்தகத்தில் அடியிற் கண்டவாறு பெயரேடுகள் மிஞ்சியிருக்கின்றன.

| நெம்பர். | பெயரேட்டுப் பக்கம். | பெயரேடு. | பற்று. ரூ | அ. | ப. | வரவு. ரூ | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 1 | ஸ்வாமிகள் வரவு ... ... ... ... | ... | ... | ... | 75 | 0 | 0 |
| 2 | 3 | நிலம் கொள்முதல் பற்று ... ... ... | 10,000 | 0 | 0 | ... | ... | ... |
| 3 | 4 | நகை கொள்முதல் பற்று ... ... ... | 1,300 | 0 | 0 | ... | ... | ... |
| 4 | 5 | வீடு கொள்முதல் பற்று ... ... ... | 8,000 | 0 | 0 | ... | ... | ... |
| 5 | 7 | ஸாமான் கொள்முதல் பற்று ... ... | 1,000 | 0 | 0 | ... | ... | ... |
| 6 | 8 | புஸ்தகம் கொள்முதல் பற்று ... ... | 200 | 0 | 0 | ... | ... | ... |
| 7 | 9 | பங்கு முதலுக்கு அ.ரு. வரவு ... ... | ... | ... | ... | 15,000 | 0 | 0 |
| 8 | ... | 10 முதல் 75 வரை சில்லரை இனவழியேடு 7க்கு பற்று ... ... ... ... | 3,500 | 0 | 0 | ... | ... | ... |
| 9 | ... | ஷை பக்கங்களில் இனவழி 5க்கு அதிக வரவு | ... | ... | ... | 8,925 | 0 | 0 |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 10 | 80 | வட்டிப் பற்று வரவு ... ... ... | 445 | 8 | 0 | 1,815 | 6 | 0 |
| 11 | 85 | வட்டம் கமிஷன் பற்று வரவு ... ... | 130 | 0 | 0 | 480 | 0 | 0 |
| 12 | 90 | வாடகைப் பற்று வரவு ... ... ... | 330 | 0 | 0 | 1,200 | 8 | 0 |
| 13 | 95 | ஸ்டாம்புச் செலவு ... ... ... ... | 10 | 8 | 0 | ... | ... | ... |
| 14 | 100 | கடைச் செலவு ... ... ... ... | 180 | 0 | 0 | ... | ... | ... |
| 15 | 102 | பலசரக்கு வியாபார ஏட்டில் கையிருப்பு சரக்குகளையும் விற்று பற்று நீக்கி வரவு ... | ... | ... | ... | 943 | 0 | 0 |
| 16 | 110 | ஜவுளி வியாபாரத்தில் மீதசரக்குகளையும் விற்று வரவு நீக்கி அதிகப்பற்று ... ... | 15 | 0 | 0 | ... | ... | ... |
| 17 | 115 | குடும்ப ஸாப்பாட்டுச் செலவுப்பற்று... ... | 180 | 0 | 0 | ... | ... | ... |
| 18 | 120 | குடும்ப ஸாதல்வார் செலவுப்பற்று ... ... | 130 | 0 | 0 | ... | ... | ... |
| 19 | 124 | லாபக்கணக்கு வரவு ... ... ... | ... | ... | ... | 145 | 0 | 0 |
| 20 | 130 | நிலவரும்படி வரவு... ... ... | ... | ... | ... | 840 | 0 | 0 |
| 21 | 140 | ஆதாயவரவு ... ... ... ... | ... | ... | ... | 7 | 0 | 0 |
| 22 | 150 | மதுராஸ் பாங்கிப் பற்று ... ... ... | 4,000 | 0 | 0 | ... | ... | ... |
| | | ஆக... | 29,421 | 0 | 0 | 29,430 | 14 | 0 |
| | | ஆகப்பற்று... | ... | ... | ... | 29,421 | 0 | 0 |
| | | பற்று நீக்கி இருப்பு... | ... | ... | ... | 9 | 14 | 0 |

1. ஸ்வாமிகள் வரவு ரூபா. 75—0—0

இதை இவ் வேட்டிலேயே வைக்கவேண்டியது. பிரார்த்தனை நிறைவேற்றும் காலத்தில் இதைக் கொடுத்து பற்று எழுதவேண்டும்.

2. நிலம் கொள்முதல் பற்று ரூபா. 10,000—0—0

ஸ்தாவர ஸொத்துக் கொள்முதலாகையால் இது எக்காலமும் இவ் வேட்டிலேயே இருக்கவேண்டும் முதலுடன் சேரக்கூடியது.

3. நகை கொள்முதல் பற்று ரூபா. 1,300—0—0

இது எக்காலமும் முதலுடன் சேரவேண்டியதாகையால் இதுவும் இவ் வேட்டிலேயே இருக்கவேண்டியது.

4. வீடு கொள்முதல் பற்று ரூபா. 8,000—0—0

இதுவும் எக்காலமும் முதலுடன் சேரவேண்டியதாகையால் இதுவும் இவ் வேட்டிலேயே இருக்க வேண்டயதுதான்.

5. ஸாமான் கொள்முதல் பற்று ரூபா. 1,000—0—0

இதுவும் முதலுடன் சேரவேண்டியதாகையால் இதுவும் இவ்வேட்டிலேயே இருக்கவேண்டியதாதுன்.

6 புஸ்தகம் கொள்முதல் பற்று ரூபா. 200—0—0

இதுவும் முதலுடன் சேரவேண்டியதாகையால் இதுவும் இவ்வேட்டிலேயே இருக்கவேண்டியதுதான்.

7. பங்கு முதலுக்கு அ.ரு. வரவு ரூபா. 15,000—0—0

இது தகப்பனரால் பங்கு முதலுக்காகக் கொடுக்கப்பட்டு இருக்கும் தொகை. இதைஎந்தக்காலத்திலு

வாப்ஸ் கொடுக்கவேண்டிய தொகைபோல் பாவிக்க வேண்டும்.

**8. சில்லரை இனவழி ஏடு 7க்கு பற்று ரூபா. 3,500—0—0**

இவைகள் வட்டிக்காகக் கொடுக்கப்பட்டிருக்கும் தொகைகள் 1911ஹு ஏப்ரல்மீ 1உ முதல் இவைகளுக்கு வட்டி கிடைக்கும். இதுவும் முதலுடன் சேர வேண்டியதுதான்.

**9. இனவழி 5க்கு அதிக வரவு ரூபா. 8,925—0—0**

இவைகள் இனவழி 5-இடம் கடன் வாங்கியிருக்கும் தொகைகள். 1911ஹு ஏப்ரல்மீ 1உ முதல் வட்டியுடன் கொடுக்கவேண்டும்.

**10. வட்டிப் பற்று வரவு ரூபா. 445—8—0 1,815—6—0.**

இவ் வேட்டின் தொகைகளைக் குறிப்பில்லாமல் முறையேகடைச் செலவு ஏட்டிற்கும் லாப வரவு ஏட்டிற்கும் கொண்டு போகவேண்டும். ஷ ஏட்டில் அடியிற் கண்டவாறு தாக்கல் செய்ய வேண்டும்.

80. வட்டிப் பற்று வரவு ஏடு.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1910ஹு ஏப்ரல்மீ 1உ. முதல் 1911ஹு மார்ச்மீ 31உ வரை பற்று வரவு ... ... ரூ. | 445 | 8 | 0 | 1,815 | 6 | 0 |

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| வரவு குறிப்பில்லாமல் வட்டிச் செலவை 100ம் பக்கம் கடைச் செலவு ஏட்டில் தாக்கல் செய்த வகையில் வரவு ... ... ரூபா. ... | ... | ... | | 445 | 8 | 0 |
| பற்று குறிப்பில்லாமல் வட்டி வரவை 124ம் பக்கம் லாபக் கணக்கு ஏட்டில் தாக் கல் செய்த வகையில் பற்று ... ... ரூ | 1,815 | 6 | 0 | ... | ... | ... |
| பற்று வரவுநேர் ரூ | 2,260—14—0 | | | 2,260—14—0 | | |

இவ்விதம் தாக்கல் செய்யவேண்டும்

**11.** வட்டம் கமிஷன் பற்று வரவு ரூ **130-0-0 480-0-0.**

இவ் வேட்டின் தொகைகளேயும் குறிப்பில்லாமல் முறையே கடைச் செலவு ஏட்டிற்கும் லாபக் கணக்கு ஏட்டிற்கும் கொண்டு போகவேண்டும். ஷ ஏட்டில் அடியிற் கண்டவாறு தாக்கல் செய்யவேண்டும்

85. வட்டம் கமிஷன் பற்று வரவு.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| 1910ஞு ஏப்ரல்மீ 1உ முதல் 1911ஞு மார்ச்மீ 31உ வரை பற்று | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| வரவு ... ... ரூபா. | 130 | 0 | 0 | 480 | 0 | 0 |

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ | பை | ரூ. | அ | பை |
| வரவு குறிப்பில்லாமல் வட்டம் கமிஷன் செலவை 100ம் பக்கம் கடைச் செலவு எட்டில் தாக்கல் செய்த வகையில் வரவு ரூ | ... | ... | ... | 130 | 0 | 0 |
| பற்று குறிப்பில்லாமல் வட்டம் கமிஷன் வரவை 124ம் பக்கம் லாபக் கணக்கு எட்டில் தாக்கல் செய்த வகையில் பற்று ரூ | 480 | 0 | 0 | ... | ... | ... |
| ஆகபற்று வரவுநேர் ரூ | 610—0—0 | | | 610—0—0 | | |

இவ்விதம் தாக்கல் செய்யவேண்டும்.

**12.** வாடகைப் பற்று வரவு நுபா. **330-0-0 1,200-8-0.**

இவ்வேட்டின் தொகைகளேயும் குறிப்பில்லாமல் முறையே கடைச் செலவு எட்டிற்கும் லாபக் கணக்கு எட்டிற்கும் கொண்டுபோகவேண்டும். ஷை எட்டில் அடியிற் கண்டவாறு தாக்கல் செய்யவெண்டும்.

## ௯௦. வாடகைப் பற்று வரவு.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. |
| 1910௵ ஏப்ரல்௴ 1௳ முதல் 1911௵ மார்ச்௴ 31௳ வரை பற்று வரவு ... ரூபா. | 330 | 0 | 0 | 1,200 | 8 | 0 |
| வரவு குறிப்பில்லாமல் வாடகைச் செலவை 100ம்பக்கம் கடைச்செலவு எட்டில் தாக்கல் செய்த வகையில் வரவு ... ரூபா. | ... | ... | ... | 330 | 0 | 0 |
| பற்று குறிப்பில்லாமல் வாடகை வரவை 124-ம் பக்கம் லாபக் கணக்கு எட்டில் தாக்கல் செய்த வகையில் பற்று ... ரூபா. | 1,200 | 8 | 0 | ... | ... | ... |
| ஆக பற்று வரவு நேர் ரூ. | 1,530—8—0 | | | 1,530—8—0 | | |

இவ்விதம் தாக்கல் செய்ய வேண்டும்.

**13. ஸ்டாம்புச் செலவு ரூபா. 10—8—0**

இவ்வேட்டின் தொகையை குறிப்பில்லாமல் கடைச்செலவு ஏட்டில் தாக்கல் செய்ய வேண்டும்.

95. ஸ்டாம்புச் செலவு.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1910ஆம் ஏப்ரல்மீ 1உ முதல் 1911ஆம் மார்ச்மீ 31உ வரை பற்று ரூபா. | 10 | 8 | 0 | | | |
| வரவு குறிப்பில்லாமல் ஸ்டாம்புச் செலவை 100ம் பக்கம் கடைச்செலவு ஏட்டில் தாக்கல் செய்தவகையில் வரவு ரூபா. | ... | ... | ... | 10 | 8 | 0 |
| ஆக பற்று வரவு நேர் ரூ | 10—8—0 | | | 10—8—0 | | |

இவ்விதம் தாக்கல் செய்ய வேண்டும்.

**14. கடைச் செலவுப் பற்று ரூபா. 180—0—0**

தொழில் ஸம்பந்தமான ஸிப்பந்திகள் வகையரா விற்கு செலவான மற்றச்செலவுகளை இவ்வேட்டில் தாக்கல் செய்யவேண்டும்.

## 100. கடைச்செலவு கணக்கு.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1910ஹு ஏப்ரல் மீ 1உ முதல் 1911 ஹு மார்ச்மீ 31உ வரை செலவானது கடை ஸம்பந்தமான ஸிப்பந்திகளுக்கு சம்பளம் வகையராக்கள் கொடுத்த வகையில் பற்று. ... ரூபா. | 180 | 0 | 0 | ... | ... | ... |
| பற்று குறிப்பில்லாமல் 80 வட்டி யேட்டு வசம் பற்று. ரூபா. | 445 | 8 | 0 | ... | ... | ... |
| இதுவும் பற்று குறிப்பில்லாமல் 85 வட்டம் கமிஷன் ஏட்டு வசம் ரூபா. | 130 | 0 | 0 | ... | ... | ... |
| இதுவும் பற்று குறிப்பில்லாமல் 90 வாடகை ஏட்டு வசம் பற்று ரூபா. | 330 | 0 | 0 | ... | ... | ... |
| இதுவும் பற்று குறிப்பில்லாமல் 95 ஸ்டாம்பு ஏட்டு வசம் ... ரூபா. | 10 | 8 | 0 | ... | ... | ... |
| இதுவும் பற்று குறிப்பில்லலாமல் 110 ஜெவுளி | | | | | | |

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| வியாபார ஏட்டில் வரவு நீக்கிப்பற்று(நஷ்டம்)ரூபா. | 15 | 0 | 0 | ... | ... | ... |
| ஆ பற்று ரூ | 1,111—0—0 | | | ... | ... | ... |

என்று இவ்விதம் கட்டவேண்டும்.

15. பலசரக்கு வியாபாரப் பற்று வரவு ஏட்டில் பற்று நீக்கி வரவு ரூபா. 943—0—0.

இவ்வேட்டின் தொகையையும் குறிப்பில்லாமல் லாபக் கணக்கு ஏட்டிற்குக் கொண்டு போகவேண்டும்.

102. பலசரக்குப் பற்று வரவு கணக்கு.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1910ஞ ஏப்ரல்மீ 1உ முதல் 1911ஞ மார்ச் மீ 31உ வரை பற்று நீக்கி அதிக வரவு ரூ | ... | ... | ... | 943 | 0 | 0 |
| பற்று குறிப்பில்லாமல் 124 லாப ஏட்டு வசம் தாக்கல் செய்த வகையில் பற்று ரூபா. | 943 | 0 | 0 | ... | ... | ... |
| ஆ பற்று வரவுநேர் ரூ | 943—0—0 | | | 943—0—0 | | |

இவ்விதம் தாக்கல் செய்யவேண்டும்.

**16 ஜெவுளி வியாபாரப் பற்று வரவு ஏட்டில் வரவு நீக்கி அதிகப் பற்று ரூ 15—0—0**

இவ் வேட்டின் தொகையையும் குறிப்பில்லாமல் கடைச்செலவு ஏட்டிற்குக் கொண்டு போகவேண்டும்.

110. ஜெவுளிப் பற்று வரவு கணக்கு.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1910ஹ ஏப்ரல்மீ 1உ முதல் 1911ஹ மார்ச்மீ 31உ வரை வரவு நீக்கி அதிகப் பற்று ... ... ரூ | 15 | 0 | 0 | ... | ... | ... |
| வரவு குறிப்பில்லாமல் இந்த நஷ்டத்தைக் கடைச் செலவு 100ம் பக்கத்தில் தாக்கல் செய்த வகையில் வரவு ... ... ரூ | ... | ... | ... | 15 | 0 | 0 |
| ஆகப் பற்று வரவு நேர் ரூ | 15—0—0 | | | 15—0—0 | | |

இவ்விதம் தாக்கல் செய்யவேண்டும்.

**17.** தூம்ப ஸாப்பாட்டுச் சேலவுப் பற்று ரூபா. **180-0-0**

இவ் வேட்டின் தொகை குடும்ப ஸம்பந்தமான செலவாகையால் இச் செலவைக் குறிப்பில்லாமல் 120 குடும்பஸாதல்வார் செலவு ஏட்டிற்குக் கொண்டுபோக வேண்டும்.

### 115. குடும்ப ஸாப்பாட்டுச் செலவு கணக்கு.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1910ஆம் ஏப்ரல்மீ 1உ முதல் 1911ஆம் மார்ச்மீ 31உ வரை பற்று ... ... ரூ | 180 | 0 | 0 | ... | ... | ... |
| வரவு குறிப்பில்லாமல் இச் செலவை 120 ஸாதல்வார் செலவு ஏட்டில் தாக்கல் செய்த வகையில் வரவு ... ... ரூ | ... | ... | ... | 180 | 0 | 0 |
| ஆகபற்றுவாவுநேர் ரூ | 180—0—0 | | | 180—0—0 | | |

18 குடும்பஸாதல்வார் செலவு கணக்குப்பற்று நபா 130-0-0

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1910 ஆம் ஏப்ரல்மீ 1உ முதல் 1911 ஆம் மார்ச்மீ 31உ வரை பற்று ... ரூ | 130 | 0 | 0 | ... | ... | ... |
| இதுவும் பற்று ஸாப்பாட்டு ஏட்டுவசம் ரூ | 180 | 0 | 0 | ... | ... | ... |
| ஆகப் பற்று ரூ | 310—0—0 | | | ... | ... | ... |

என்று இவ்விதம் தொகை கட்ட வேண்டும்.

**19. லாபக் கணக்கு வரவு ரூபா. 145—0—0**

1910ஹு ஏப்ரல்மீ 1உ முதல் 1911ஹு மார்ச்மீ 31உ வரை சில்லரை லாபங்களாக வரவா யிருக்கும் இவ்வேட்டில் மற்ற லாப ஸம்பந்த மான ஏடுகளைக் குறிப்பில்லாமல் கொண்டுவர வேண்டும்

124. லாபக் கணக்கு வரவு.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1911ஹு மார்ச்மீ 31உ வரை வரவு ரூபா. ... ... ... | | | | 145 | 0 | 0 |
| இதுவும் வரவு குறிப்பில்லாமல் 80 வட்டி யேட்டு வசம் ... ரூபா. ... ... ... | | | | 1,815 | 6 | 0 |
| இதுவும் வரவு குறிப் பில்லாமல் 85 வட்டம் கமிஷன் ஏட்டு வசம் ரூபா. ... ... ... | | | | 480 | 0 | 0 |
| இதுவும் வரவு குறிப்பில்லாமல் 90 வாடகை ஏட்டு வசம் ... ரூபா. ... ... ... | | | | 1,200 | 8 | 0 |
| இதுவும் வரவு குறிப்பில்லாமல் 102 | | | | | | |

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| பலசரக்கு வியாபார எட்டுவசம் ரூபா. ... ... ... | | | | 943 | 0 | 0 |
| ஆக வரவு ரூபா. ... | | | | 4,583—14—0 | | |

என்று இவ்விதம் தாக்கல் செய்யவேண்டும்.

**20.** நில வரும்படி வரவு நுபா. **840—0—0.**

இவ்வேட்டின் தொகையையும் குறிப்பில்லாமல் ஆதாய வரவு எட்டில் தாக்கல் செய்யவேண்டும்.

130. நில வரும்படி வரவு கணக்கு.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1910ஆம் ஏப்ரல்மீ 1உ முதல் 1911ஆம் மார்ச்மீ 31உ வரை பற்று நீக்கி அதிக வரவு ... ரூ... ... ... | | | | 840 | 0 | 0 |
| பற்று குறிப்பில்லாமல் 140 ஆதாய வரவு எட்டில் தாக்கல் செய்த வகையில் பற்று ... ... ரூ | 840 | 0 | 0 | ... | ... | ... |
| பற்று வரவு நேர் ஆக ரூ | 840--0—0 | | | 840—0—0 | | |

என்று இவ்விதம் தாக்கல் செய்யவேண்டும்.

**21. ஆதாய வரவு ரூபா. 7—0—0**

இவ்வேட்டில் வருமான வரிக்குஸம்பந்தமில்லாத நிலவரும்படி ஏட்டை தாக்கல் செய்யவேண்டும்.

140. ஆதாயவரவு கணக்கு.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1910ளு ஏப்ரல்மீ 1உ முதல் மார்ச்மீ 31உ வரை வரவு ரூபா. ... ... ... | | | | 7 | 0 | 0 |
| இதுவும் வரவு குறிப்பில்லாமல் 130 நில வரும்படி யேட்டுவசம் ரூபா. ... ... ... | | | | 840 | 0 | 0 |
| ஆக ரூபா. | | | | 847—0—0 | | |

என்று இவ்விதம் தாக்கல் செய்யவேண்டும்.

**22 மதுராஸ் பாங்கிப் பற்று ரூபா. 4,000—0—0.**

150. மதுராஸ் பாங்கிப் பற்று வரவு கணக்கு.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை | ரூ | அ | பை |
| 1910ளு ஏப்ரல்மீ 1உ முதல் 1911ளு மார்ச்மீ 31உ வரை வரவு நீக்கி அதிகப்பற்று ரூபா.... ... ... | 4,000—0—0 | | | | | |

இந்தத்தொகை இவ்வேட்டிலேயே இருக்கவேண்டியது.

மேற்கண்டபடி குறிப்பில்லாமல் கணக்கு தாக்கல் செய்யலாம். அப்படிச் செய்தபிறகு அடியிற்கண்ட 14 ஏடுகள் மிஞ்சியிருக்கின்றன.

## 6. குறிப்பில்லாமல் கணக்கு தாக்கல் செய்த பிறகு மிச்சமாயுள்ள பெயரேடுகளை விளக்குவது.

| | பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ | அ | பை. | ரூ | அ | பை. |
| 1. ஸ்வாமிகள் வரவு ரூ | ... | ... | ... | 75 | 0 | 0 |
| 3. நிலம் கொள்முதல் பற்று ... ரூ | 10,000 | 0 | 0 | ... | ... | ... |
| 4. நகை கொள்முதல் பற்று ... ரூ | 1,300 | 0 | 0 | ... | ... | ... |
| 5. வீடு கொள்முதல் பற்று ... ரூ | 8,000 | 0 | 0 | ... | ... | ... |
| 7. ஸாமான் கொள் முதல் பற்று ரூ | 1,000 | 0 | 0 | ... | ... | ... |
| 8, புஸ்தகம் கொள் முதல் பற்று ரூ | 200 | 0 | 0 | ... | ... | ... |
| 9. பங்கு முதலுக்கு அ ரு. வரவு ரூ | ... | ... | ... | 15,000 | 0 | 0 |
| 10. முதல் 75 வரை சில்லரை இனவழி 7க்குப் பற்று ரூ | 3,500 | 0 | 0 | ... | ... | ... |
| ஷை ஏடுகளில் இன வழி 5க்கு வரவு ரூ | ... | ... | ... | 8,925 | 0 | 0 |
| 100. கடைச் செலவு | 1,111 | 0 | 0 | ... | ... | ... |
| 120. குடும்ப ஸாதல் வார் செலவு ரூ | 310 | 0 | 0 | ... | ... | ... |

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூபா. அ பை | ரூபா. அ பை |
| 124. லாயக் கணக்கு | | |
| வரவு ... ரூ ... ... ... | | 4,583 14 0 |
| 140. ஆதாய வரவு ரூ ... ... ... | | 847 0 0 |
| 150. மதராஸ் பாங்கிப் | | |
| பற்று ... ரூ | 4,000 0 0 | ... ... ... |
| ஆக ஏடு 14க்கு பற்று | | |
| வரவு ரூ | 29,421—0—0 | 29,430-14—0 |
| ஆகப் பற்று ரூ ... ... ... | | 29,421—0—0 |
| இருப்பு ரூ | | 9--14—0 |

ஆக மேற்கண்டபடி 14 ஏடுகள் தான் மிச்சப் படும்.



## அத்தியாயம் V.



## அயன்தோகை விளக்கம்.

**1. அயன்தொகையாவது என்ன என்பது.**

அயன் தொகை என்பது ஒவ்வொரு பெயரேட்டிலும் உள்ள பற்று வரவு தொகைகளைக் கூட்டி அதில் அயனுக என்ன பற்று அயனுக என்ன வரவு என்பதைக் கண்டுபிடிப்பதுதான்.

ஒருவரால் எழுதிவரப்படும் கணக்கு ஸரிதான் என்று ஒப்புக்கொள்ளப்படவேண்டும் என்ருல் இந்த அயன் தொகைமூலம்தான் கண்டுபிடிக்கவேண்டும்.

எல்லாப் பெயரேடுகளையும் தொகை கட்டி வரவு தொகைகளை யெல்லாம் ஒரு பக்கத்திலும், பற்று தொகைகளை யெல்லாம் ஒரு பக்கத்திலும் போட்டு தனித்தனி கூட்டவேண்டும். அப்படிக்கூட்டும்பொழுது குறிப்பு இருப்பைப் பற்று கலத்திற் போடவேண்டும்.

இரண்டு கலங்களையும் தனித் தனிக் கூட்டினுல் பற்றும் வரவும் ஒரே தொகையாய் வரவேண்டும். அப்பொழுதுதான் கணக்கு ஸரியென்று ஏற்படும். முன் அத்தியாயத்தில், முன்சிட்டைக் குறிப்புக் கணக்குகளை அஸல் குறிப்பிலும் பின் சிட்டையிலும் எழுதி, அஸல் குறிப்பில் இருப்புக் கட்டி ஷ குறிப்பு இருப்பைப் புதுச் சிட்டையின் தலைப்பில் போட்டுப் பின் சிட்டையில் முன் மாதச் சிட்டைக்கணக்கு பாக்கிகளை எழுதித் தொகை கட்டினுல், அவ்விருப்புத் தொகையும் முன் மாதச்சிட்டை இருப்புத் தொகையும் ஒன்ருய் வந்தாற்

ருன் கணக்கு ஸரி என்று சொல்லியிருப்பது போல, அஸல் குறிப்புக் கணக்குகளை பெயரேட்டில் பதிந்தது ஸரிதானு என்று தெரிந்துகொள்ள அயன் தொகையே முக்கிய ஆதாரமாய் இருக்கிறது.

## 2. அயன் தொகையின் பிரயோஜனம்.

*a*. ஒவ்வொரு மாதமும் 30௳ அயன் தொகை எடுத்து எழுதி வந்தால், ஷ அயன் தொகையைப் பார்த்தவுடன் இன்னார் பெயரால் இன்னது பாக்கி யென்பது உடனே விளங்கும்.

*b*. முதலாளிகள் ஸமீபத்தில் இல்லாமல் வேறு ஊர்களில் இருந்தால் மாதா மாதம் அனுப்பப்படும் குறிப்பு நகலுடன் அயன் தொகையும் அனுப்பப்பட்டால், அந்தந்த மாதங்களில் நடந்த நடபடிக்கைகளை தெரிந்துகொள்ள அவர்களுக்கு சுலபமாய் இருக்கும்.

*c*. மாதா மாதம் அயன் தொகை எடுக்கப் பட்டு வந்தால், கணக்குகளில் பிசகுகள் நேரிடும் காலங்களில் அப்பிசகுகளைக் கண்டு பிடிப்பது சுலபமாய் இருக்கும்.

ஆனல் முன்பாராக்களிற் சொல்லியபடி பற்று வரவு ஏடுகளை வருஷ முடிவிலல்லாமல் மாதாமாத அயன் தொகை காலத்தில் பற்று வரவு கழித்துக் கட்டக் கூடாது என்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும். நான்காவது "பெயரேட்டு விளக்கம்" என்னும் அத்தியாயத்தில் காட்டியிருக்கும் சென்னை அ. ரு. வெங்கடாஜலம் செட்டியாருடைய பெயரேட்டில் 1911௵ மார்ச்மீ 31௳க்காக அயன் தொகை எடுத்து அதை இவ்விடத்தில் எழுதிக்காட்டுவோம்.

சென்னை, அ. ரு. வே. கடை.

**1911**-ஞு மார்ச்மீ **31**உ வரை அயன்தொகை.

| பெயரேட்டுப் பக்கம். | பெயரேடு இனவழி. | | பற்று. ரூ | அ. | ப. | வரவு. ரூ | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | ஸ்வாமிகள் ... ... ... | வரவு | ... | ... | ... | 75 | 0 | 0 |
| 3 | நிலம் கொள்முதல் ... ... | பற்று | 10,000 | 0 | 0 | ... | ... | ... |
| 4 | நகை கொள்முதல் ... ... | பற்று | 1,300 | 0 | 0 | ... | ... | ... |
| 5 | வீடு கொள்முதல் ... ... | பற்று | 8,000 | 0 | 0 | ... | ... | ... |
| 7 | ஸாமான் கொள்முதல் ... ... | பற்று | 1,000 | 0 | 0 | ... | ... | ... |
| 8 | புஸ்தகம் கொள்முதல் ... ... | பற்று | 200 | 0 | 0 | ... | ... | ... |
| 9 | பங்கு முதலுக்கு அ.ரு. ... ... | வரவு | ... | ... | ... | 15,000 | 0 | 0 |
| 10-75 | வரை இனவழி 7க்கு ... ... | பற்று | 3,500 | 0 | 0 | ... | ... | ... |

சென்னை, அ. ரு. வே. கடை.

## 1911-ஞூ மார்ச்மீ 31உ வரை அயன்தொகை (தொடர்ச்சி.)

| பெயரேட்டுப் பக்கம். | பெயரேடு இனவழி. | பற்று. ரூ. | அ. | ப. | வரவு. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| ... | இனவழி 5க்கு ... ... ... வரவு | ... | ... | ... | 8,925 | 0 | 0 |
| 100 | கடைச்செலவு ... ... ... பற்று | 1,111 | 0 | 0 | ... | ... | ... |
| 120 | குடும்ப ஸாதல்வார் செலவு ... ... பற்று | 310 | 0 | 0 | ... | ... | ... |
| 124 | லாபக்கணக்கு ... ... ... வரவு | ... | ... | ... | 4,583 | 14 | 0 |
| 140 | ஆதாய ... ... ... ... வரவு | ... | ... | ... | 847 | 0 | 0 |
| 150 | மதராஸ் பாங்கி ... ... ... பற்று | 4,000 | 0 | 0 | ... | ... | ... |
| | குறிப்பு இருப்பு ... | 9 | 14 | 0 | ... | ... | ... |
| | அயன் தொகை ஸரி ... | 29,430 | 14 | 0 | 29,430 | 14 | 0 |

அத்தியாயம் VI.



## லாபநஷ்டக் கணக்கு விளக்கம்.

### 1 லாபம் என்பது என்ன என்பதை விளக்குவது.

லாபம் என்பது, வியாபார லாபம், வட்டிலாபம், வட்டம் கமிஷன் லாபம், வாடகை லாபம் என்று பலவிதங்களாய் இருக்கின்றன.

சம்பளம், வருஷவர்த்தனை, இனும் முதலியவைகள் வரும்படியென்று சொல்லப்படுகின்றன.

நன்செய், புன்செய் வகையரு நிலங்களில் இருந்து வரப்பட்டவைகளுக்கு நில வரும்படியென்று சொல்லப்படுகின்றன. மேற்கண்ட மூன்றுவகைகளிலும் வரப்பட்டவைகளுக்கு தனித்தனிப் பெயராயிருந்தாலும் கடைசியில் எல்லாம் லாபந்தான்.

ஒரு ஸாமானை ஒருவர் 4 ரூபாய்க்கு வாங்கி 6 ரூபாய்க்கு விற்றால் அதிக ரூபாய் 2 க்கு வியாபார லாபம் என்று பெயர்.

ஒரு 100 ரூபா. நோட்டை வாங்கிக்கொண்டு ரூபா 99-14-0 கொடுத்தாலும், ஒரு 100 ரூபா. உண்டியலை வாங்கிக்கொண்டு ரூபா. 99 கொடுத்தாலும், ஒரு 200 ரூபா. செக்கை வாங்கிக்கொண்டு 195 ரூபா. கொடுத்தாலும், இவைகளில் வரும் மிச்சங்களுக்கு வட்டம் கமிஷன் லாபம் என்று பெயர்.

ஒரு கட்டிடத்தை மாதம் 1 க்கு ரூபா. 100க்கு வாடகைக்கு வாங்கி மாதம் 1 க்கு ரூபா. 120க்கு வாடகைக்கு விட்டால் மேல்கொண்டுவரும் ரூபா. 20க்கு வாடகை லாபம் என்று பெயர்.

இப்படியெல்லாம் கொடுத்த தொகைக்கு மேல் அதிகம் வந்தால் அப்படி வரும் அதிகத் தொகைக்கு லாபம் என்று பெயர்.

இதுவுமல்லாமல் குறைந்த வட்டிக்கு ஒரு தொகையை ஒரு இடத்தில் கடன் வாங்கி ஷை தொகையை அதிகவட்டிக்கு மற்றொரு இடத்தில் கொடுத்தால் அப்படி அதிகம் வரும் வட்டித் தொகைக்கு வட்டி லாபம் என்று பெயர்.

மேற் கண்டபடி லாபங்களைக் கண்டு பிடிக்க வேண்டுமானால் சுருக்கமாய்ப் பேசுமிடத்தில் அயன் தொகையை வைத்துக் கொண்டே கண்டு பிடிக்க வேண்டும்.

அப்படிக் கண்டு பிடிக்கப்படும் லாபங்கள் இரண்டு வித மிருக்கின்றன.

1. எல்லாவிதமான வரவில் இருந்தும், எல்லா விதமான செலவையும் கண்டு பிடித்து அவைகளைக் கழித்து மிச்சப்படும் தொகைக்குத் தான் அஸல் லாபம் என்று சொல்லப் படுகிறது.

2. மற்றொரு வகை லாபம் எது என்றால், நில வரும்படியை வரவிலும், குடும்பஸம்பந்தமானசெலவுகளைச் செலவிலும் சேர்க்காமல் முடிக்கப்படும் லாபம்.

இந்த லாபத்திற்குத் தான் வருமான வரி விதிக்கப்படுகிறது.

## 2. நஷ்டம் என்பது என்ன என்பதை விளக்குவது.

நஷ்டம் என்பதும் மேற் கண்டபடி வியாபார நஷ்டம், வட்டம் கமிஷன் நஷ்டம், வட்டி நஷ்டம், வாடகை நஷ்டம், சம்பள நஷ்டம், நில வரும் படி நஷ்டம் என்று பல விதங்களாய் இருக்கின்றன.

நாம் ஒரு சரக்கை 20 ரூபாக்கு வாங்கி அதை 15 ரூபாக்கு விற்றால், நாம் போட்ட முதலிலிருந்து ரூபா. 5 குறைகிறது. அப்படிக் குறையும் தொகைகளுக்கு வியாபாரநஷ்டம்என்று சொல்லப்படுகின்றன.

அப்படியே ஜாஸ்தியான வாடகைக்கு வாங்கி குறைந்த வாடகைக்கு ஒருகட்டிடத்தை விட்டாலும், ஜாஸ்திவட்டிக்கு வாங்கிக் குறைந்த வட்டிக்கு ஒரு முதலைக் கொடுத்தாலும், உண்டியல், செக்கு, நோட்டு முதலியவைகளைக் குறைந்த தொகைகளுக்கு மாற்றினாலும், இப்படிப்பட்ட நஷ்டங்களுக் கெல்லாம் வாடகை நஷ்டம், வட்டி நஷ்டம், கமிஷன் நஷ்டம் என்று பலவிதங்களாய்ச் சொல்லப் படுகின்றன. அனேகமாய் ஒவ்வொருவர் வீட்டிலும், ஒவ்வொரு வியாபாரக் கடையிலும் வருஷத்திற்கு ஒருமுறைதான் லாப நஷ்டங்கள் கண்டுபிடிக்கப் படுகின்றன.

பெயரேட்டு விளக்கத்தில் கண்டிருக்கும் அ. ரு. வெங்கடாஜலம் செட்டியாருடைய கணக்கில் 1910ளு ஏப்ரல்மீ 1உ முதல் 1911ளு மார்ச்மீ 31உ வரை வருஷம் 1-க்கு லாபம் என்ன கிடைத்திருக்கிறது என்ற விபரத்தை விளக்கிக் காட்டுவோம்.

## 3. உதாரண மூலமாய் லாபத்தை விளக்குவது.

சென்னை, அ. ரு. வெங்கடாஜலம் செட்டியார் கடையில் 1910ஸ்ரீ ஏப்ரல்மீ 1உ முதல் 1911ஸ்ரீ மார்ச்மீ 31உவரை ஸகலசெலவுகளும் நீக்கிக்கிடைத்திருக்கும் லாபக்கணக்கு.

சென்னை அ. ரு. வெ, கடை.

**1911-ஸ்ரீ மார்ச்மீ 31உ செலவு, வரவுவகை.**

| பெயரேட்டுப் பக்கம். | செலவு, வரவுவகை. | செலவு தொகை. ரூ | அ. | ப. | வரவு தொகை. ரூ | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| 100 | கடைச் செலவு ... | 1,111 | 0 | 0 | ... | ... | ... |
| 120 | குடும்பச் செலவு ... | 310 | 0 | 0 | ... | ... | ... |
| 124 | லாபக்கணக்குவரவு ... | ... | ... | ... | 4,583 | 14 | 0 |
| 140 | ஆதாய வரவு ... | ... | ... | ... | 847 | 0 | 0 |
| | | 1,421 | 0 | 0 | 5,430 | 14 | 0 |
| | | | | | 1,421 | 0 | 0 |
| | லாபம் ரூ ... | ... | ... | ... | 4,009 | 14 | 0 |

மேற்கண்டவாறு சென்னை அ. ரு. வெங்கடாஜலம் செட்டியார் கடைக் கணக்கின்படி, நிலங்களிலும் வீடுகளிலும், இதர வியாபாரங்களிலும் வந்த வரவுகளிலிருந்து கடைச் செலவுகளையும், குடும்பச்செலவுகளையும் கழிக்க லாபம் ரூ 4,009-14-0 தேருகிறது. ஆனால் இதில் வருமானவரி கழிக்கப்படவில்லை. வருமானவரி இன்னது என்பதைக் கண்டுபிடித்து இதில் கழித்தபிறகுதான் அஸல்லாபம் ஏற்படுகிறது.

## 4. அஸல் லாபத்தைக் கண்டுபிடிக்கும் வழியை விளக்குவது.

1. அஸல் லாபம் என்பது வருமான வரியைக் கழிக்கப்பட்ட லாபம். இப்பொழுது மேற்கண்ட அ, ரு. வெங்கடாஜலம் செட்டியாருடைய கணக்கின்படி வருமானவரி என்ன ஏற்படுகிறது என்று பார்ப்போம்.

நில ஸம்பந்தமான வரவுகளும், குடும்ப ஸம்பந்தமான செலவுகளும், வருமான வரிக்கு ஸம்பந்தமில்லை என்பதாய் பல இடங்களிலும் சொல்லியிருக்கிறோம்.

இந்தச்சட்டத்தை அனுஸரித்து ஷெ வெங்கடாஜலம் செட்டியாருக்கு வருமானவரி ஏற்படுகின்றன

| | | | | |
|---|---|---|---|---|
| லாபக்கணக்கு வரவு | ரூ | 4,583 | 14 | 0 |
| கடைச்செலவு | ரூ | 1,111 | 0 | 0 |
| லாபம் வரவு | ரூ | 3,472 | 14 | 0 |

| | |
|---|---|
| இந்தத் தொகைக்கு | ரூ. ௯௦ 6 8 |
| வருமானவரி விதிக்கப்படுகிறது. | |
| முன் பாராவில் கண்டபடி வெங்கடாஜலம்செட்டி யாருக்கு வந்திருக்கும் லாபத்தொகை | ரூ. 4,00௯ 14 0 |
| வருமானவரி | ரூ. ௯௦ 6 8 |
| அஸல் லாபம் ரூ. | 3,919-7-4. |

## 5. கண்டுபிடித்த அஸல் லாபம் ஸரிதானு என்பதை ஸரி பார்ப்பது.

இதின் 4 வது பாராவிற் கண்டு பிடித்த அஸல் லாபம் ஸரிதான் என்பதை ருஜூப்படுத்த வேண்டு மானல் வருஷ ஆரம்பத்தில் நம்முடைய கைமுதல் என்ன இருந்ததோ அத்துடன் ஸகல செலவும் கழித்து இவ்வருஷக் கடைசியில் கண்டுபிடிக்கப்பட்ட லாபத்தைக் கூட்டினல் என்ன வருமோ அத்தொகை இவ்வருஷத்திய முடிவில் கை முதலாக இருக்க வேண்டும். அப்படி இருந்தாற்றான் நம்மால் கண்டு பிடிக்கப்பட்ட லாபம் ஸரி என்பதாய் ஏற்படும். உதார ணமாக:—

நாம் ஒரு தொகையில் இருந்து ஒரு தொகையைக் கழித்தால் அதில் வந்த மிச்சம் ஸரிதானு என்று பார்க்கவேண்டு மானல், எந்தத் தொகையைக் கழித் தோமோ அதையும் மிச்சம் வந்த தொகையையும் கூட் டினல், எந்தத் தொகையில் இருந்து கழித்தோமோ அத்தொகை வர வேண்டும். அப்பொழுது தான் கணக்கு ஸரி யென்று ஏற்படும்

ஒரு தொகையை ஒரு தொகையால் பெருக்கினால் வந்த பெருக்குத் தொகை ஸரிதானா என்று பார்க்க, வந்த பெருக்குத்தொகையை பெருக்கின தொகையால் வகுத்தால் பெருக்கப்பட்ட தொகைவரவேண்டும். அப்பொழுது தான் அக்கணக்கு ஸரி என்று ஏற்படும்.

ஒரு தொகையை ஒரு தொகையால் வகுத்தால் வகுத்து வந்த தொகை ஸரிதானா என்று பார்க்கவேண்டுமானால், வகுத்து வந்த தொகையை வகுத்த தொகையால் பெருக்கினால், வகுக்கப்பட்ட தொகை வரவேண்டும். அப்பொழுது தான் அக்கணக்கு ஸரி யென்று ஏற்படும்.

அப்படியே சிட்டைக் குறிப்பில் இருந்து பெயரேட்டிற்கு வரக் கூடிய கணக்குகளை அஸல் குறிப்பில் எழுதி இருப்புக் கட்டி ஷை குறிப்பு இருப்பை, பின் சிட்டையில் குறிப்பு இருப்பு என்று கட்டி அதன்கீழ் முன் சிட்டையில் உள்ள சிட்டைக் கணக்குகளை எழுதித் தொகைகட்டி வந்திருக்கும் தொகையும் முன் சிட்டை கடைசி இருப்பும் ஸரியானாற்றான் கணக்கு ஸரிஎன்றும்;

அஸல்குறிப்புக் கணக்குகளைப் பெயரேட்டில் பதிந்தபிறகு அப்பெயரேடுகளின் அயன் தொகைகளை பற்று வரவு தனித்தனியாய்ப் போட்டு, கடைசித் தேதி அஸல் குறிப்பு இருப்பை பற்று கலத்திற் போட்டுக் கூட்டினால் பற்று தொகையும் வரவு தொகையும் ஸரியாய்வரவேண்டும். அப்பொழுது தான் கணக்கு ஸரி என்பதாய் முன் அத்தியாயங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

அப்படிப்போல வருஷமுடிவிற் கண்டுபிடிக்கப்பட்ட அஸல்லாபம் ஸரிதான் என்று நிச்சயப் படுத்த வேண்டுமானால், வருஷமுதலில் இருந்த முதலுடன் வந்த அஸல்லாபத்தைக் கூட்டினால் வருஷக் கடைசியில் இருக்கும் முதலுடன் தொகை ஒத்துப் போக வேண்டும். அப்பொழுதுதான் கண்டுபிடிக்கப்பட்ட லாபம் ஸரி என்பதாய் ஏற்படும்.

## 6. அஸல் லாபம் ஸரி என்பதை உதாரண மூலமாய் விளக்குவது.

முன் அத்தியாயங்களிற் கண்ட அ. ரு. வெங்கடாஜலம் செட்டியாருடைய கணக்கை ஸரி பார்ப்போம்.

1910ஆு ஏப்ரல்மீ 1உ ஷையார் வியாபாரம் ஆரம்பித்தார். அப்போழுது அவருக்கு முதல், தன் தகப்பனாரால் கொடுக்கப்பட்ட ரூபா. 15,000 தான் இருந்தது.

1911ஆு மார்ச்மீ 31உ வரை வியாபாரம் நடத்தியதில் வருஷம் 1க்கு லாபம் ரூ 3,919-7-4 அஸலாகக் கிடைத்திருப்பதாய்க் கண்டுபிடித்திருக்கிறது

அப்படியானால் 1911ஆு மார்ச்மீ

| | | | | |
|---|---|---|---|---|
| 31உ முன்வருஷ முதல் | ரூபா. | 15,000 | 0 | 0 |
| வருஷக் கடைசியில் லாபம் | ரூபா. | 3,919 | 7 | 4 |
| ஆக | ரூபா. | 18,919— | 7— | 4 |

மூலதனமாயிருக்கவேண்டும்.

அதற்கு 1911ஹு மார்ச்மீ 31உ அயன் தொகைப்படி, வீடு, நிலம், நகைஸாமான்கள் வரவேண்டியநிலுவைகள் எவ்வளவு என்றும், செல்லவேண்டியவைகள் எவ்வளவு என்றும் எழுதி ஸொத்து தொகையில் இருந்து உத்திரவாதம் செய்யவேண்டிய தொகைகளைக் கழித்தால் ரூபா. 18,919 7 4 வரவேண்டும். அத்தொகைதான் 1911ஹு ஏப்ரல்மீ 1உ-க்கு மூலதனமாக வேண்டும்.

இதற்கு ஆங்கிலத்தில் (Assets and Liabilities) அஸெட்ஸ் அண்டு லயாபிலிட்டீஸ் என்று சொல்லப்படும்.



சென்னை, அ. ரு. வேங்கடாஜலம் செட்டியாருடைய
அஸெட்ஸ் அண்டு லயாபிலிட்டீஸ்கள் அடியிற்கண்டவாறு இருக்கின்றன.

| பெயரேடு. | சொத்துக்கள் உத்திரவாதம் இவைகளின். பெயரேடுகள். | சொத்து தொகைகள். ரூ. | அ. | ப. | உத்திரவாதத் தொகைகள். ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | ஸ்வாமிகள் வரவு ... ... ... ... ... | ... | ... | ... | 75 | 0 | 0 |
| 3 | நிலம் கொள்முதல் ... ... ... ... பற்று | 10,000 | 0 | 0 | ... | ... | ... |
| 4 | நகை கொள் முதல் ... ... ... ... பற்று | 1,300 | 0 | 0 | ... | ... | ... |
| 5 | வீடு கொள்முதல் பற்று ... ... ... ... | 8,000 | 0 | 0 | ... | ... | ... |
| 7 | ஸாமான் கொள்முதல் ... ... ... பற்று | 1,000 | 0 | 0 | ... | ... | ... |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 8 | புஸ்தகம் கொள்முதல் ... ... ... ... | 200 | 0 | 0 | ... | ... | ... |
| 10-75 | இனவழிப் பற்று ... ... ... ... ... | 3,500 | 0 | 0 | ... | ... | ... |
| ... | இனவழி வரவு ... ... ... ... ... | ... | ... | ... | 8,925 | 0 | 0 |
| 15 | மதராஸ் பாங்கிப் பற்று ... ... ... ... | 4,000 | 0 | 0 | ... | ... | ... |
| ... | இன்கம் டாக்ஸ் வரவு ... ... ... ... | ... | ... | ... | 90 | 6 | 8 |
| ... | குறிப்பு இருப்பு ... ... ... ... ... | 9 | 14 | 0 | | | |
| | | 28,009 | 14 | 0 | 9,090 | 6 | 8 |
| | | 9,090 | 6 | 8 | | | |
| | அதிக ஸொத்து ... | 18,919 | 7 | 4 | | | |

1911 ௵ மார்ச்மீ 31உ யில் மேற்கண்டபடி ரூ. 18,919—7—4 பங்குமுதலாக இருக்கிறது. ஆகையால் 3,919—7—4, முதல் அதிகப்பட்டிருக்கிறது இத்தொகை தான் லாபம் என்று சொல்லப்படும்.

## அத்தியாயம் VII.

---

## அட்டவணைப் புஸ்தக விளக்கம்.

அட்டவணை என்பது பெயரேட்டுக் கணக்குகளைத் தாமதமில்லாமல் எடுப்பதற்கு ஒரு ஆதாரமாக இருக்கிறது. ஒவ்வொரு மாதமும் இப்புஸ்தகத்தில் பெயரேட்டு நம்பர்களை எழுதி வரவேண்டும். ஏனென்றால் மாதா மாதம் பெயரேடுகள் பதியப்பட்டு பக்கங்கள் வேறு பட்டுப்போகும். ஆகையால் ஒவ்வொரு மாதமும் அயன் தொகை போட்டு முடிந்தவுடன் அவ்வயந் தொகையிற் கண்ட பக்கங்களின்படி அட்டவணையை எழுதி வரவேண்டும்.

சென்னை அ. ரு வெங்கடாஜலம் செட்டியாருடைய கணக்கை இவ்விடத்தில் 1911 ஹ மார்ச் மீ 31உ க்காக அட்டவணை யெழுதிக் காட்டுவோம்.

**1911ஹ மார்ச்மீ 31உ முதல் அட்டவணை.**

| பக்கம். | பெயரேடுகள். |
|---|---|
| 1 | ஸ்வாமிகள் வரவு, |
| 3 | நிலம் கொள்முதல். |
| 4 | நகை கொள்முதல். |
| 5 | வீடு கொள்முதல். |
| 7 | ஸாமான் கொள்முதல். |

1911௵ மார்ச்மீ 31உ முதல்
அட்டவணை—(தொடர்ச்சி).

| பக்கம். | பெயரேடுகள். |
|---|---|
| 8 | புஸ்தகம் கொள்முதல். |
| 9 | பங்கு முதலுக்கு. வரவு. |
| 10-75 | சில்லரை ஏடுகள். |
| 80 | வட்டிப் பற்று வரவு. |
| 85 | வட்டம் கமிஷன் பற்று வரவு. |
| 90 | வாடகைப் பற்று வரவு. |
| 95 | ஸ்டாம்புச் செலவு· |
| 100 | கடைச் செலவு. |
| 102 | பலசரக்குப் பற்று வரவு. |
| 110 | ஜவுளிப் பற்று வரவு. |
| 115 | குடும்ப ஸாப்பாட்டுச் செலவு. |
| 120 | குடும்ப ஸாதல்வார் செலவு. |
| 124 | லாபக்கணக்கு வரவு. |
| 130 | நிலவரும்படி வரவு. |
| 140 | ஆதாய வரவு. |
| 150 | மதராஸ் பாங்கிப் பற்று. |

இவ்விதம் மாதம் 1 முறை அட்டவணை எழுதி வைக்கவேண்டும்.



## அத்தியாயம் VIII

# அனுப்புத் தபால் காப்பிப் புஸ்தக விளக்கம்.

இது நம்மால் இதற கடைகளுக்கும் சொந்தக் கடைகளுக்கும் எழுதிய தபால்களுக்கு நகல் ஆகும்.

முதலில் கடிதத்தில் காப்பிமையென்னும் ஒரு வித மையால் எழுதவேண்டும். காப்பிப் புஸ்தகத்தின் எந்தப்பக்கத்தில் தபாலை காப்பி யெடுக்க வேண்டுமோ அந்தப்பக்கத்தின் கீழ் தண்ணீர் படக்கூடாத எண்ணை த்தாள் என்னும் ஒருவித கடுதாசியைவைத்து, அந்த எண்ணைக் கடுதாசியின் மேல் இருக்கும் கடுதாசியில் புருஷ்ஷால் தண்ணீரைத்தடவி அதன்மேல் மையொட் டுத்தாள் என்னும் பிளாட்டிங் பேப்பரைவைத்து மூடி முதல் தடவை பிரஸ்ஸில்வைத்து சுலபமாய்த் திரு ப்ப வேண்டும். அப்பொழுது காப்பி புஸ்தகக் கடுதா சியிலுள்ள ஈரத்தை அந்த பிளாட்டிங்கு பேப்பர் போக்கி ஷை கடுதாசிக்கு ஈரனைப்பை மாத்திரம் உண்டு பண்ணுகிறது. அதன்பிறகு ஷை புஸ்தகத் தில் நம்மால் எழுதப்பட்ட தபாலை எழுத்துகள் மேற் பக்கம் இருக்கும்படி அந்த எண்ணைத்தாளில் வைத்து அதற்குமேல் காப்பி புஸ்தகத்தின் ஈரத்தாளை மூடி மறுபடியும் பிரஸ்ஸில் வைத்துத் திருப்பினல் கடுதா சியின் எழுத்துகளின் நகல் காப்பிப் புஸ்தகத்தின் ஈரத் தாளில் விழுந்து விடுகிறது. அதுதான் நம்மால் எழுதப்படும் தபாலுக்கு நகலாக இருக்கிறது. இப்படி காப்பியெடுக்க வேண்டிய லெட்டர்களை ஒரு பக்கம் தான் எழுதவேண்டும்.

ஜாஸ்தியான வெளியூர் பற்று வரவுள்ளவர்களு க்கு இப்புஸ்தகம் அவசியம் வேண்டும். இப்புஸ்தகத் தில் பக்கநம்பர் அச்சிட்டிருக்க வேண்டும். எல்லா ஊர் தபால்களையும் ஒரே புஸ்தகத்தில் காப்பியெடுப் பது தான்மேன்மை.



## அத்தியாயம் IX.

## வரவு தபால் பயில் புஸ்தக விளக்கம்.

இப்புஸ்தகமானது துண்டுக் காகிதங்களை அழுத்தமான அட்டைகளில் தைக்கப்பட்டதாயிருக்கும். வெளியூரில் இருந்தும் உள்ளூரில் இருந்தும் வரும் வியாபார ஸம்பந்தமான தபால்களை இதில் தேதி வாரியாய் ஒட்டிவைக்கவேண்டும். ஜாஸ்தியான பற்று வரவுள்ள கடைகளில் இப்புஸ்தகம் ஒவ்வொரு பற்று வரவுக்காரர்களுக்கும் ஒவ்வொரு புஸ்தகம் தனித் தனியாய் ஏற்படுத்தப்படவேண்டும்.

எந்தக்காலத்தில் தகரார்கள் ஏற்பட்டாலும் இது மிகவும் உபயோகமானது. வரும் லெட்டர்களை இவ்விதம் பயில் பண்ணுமல் அந்தந்த உரையுடன் அததை வைத்துவிடுகிறது சில கடைகளில் வழக்கம் உண்டு. அப்படி பயில் செய்தால் ஒவ்வொரு லெட்டரின் பின் பக்கத்தில் அடியிற்கண்டவாறு டாக்கெட்டு செய்யவேண்டும்.

அனுப்பினவர் பெயரும் ஊரும்............................
தபால் தேதி............................................
வரவு தேதி............................................
பதில் தேதி............................................

இத்தனும் நம்பர் லெட்டர்மூலம் பதில் என்று மேற்கண்டபடி லெட்டர்களின் கவருடைய பின் பக்கத்தில் டாக்கெட்டு செய்யவேண்டும்.

ஜாஸ்தியான கடைகளையும் தொழில்களையும் உள்ளவர்கள் இப்புஸ்தகம் வைத்துக்கொண்டால் தான் எப்பவும் மேன்மையானது.

அத்தியாயம் X.

## தபால் அனுப்பு வரவு புஸ்தக விளக்கம்.

இது இரண்டு பாகங்களாக இருக்கவேண்டும்.

### 1. வெளியூருக்கும் உள்ளூருக்கும் எழுதிய தபால்களின் சுருக்கத்தை விளக்குவது.

இதற்குமுன் சொன்னபடி 6 கலங்கள் உள்ளதாய் இருக்கவேண்டும்.

1-வது கலம் தபால் நம்பர்.

2-வது கலம் தேதி.

3-வது கலம் போஸ்ட் செய்த தேதி.

4-வது கலம் இன்ன ஊருக்கு.

5-வது கலம் இன்னாருக்கு.

6-வது கலம் காப்பி புஸ்தகத்தில் காப்பி யெடுக்கப்பட்ட பக்கத்தின் நம்பர்.

இவைகளை விபரமாய் எழுதவேண்டும். ஷை விபரங்களை உதாரண மூலமாய் விளக்குவோம்.

**1910௵ ஏப்ரல்௴ 1௳ முதல் தபால் அனுப்பு விபரம்.**

| தபால் நெ. | எழுதின தேதி. | போஸ்ட் செய்த தேதி. | இன்ன ஊர். | இன்னாருக்கு. | காப்பி புக்கில் பதில் லெட்டர் காப்பி நெ. |
|---|---|---|---|---|---|
| 1 | 4—4—10 | 4—4—10 | ரெங்கூன் ... | அ. ரா. ம. ... | 12 |
| 2 | 8—4—10 | 8—4—10 | சென்னை ... | சு. க. ... | 13 |
| 3 | 12—4—10 | 13—4—10 | பம்பாய் ... | இ. கா. ... | 14 |

இவ்விதம் அனுப்புத் தபால்களுக்குவிபரம் எழுதவேண்டும்.

இதில்:—

1-நம்பர் லெட்டர் 4—4—10ல் ரெங்கூன் அ. ரா ம. வுக்கு எழுதி 12வது பக்கத்தில் காப்பியெடுக்கப் பட்டு 4—4—10ல் போஸ்ட் செய்யப்பட்டது.

2-நம்பர் லெட்டர் 8—4—10ல் சென்னை சு. க. வுக்கு எழுதி 13ம் பக்கத்தில் காப்பி யெடுக்கப்பட்டு 8—4—10ல் போஸ்ட் செய்யப்பட்டது.

3-நம்பர் லெட்டர் 12—4—10ல் பம்பாய் இ. சா. வுக்கு எழுதி 14ம் பக்கத்தில் காப்பியெடுக்கப்பட்டு 13—4—10ல் போஸ்ட் செய்யப்பட்டது. ஒவ்வொரு ஊருக்கும் எழுதும் தபாலை இவ்விதம் எழுதி வைத்துக்கொள்ளவேண்டும்.

## 2. வெளியூரில் இருந்தும் உள்ளூரில் இருந்தும் வரும் வரவு தபால் விபரம் விளக்குவது.

இதற்கும் முன் சொன்னபடி 6 கலங்கள் தான் இருக்கவேண்டும்.

1. கடிதத்தின் நம்பர்.
2. கடிதத்தேதி.
3. கடிதம் கிடைத்ததேதி
4. இன்ன ஊரில் இருந்து.
5. இன்னாரிடமிருந்து.
6. பதில் எழுதிய லெட்டர் காப்பி யெடுத்த பக்கம்.

இவ்விபரங்களை எழுதிவைக்கவேண்டும்.

மேற்கண்டவைகளை உதாரண மூலமாய் அடியில் காட்டப்படுகிறது

## 1910௵ ஏப்ரல்௴ 1௳ முதல் வரவு தபால் விபரம்.

| தபாலின் நெ. | எழுதின தேதி. | கிடைத்த தேதி | இன்ன ஊர். | இன்னாரிட மிருந்து | பதில் எழுதின லெட்டர் காப்பி புஸ்தக பக்க நெ. |
|---|---|---|---|---|---|
| 67 | 31—3—10 | 1—4—10 | மதராஸ் ... | நேஷனல் பாங்கி... | 71 |
| 119 | 30—3—10 | 5—4—10 | பம்பாய் ... | எட்வார்ட் கம்பேனி | 72 |
| 218 | 5—4—10 | 8—4—10 | கல்கத்தா ... | க. ப. ... .... | 73 |
| 9 | 6—5—10 | 7—5—10 | கொல்லம் ... | சு. க. ... ... | 74 |

67-நம்பர் கடிதம் 31—3—10ல் மதுராஸ் நேஷனல் பாங்கியால் எழுதப்பட்டு 1—4—10ல் கிடைத்து பதில் எழுதி ஷை பதில் லெட்டரை காப்பிப்புஸ்தகம் 71வது பக்கத்தில் காப்பியெடுக்கப்பட்டிருக்கிறது.

119-நம்பர் கடிதம் 30—3—10ல் பம்பாய் எட்வார்டு கம்பேனியால் எழுதப்பட்டு 5—4—10ல் பதில் எழுதி ஷை லெட்டர் 72வது பக்கத்தில் காப்பியெடுக்கப்பட்டிருக்கிறது.

218-ம் நம்பர் கடிதம் 5—4—10ல் கல்கத்தா க. ப. வால் எழுதப்பட்டு 8—4—10ல் கிடைத்து பதில் எழுதி ஷை கடிதம் 73-வது பக்கத்தில் காப்பியெடுக்கப்பட்டிருக்கிறது.

9-ம் நம்பர் கடிதம் 6—5—10ல் கொல்லம் சு. க. வால் எழுதப்பட்டு 7—5—10ல் கிடைத்து பதில் எழுதி 74-வது பக்கத்தில் காப்பி யெடுக்கப்பட்டிருக்கிறது.

ஷை கடிதங்களுடைய விவரம்பார்க்க வேண்டுமானால் வரவு தபால் பயில் புஸ்தகத்தில் பார்க்க வேண்டும்.

ஷை கடிதங்களுக்கு பதில் எழுதிய விபரங்கள் பார்க்கவேண்டுமானால் பக்க நம்பர் படிக்குள்ள காப்பி புஸ்தகத்தில் பார்க்கவேண்டும்.

இவ்விதமாக ஒவ்வொரு ஊரில் இருந்தும் வரும் தபால்களை எழுதிவைக்கவேண்டும்.

அத்தியாயம் XI.

## உண்டியல் அனுப்பு வரவு புஸ்தக விளக்கம்.

### 1. உண்டியலின் வகைகளை விளக்குவது.

உண்டியல் என்பது ஒருவர் மற்றொருவரைப் பணம் கொடுக்கும்படி எழுதிக்கொடுக்கும் ஆர்டர்.

இது வட்டி யுண்டியல், தவணை யுண்டியல், தெரிசனை யுண்டியல், என மூன்று வகைப்படும்.

(1) வட்டி யுண்டியல் என்பது ஒரு தொகையை மற்றொருவருக்காவது உத்திரவு பெற்றவர்களுக்காவது கொண்டுவந்தார் வசமாவது இன்ன வட்டியுடன் கொடுக்கிறது என்று எழுதிக்கொடுக்கும் ஆர்டருக்கு வட்டி யுண்டியல் என்று சொல்லப்படுகிறது.

(2) தவணை யுண்டியல் என்பது ஒரு குறிப்பிட்ட தொகையை மற்றொருவருக்காவது உத்திரவு பெற்றவர்களுக்காவது இவ்வளவு மீ॰ த் தவணையில் கொடுக்கிறது என்று எழுதிக்கொடுக்கும் ஆர்டருக்கு தவணை யுண்டியல் என்று சொல்லப்படுகிறது.

இந்த உண்டியல் பெரும்பாலும் கடன் (ரொக்கமாகவாவது சரக்கு மூலமாகவாவது) வாங்குகிறவர்களுக்கே உபயோகப்படுகிறது எப்படியென்றால்.

ராமன் கோபாலனிடத்தில் ரூபாய் ஆயிரம் பொருமான சரக்கை வாங்குகிறான் அப்பொழுது ராமனிடத்தில் பணமில்லை அதற்காக ரூபாய் 1,000 த்திற்கு கோபாலனுக்கு 3 மீ॰ தவணையில் கொடுப்பதாய் ஒரு உண்டியல் எழுதிக்கொடுக்கிறான். ஷை தொகை ரூபாய் 1,000 த்தையும் கோபாலனே கொடுப்பதாய் எழுதினாலும் எழுதலாம். அல்லது கோபாலனு

க்கு பற்று வரவுகாரராகிய கோவிந்தனைப் பணம் கொடுக்கும்படி எழுதிக் கொடுத்தாலும் கொடுக்கலாம். ஆனால் ராமனுடைய உண்டியலை கோவிந்தன் கண்டவுடன் தவணைப்படி பணம் கொடுக்கிறேன் என்று ஒப்புக்கொள்ளக்கூடிய நிலைமையில் இருக்கவேண்டும்.

சரக்கில்லாமல் ரொக்கமாகக் கடன் வாங்குகிறவர்களும் தவணைப்படியுள்ள மாதங்களுக்கு வட்டியைச்சேர்த்து அல்லது வட்டியைச் செலுத்தி அஸல் தொகைக்கு தவணை யுண்டியலாக எழுதிக் கொடுப்பதும் உண்டு.

இப்படிப்பட்ட உண்டியல்களைப் பெற்றுக் கொள்ளுகிறவர்களுக்கு ஒரு ஸவுகரியமுண்டு. அதாவது உண்டியல் பெற்றுக் கொண்டவர்களுக்குப் பணம் தவணைக்கு முந்தியே வேண்டுமானால் பேங்கர்களிடத்தில் ஷை யுண்டியல்களை டிஸ்கவுண்டு செய்து பணம் பெற்றுக்கொள்ளலாம். டிஸ்கவுண்டு செய்கிறது என்பது ஷை யுண்டியலை ஒரு பேங்கரிடத்தில் கொடுத்தால் தவணை பாக்கியுள்ள மாதங்களுக்கு வட்டியை பிடித்துக்கொண்டு தொகை கொடுத்து விடுவார்கள். இதற்குத்தான் டிஸ்கவுண்டு செய்கிறது என்று சொல்லப்படுகிறது.

(3) தெரிசனை யுண்டியல் என்பது ஒருவர் மற்றொருவருக்காவது அல்லது ஷையார் உத்திரவு பெற்றவர்களுக்காவது கொண்டு வந்தார் வசமாவது ஒரு தொகையைக் கண்ட மாத்திரத்தில் கொடுக்கும்படி எழுதிக்கொடுக்கும் ஆர்டர் என்று சொல்லப்படுகிறது. இதற்கு வட்டியில்லை. ஆங்கிலத்தில் இதற்குத்தான் செக்கு என்று சொல்லப்படுகிறது.

2. மூன்று வகை உண்டியல்களையும் உதாரணமாய் விளக்கிக்காட்டுவது.

### (1) வட்டி யுண்டியல்.

1 அணா ஸ்டாம்பு.

உ

தேவக்கோட்டை, வீ. ர. அ.

1910௵ ஜனவரி௴ 1௳ கல்கத்தா குலாம்மயிதீன் கம்பெனி வரவு தேவகோட்டை வீ. ர. அ. அண்ணாமலை செட்டியார் பற்று ரூபாய் 500—0—0 (இந்த ரூபாய் அயினூரையும்) நாளது தேதி முதல் அவ்விடம் நடப்பு வட்டியுடன் ஷெயார் ஆர்டருக்கு கொண்டு வந்தார்வசம் கல்கத்தாவில் எங்கள் கடையில் ராமனாதன் செட்டி பணம் கொடுத்து இதில் செல்லுடன் பெற்றுக்கொண்டு இவ்விடம் பற்று எழுதிக்கொள்ளவும்.

இப்படிக்கு,

(ஒப்பம்.) வீ. ர. அ. அண்ணாமலை செட்டியார்.

*Rs.* 500-0-0.

இந்த உண்டியல் தேவகோட்டை வீ. ர. அ. அண்ணாமலைசெட்டியாரால் எழுதிக்கொடுக்கப்பட்டது.

எழுதிய தேதி 1910ஹு ஜனவரிமீ 1உ எழுதிக்கொடுத்தது கல்கத்தா குலாம் மய்தீன் கம்பேனிக்காவது அல்லது ஷெயார் ஆர்டருக்கு கொண்டு வந்தார்வசமாவது பணம் கொடுக்கும்படி.

தொகை ரூபாய் 500.

வட்டி கல்கத்தா நடப்புவட்டி பணம் கொடுக்க வேண்டியவர் கல்கத்தா வீ. ர. அ. ராமனாதன் செட்டியார்.

ஆக ஒவ்வொரு உண்டியலிலும் 6 வகை விபரங்கள் இருக்கவேண்டும்,

அதாவது.

1. உண்டியல் தேதி.
2. உண்டியல் எழுதினவர்.
3. இன்னார் பெயருக்கு
4. தரிசனையா, வட்டியா, தவணையா.
5. பணம் கொடுக்க வேண்டியவர்.
6. தொகை.

மேற்கண்டபடிக்குள்ள நடப்புவட்டி யுண்டியலை எப்பொழுது கொண்டுபோனாலும் கல்கத்தா வி. ர. அ. ராமனாதன் செட்டியார் பணம் வட்டியுடன் கொடுப்பார்.

## (2) தவணை யுண்டியல்.

உ

திருச்சி, அ. க.

12 அணா
ஸ்டாம்பு.

1910௵ ஜனவரி௴ 1௳ சென்னை இப்ராஹீம் பீர்மகமட் அண்டு கம்பெனி வரவு திருச்சி அ. க. சுப்பிரமணிய அய்யர் பற்று ரூபா. 1,000—0—0 இந்த ரூபா ஆயிரத்தை மட்டும் நாளது ௳ முதல் 90 நாள் தவணையில் சென்னப்பட்டணம் அ. க. விசுவனாதையர் ஷெ இப்ராஹீம் பீர்மகமட் அண்டு கம்பெனிக்காவது ஷெ யார் உத்திரவு பெற்றவர்களுக்காவது கொடுத்து இதில் செல்லுடன் பெற்றுக்கொண்டு இவ்விடம் கணக்கில் பற்று எழுதிக்கொள்ள வேண்டியது.

இப்படிக்கு,

(ஒப்பம்) அ. க. சுப்பிரமணிய அய்யர்.

Rs. 1000-0-0.

ஷை உண்டியலில் தவணை காட்டி விட்டபடியால் ஸ்டாம்பு அணா 12 ஆகும். தவணை உண்டியல்கள் 12 மீ தவணைகளுக்கு மேல் இருக்கக்கூடாது.

ஷை தவணை உண்டியல்களுக்கு தொகைக்குத் தக்கபடி ஸ்டாம்புகள் ஏற்படும் தவணையுண்டியல் ஸ்டாம்பு விபரங்கள் இத்துடன் காட்டப்பட்டிருக்கின்றன.

1. ஷை உண்டியல் ஏற்பட்டது 1—1—1910
2. எழுதினவர் அ. க. சுப்பிரமணிய அய்யர்
3. பணம்கொடுக்கவேண்டியது சென்னப்பட்டணம் அ. க. விசுவனாதையர்.

4. பணம் கொடுபடவேண்டியது சென்னப்பட்டணம் இப்ராஹிம் பீர் மகமட் கம்பெனிக்காவது அல்லது ஷை யார் உத்திரவு பெற்றவர்களுக்காவது

5. தொகை ரூ 1,000
6. உண்டியல், 90 நாள் தவணை

ஷை தவணையுண்டியலில் பணம் கொடுக்கவேண்டியவராகிய சென்னப்பட்டணம் அ. க. விசுவனாதய்யரிடம் ஷை இப்ராஹிம் பீர்மகமட் கம்பெனியார் ஒப்புக் கையெழுத்துப் பெரவேண்டும்

சீர்மை வியாபாரிகளால் இந்தியா வியாபாரிகளுக்கு சரக்குகள் அனுப்பப்பட்டு ஷை சரக்குகளின் விலைக்காக சரக்கு அனுப்பினவர் அனுப்பப் பெற்றவரை, பணம்கொடுக்கும்படி உண்டியல் எழுதி ஷை உண்டியலை பாங்கிகளில் மாற்றி அதற்கு ஈடாக சப்பல் இன்வாயிஸையும் பாங்கிகளிற் கொடுத்து,

தவணைக்குள்ள வட்டியைக் கழித்துப் பணம் பெற்றுக் கொண்டு விடுவார்கள். அப்படி ஸமயங்களில் ஒரே தொகைக்கு 3 உண்டியல்கள் எழுதுவதுண்டு. சில ஸமயம் இரண்டு உண்டியல்களும் எழுதுவார்கள் ஆனால் ஒரு உண்டியலுக்குத்தான் பணம் கிடைக்கும். மற்ற உண்டியல்கள் தள்ளுபடியாகப் படவேண்டியவைகள் தான். இப்படி விஷயங்களில் மொத்தத் தொகைக்கு உள்ள ஸ்டாம்பை நிரவி ஒட்டிவிட வேண்டியது.

### 1 வருஷம் தவணைக்கு மேற்படாத தவணை உண்டியல்களுக்கு அடியிற் கண்டபடி ஸ்டாம்பு டியூட்டிகள் விதிக்கப்படுகின்றன.

| 1 வருஷத் தவணைக்குமேல் தவணை ஏற்படாத உண்டியல்களின் தொகை. | | ஒரே தொகைக்கு. | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | ஒன்றானல் | | | இரண்டானல் | | | மூன்றானல் | | |
| ரூபாய்க்கு மேல் | 200 ரூபா வரை | 0 | 3 | 0 | 0 | 2 | 0 | 0 | 1 | 0 |
| 200 … | 400 … | 0 | 6 | 0 | 0 | 3 | 0 | 0 | 2 | 0 |
| 400 … | 600 … | 0 | 9 | 0 | 0 | 5 | 0 | 0 | 3 | 0 |
| 600 … | 800 … | 0 | 12 | 0 | 0 | 6 | 0 | 0 | 4 | 0 |
| 800 … | 1,000 … | 0 | 15 | 0 | 0 | 8 | 0 | 0 | 5 | 0 |
| 1,000 … | 1,200 … | 1 | 2 | 0 | 0 | 9 | 0 | 0 | 6 | 0 |
| 1,200 … | 1,600 … | 1 | 8 | 0 | 0 | 12 | 0 | 0 | 3 | 0 |
| 1,600 … | 2,500 … | 2 | 4 | 0 | 1 | 2 | 0 | 0 | 12 | 0 |
| 2,500 … | 5,000 .. | 4 | 8 | 0 | 2 | 4 | 0 | 1 | 8 | 0 |
| 5,000 … | 7,500 … | 6 | 12 | 0 | 3 | 6 | 0 | 2 | 4 | 0 |
| 7,500 … | 10,000 … | 9 | 0 | 0 | 4 | 8 | 0 | 3 | 0 | 0 |
| 10,000 … | 15,000 … | 13 | 8 | 0 | 6 | 12 | 0 | 4 | 8 | 0 |
| 15,000 … | 20.000 … | 18 | 0 | 0 | 9 | 0 | 0 | 6 | 0 | 0 |
| 20,000 … | 25,000 … | 22 | 8 | 0 | 11 | 4 | 0 | 7 | 8 | 0 |
| 25,000 … | 30,000 … | 27 | 0 | 0 | 13 | 8 | 0 | 9 | 0 | 0 |
| 30,000 ரூபாய்க்கு மேல் … | பிரதி 10000 ரூபாய்க்கும்… | 9 | 0 | 0 | 4 | 8 | 0 | 3 | 0 | 0 |

## (3.) தெரிசனை யுண்டியல்.

உ

புதுக்கோட்டை, அ. மு. சா.

1910௵ ஜனவரி௴ 1௳ காரைக்குடி அ, மு, வரவு புதுக்கோட்டை அ. மு. சா. பற்று ரூ 300—0—0 (இந்த ரூபாய் முன்னூருக்குமட்டும்) ரெங்கோனில் ஷெ யார் ஆர்டருக்கு கொண்டுவந்தார் வசம் வேண்டும்போது தெரிசனையில் அ. மு. சா. சோலயப்ப செட்டியார் பணம் கொடுத்து இதில் செல்லுடன் பெற்றுக்கொண்டு இவ்விடம் கணக்கில் பற்றெழுதிக் கொள்ள வேண்டியது.

(ஒப்பம்) அ. மு. சா. கிருஷ்ணன் செட்டி.

*Rs. 300-0-0.*

## 3. தெரிசனை யுண்டியல்.

இப்படிப்பட்ட உண்டியல்களுக்குத்தான் தெரிசனையுண்டியல்கள் என்று சொல்லப் படுகின்றன.

தெரிசனை யுண்டியலாவது பணம் கொடுக்க வேண்டியவரிடம் காட்டினவுடனே பணம் கொடுக்கக் கூடியது என்று அர்த்தம் கொள்ளும்.

(1.) உண்டியல் தேதி 1—1—1910

(2.) உண்டியல் எழுதினவர், புதுகோட்டை அ. மு. சா.

(3.) வரவு காரைக்குடி அ. மு. ஆர்டருக்கு

(4.) தெரிசனையில் பணம் கோடுக்க வேண்டியது

(5) பணம் கொடுக்க வேண்டியவர் ரெங்கோன் அ. மு. சா. சோலயப்ப செட்டியார்

(6.) தொகை ரூ 300.

இவ்வளவு விபரங்கள் கண்டு உண்டியல் எழுத வேண்டும்.

இப்படிப்பட்ட தெரிசனை யுண்டியல்களுக்குச் சில ஸமயம் பணம் கொடுப்பவரிடத்தில் பணமில்லாவிட்டாலும் அல்லது பணம் வாங்கவேண்டியவருக்கு பணம் தேழ்வையில்லாவிட்டாலும் ஷை உண்டியலில் காட்டின தேதியைப்போட்டு வாங்கிவிட்டால் அந்தத் தேதிமுதல் பணம் வாங்கும் தேதி வரை வட்டி கிடைக்கும். ஸாதாரணமாய் தெரிசனையுண்டியல்கள் தான் செக்குகளைப்போல் உபயோகப் படுகின்றன.

## 4. உண்டியல்களுக்குக் கணக்கு வைப்பது.

ஒவ்வொரு கடைகளிலும் வரும் அல்லது ஏற்படும் உண்டியல்களுக்கு அடியிற்கண்டவாறு கணக்கு வைக்க வேண்டும்.

1. நம்மால் எழுதிக்கொடுக்கப்பட்ட உண்டியல்கள்.

2. நம்மால் வாங்கியனுப்பப்பட்ட உண்டியல்கள்

3. இதர கடைகளில் இருந்து நம்மைப் பணம் கொடுக்கும்படி எழுதிவந்த உண்டியல்கள்.

4. இதரர்களால் வாங்கி நமக்கு அனுப்பப்பட்ட உண்டியல்கள்.

இவைகளுக்குத் தனித்தனி விபரங்கள் வைக்க வேண்டும்.

ஷெ விபரங்களை அடியிற்கண்ட அட்டவணைப்படி பதிந்து வைத்துக்கொள்ளவேண்டும்.

பல்லாரி, அ. ரா. ம.

1910ஹு எப்ரல்மீ 1உ முதல் இவ்விடமிருந்து எழுதிக்கொடுத்தஉண்டியல்கள் விபரம்.

| உண்டியல் நம்பர். | வருஷம் மாதம் தேதி. | இன்ன ஊர். | இன்னார் பணம் கொடுக்கிறது. | இன்னார் பெயருக்கு | ஆர்டர் அல்லது பேரர். | தெரிசனையா வட்டியா. | தொகை ரூபாய். | பணம் கொடுக்கும்படி எழுதிய லெட்டரின் காப்பி பக்கம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| 1 | 5—4—10 | பம்பாய் | அ. க. | ப. க. | ஆர்டர் ... | வட்டி ... | 400 | 27 |
| 2 | 7—4—10 | சென்னை | சு. க | ஆ. ரு. | பேரர் ... | தெரிசனை ... | 300 | 28 |
| 3 | 15—4—10 | ஷை | ஷை | ஷை | பேரர் ... | வட்டி ... | 300 | 29 |
| 4 | 20—4—10 | கல்கத்தா | அ. நா. | க. தெ. | பேரர் ... | வட்டி ... | 500 | 30 |

5—4—10ல் ப. க. ஆர்டருக்கு பெம்பாய் அ. க. வைப்பணம் கொடுக்கும்படி ரூ 400 க்கு வட்டி 1 நம்பர் உண்டியல் 1 எழுதிக்கொடுத்து லெட்டர் எழுதி ஷெ லெட்டரை காப்பிப்புஸ்தகம் 27 வது பக்கத்தில் காப்பி யெடுக்கப்பட்டிருக்கிறது.

7—4—10ல் ஆ. ரு. பெயருக்கு சென்னை சு. க, வைப் பணம் கொடுக்கும்படி ரூ 300 க்கு பேரர் தெரிசனை 2 செ. உண்டியல் 1 எழுதிக்கொடுத்து லெட்டர் எழுதி ஷெ லெட்டரை காப்பிப்புஸ்தகம் 28 வது பக்கத்தில் காப்பி யெடுக்கப்பட்டிருக்கிறது.

15—4—10ல் ஆ. ரு. பெயருக்கு சென்னை சு. க. வைப்பணம் கொடுக்கும்படி ரூ 300 க்கு வட்டி பேரர் 3 செ. உண்டியல் 1 எழுதிக்கொடுத்து லெட்டர் எழுதி ஷெ லெட்டரை 29 வது பக்கத்தில் காப்பி யெடுக்கப்பட்டிருக்கிறது.

20—4—10ல் க. தெ. ப்பெயருக்கு கல்கத்தா அ. நா. வைப் பணம் கொடுக்கும்படி ரூ 500 க்கு வட்டி பேரர் 4 செ. உண்டியல் 1 எழுதிக்கொடுத்து லேட்டர் எழுதி ஷெ லெட்டரை 30 வது பக்கத்தில் காப்பி யெடுக்கப்பட்டிருக்கிறது.

இவ்விதம் எழுதிக்கொடுக்கும் உண்டியல்களுக்கு விபரம் ஏற்படுத்திக்கொள்ளவேண்டும்.

அ. மு. ராமுவய்யர் பெயரால், சென்னை க. தெ. வசம் பணம் வாங்கும்படி 1—1—10 பேரர். க. ரு. பெயருக்கு ரூ 200 க்கு 7. நம்பர் வட்டி யுண்டியல் ஒன்று அ. வ. வசம்வாங்கி சென்னை கி. நா. வுக்கு, அனுப்பி 19-வது பக்கத்தில் காப்பி யெடுக்கப்பட்ட லெட்டருடன் அனுப்பப்பட்டிருக்கிறது.

பல்லாரி, அ. ரா. ம.

**2. 1910ஹு எப்ரல்மீ 1உ முதல் இவ்விடமிருந்து வெளியூருக்கு வாங்கி யனுப்பிய உண்டியல்களின் விபரம்.**

| கொண்டுவந்தவர் பெயர். | உண்டியல் நம்பர். | வருஷம் மாஸம் தேதி. | கையெழுத்துப் போட்டவர். | இன்னாரிடம் பணம் வாங்க வேண்டியது. | இன்னார் பெயருக்கு | ஆர்டர் அல்லது பேரர். | தெரிசனையா வட்டியா | தொகை ரூபாய். | அனுப்பிய ஊரும் பெயரும். | இன்ன பக்கத்தில் காப்பி யெடுக்கப் பட்டது. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 |
| ஆ. வ. | 7 | 1—1—10. | அ. மு. ராமு வய்யர். | சென்னை க. தெ. | க. ரு. | பேரர். | வட்டி | 200 | சென்னை கி. நா. | 19 |

பல்லாரி அ. ரா. ம.

### 3. 1910ஞ ஏப்ரல்மீ 1௳ முதல்

### வெளியூரில் இருந்து, எழுதியனுப்பி வந்த உண்டியல்களின் விபரம்.

| உண்டியல் நம்பர். | வருஷம் மாதம் தேதி. | எழுதிக்கொடுத்தவர். | இன்னார் பெயருக்கு. | தரிசனையா, வட்டியா. | ஆர்டர் பேரர். | தொகை. | | | பணம் கொடுத்த தேதி. | கொடுத்த தொகை. | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | | | 8 | 9 | | |
| 10 | 10-3-10 | பாலக்காடு இ. நா. | கரூர் க. அ. | வட்டி. | பேரர். | 400 | 0 | 0 | 10-6-10 | 412 | 0 | 0 |

வெளியூர்களில் உண்டியல் எழுதிக்கொடுத்த வுடன் லெட்டர் எழுதுவார்கள். ஷை லெட்டர் வந்த வுடன் ஷை பாரத்தில் 1 முதல் 7 வது கலம் வரையில் எழுதிவைக்கவேண்டும். பிறகு பணம் வாங்க உண்டியல் கொண்டுவரப்படும் காலத்தில் 1 முதல் 7 வரை யுள்ள விபரங்கள் சரியாய்விட்டதா என்று பார்த்து பணம் பட்டுவாடாப் பண்ணும்பொழுது மற்ற இரண்டு கலங்களையும் எழுதவேண்டும்.

முதலிலேயே எழுதிவைத்துவிட்டால் தான் பணம் கொடுக்கும்பொழுது முந்தியே தாக்கல் வந்து விட்டதாக ஏற்படும்.

உண்டியல்கள் விஷயத்தில் எழுதிக்கொடுக்கப் பட்ட தாக்கல், வராமல் பணம் கொடுக்கக்கூடாது.

10—3—10ல் பாலக்காடு இ. நா. கரூர் சு. அ. பெயருக்கு ரூ 400க்கு பேரர் வட்டி 10 நம்பர் உண்டியல் 1 எழுதிக்கொடுத்திருக்கிறார்கள். ஷை உண்டியலுக்கு 10-6-10ல் அஸல் ரூ 400ம் வட்டி ரூ 12ம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

சென்னை க. தெ. விடமிருந்து ப. க. பெயரால் கல்கத்தா மு. சி. வசம் பணம் வாங்கும்படி 7-3-10 திருச்சி ம. க. கையெழுத்து பேரர், வட்டி, 500 ரூ 21 நெ. உண்டியல் 1 வந்து ஷை உண்டியலை கல்கத்தா விற்கு அனுப்பி ஷை லெட்டரை காப்பிப்புஸ்தகம் 32-ம் பக்கத்தில் காப்பி யெடுக்கப்பட்டது. அதை பின் பக்கம் காட்டப்படுகிறது.

இவ்விதமாக வெளியூரில் இருந்து வாங்கியனுப்பி வரும் உண்டியல்களை எழுதிவைக்கவேண்டும்.

பல்லாரி, அ. ரா. ம.

**4. 1910 ஞு ஏப்ரல்மீ 1உ முதல் இதற கடைகளில் இருந்து வாங்கியனுப்பிவந்த உண்டியல்கள் விபரம்.**

| அனுப்பியவர் ஊரும் பெயரும். | நம்பர். | வருஷம் மாதம் தேதி. | இன்னவூர் இன்னார் கையெழுத்து. | பணம் கொடுப்பவர் ஊரும் பெயரும். | இன்னார் பெயருக்கு. | ஆர்டர் பேரர். | தரிசனையா, வட்டியா. | தொகை. | வரவு தேதி. | வரவு தொகை. | வேறு ஊருக்கு அனுப்பப் பட்டால் ஊரின் பெயர். | லெட்டர் காப்பி பக்கம். |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| சென்னை, க. செ. | 21 | 2-3-10 | திருச்சி, ம. க. | கல்கத்தா ரூ. ஞ. | ப. க. | பேரர். | வட்டி. | 500 0 0 | … | .. …… | கல்கத்தா. | 32 |

## அத்தியாயம் XII.

## கைச்சாற்று வவுச்சர் பயில் புஸ்தக விளக்கம்.

அனேக முக்கியமான கணக்குகளில் இதுவும் ஒன்று.

சரக்குகள் வாங்கப்பட்டாலும், இதரர் செலவு செய்து நமக்கு கணக்கு முடித்துக் கொடுத்தாலும் இந்தக்கணக்குகளுக்குத்தான் கைச்சாற்றுகள் என்றும் வவுச்சர்கள் என்றும் சொல்லப்படுகின்றன.

சில வேடுகளிலாவது பற்று வழியேடுகளிலாவது கணக்கு தாக்கல் பண்ணவேண்டுமானால் இன்ன தேதி இன்ன கைச்சாற்றுப்படி என்று கணக்கு எழுத வேண்டும்.

இந்தக் கைச்சாற்று வவுச்சர்களை பயிலில் ஒட்டி வைப்பது வழக்கம்.

அப்படிக் கைச்சாற்றுகளைக் கணக்கில் தாக்கல் பண்ணினவுடனே, இன்ன தேதிக்குறிப்பில் தாக்கல் என்று எழுதி பயிலில் ஒட்டவேண்டும்.

கணக்குகள் பரிசோதிக்கப்படும் காலத்தில் கணக்கு விபரம் கேட்டால் இதை ஆஜர்பண்ணவேண்டும். இப்படி ஒட்டப்படும் கைச்சாற்றுகளுக்கு I முதல் நம்பர் கொடுக்கவேண்டும். குறிப்பில் கணக்கு எழுதும்பொழுது இன்ன நம்பர் கைச்சாற்று என்று விபரம் கண்டு தாக்கல் செய்யவேண்டும்.

வருமான வரிவிதிக்கும் அதிகாரிகளுக்கு வேண்டிய காலங்களில் இந்த வவுச்சர்கள் காட்டவேண்டியதாய் வரும்.

---

## அத்தியாயம் XIII.

### உண்டியல் புஸ்தகவிளக்கம்.

உண்டியல் என்பது என்ன என்பதை முந்தியே விளக்கப்பட்டிருக்கிறது. நம்மால் எழுதிக்கொடுக்கப் படும் உண்டியல்களுக்கு அச்சுப்போட்டு புஸ்தகங்களாக வைத்துக்கொள்ளும் வழக்கம் உண்டு.

சில பெரிய கடைகளில் உண்டியல் எழுதக்கூடிய ஒவ்வொரு ஊருக்கும் தனித்தனி உண்டியல் புஸ்தகங்கள் வைத்துக் கொள்ளுவார்கள்.

சில கடைகளில் எத்தணை ஊருக்கு உண்டியல்கள் எழுத வேண்டியிருந்தாலும் ஒரேபுஸ்தகத்தில் தான் தொடர்ச்சியான நம்பர்ப் போட்டுஎழுதிக்கொண்டுபோவார்கள்.

உண்டியல் எழுதவேண்டிய ஏர்ப்பாட்டுப்படி எழுதிஉண்டியலின் வலதுபக்கம் கீழ்ப்பாகத்தில் அதற்காக ஏற்பட்டிருக்கும் இடத்தில் பணம் கொடுக்க வேண்டியவர் பெயரை எழுதவேண்டும்.

உண்டியல் அச்சுப்பாரம் இருக்கவேண்டிய விதம் அடியிற்காட்டப்படுகிறது.

அது தான் உண்டியல். அது இரண்டுபாகங்களாக இருக்கின்றன. இடது பாகமாயுள்ளதுதான் உண்டியல். வலது பாகமாயுள்ளது நகலாக எப்பொழுதும் புஸ்தகத்திலேயே இருக்கவேண்டிய கவுண்டர்பாயில் என்று சொல்லப்படுகிறது. ஒரு உண்டியலும் பூர்த்திசெய்து காட்டப்படுகிறது.

உ

*No.* ..........

*Rs.* ..........

ஷூ ௴ ௳

வட்டி
தெரிசனை

பெயர் ..........

ஆர்டர்
பேரர்

பணம் கொடுக்கவேண்டியது

ரூ ஸயன்.

(உண்டியல் பாரம்.)

உ
சிவமயம்.

திருச்சி, க. அ.

*One Anna.*

*No.* .......... *Rs.* ..........

19 ஷூ ௴ ௳

.......... வரவு

திருச்சி, க. அ. கடைப் பற்று

ரூ .......... இந்த ரூபாய் ..........

.......... க்கு மட்டும் அவ்விடம் வட்டியுடன் ஷெயார் ஆர்டருக்கு தெரிசனையில் கொண்டுவந்தார் வசம் பணம் கொடுத்து இதில் செல்லுடன் பெற்றுக்கொண்டு இவ்விடம் கணக்கில் பற்றெழுதிக்கொள்ளவும்.

பணம் கொடுக்கிறது.

இப்படிக்கு,

ரூ க. அ.

உ

No.

Rs. 1000/—

1910ஹு மார்ச்மீ 7உ

வட்டி நடப்பு

தெரிசனை

பெயர். விருதுபட்டி, சு. மீ.

பேரர்

பணம் கொடுக்கவேண்டியது

சென்னை க. அ. ஷண்முகம் செட்டி

ரூ 1000. ஸயன்.

ரு. ம.

(உண்டியல் எழுதிக்காட்டியது.)

உ

சிவமயம்.

One Anna.

திருச்சி, க. அ.

No. 40. Rs. 1000.

1910ஹு மார்ச்மீ 7உ

விருதுப்பட்டி, சு. மீ. வரவு

திருச்சி, க. அ. கடைப் பற்று

ரூ 1000 இந்த ரூபாய் ஆயிரத்திற்கு மட்டும் அவ்விடம் ______ தெரிசனையில் ______ கொண்டுவந்தார் வசம் பணம் கொடுத்து இதில் செல்லுடன் பெற்றுக்கொண்டு இவ்விடம் கணக்கில் பற்று எழுதிக்கொள்ளவும். பணம் கொடுக்கிறது.

சென்னை, க. அ.
ஷண்முகம் செட்டி.

இப்படிக்கு,
க. அ.
(ஓம்.) ராமன் செட்டி.

ரூ 1000.

# அத்தியாயம் XIV.

## சேக்குப்புஸ்தக விளக்கம்.

செக்கு என்பது உண்டியலைப் போலவே ஒருவர் மற்றொருவரை பணம் கொடுக்கும்படி எழுத்துமூலம் சொல்லும் ஒரு ஆர்டர் என்று முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. இவைகள் அனேகமாய் பாங்கர்களால் உபயோகப்படுத்தப்படுகின்றன.

*(Coupen) Book No. 1224.*

**THE NATIONAL BANK OF INDIA Ltd.,**
**MADRAS.**

---

*Rs.*..........................

*No.* ..........................

*Date*..........................

*Name*..........................

**THE NATIONAL BANK OF INDIA Ltd.,**

*No.*..........................  **Book No. 1224.**

*Madras,*.......................... *191* .

*Pay to*.......................... *or order/bearer*

*the sum of Rupees*..........................

*Rs.*

*(Signed.)*..........................

இவைகள் பாங்கர்களாலேயே பற்றுவரவுகாரர்களுக்கு ஸப்ளை செய்யப்படுகின்றன. இவைகள் ஆங்கிலத்திற்றான் எழுதப்பட்டிருக்கும்.

செக்குப்பாரத்தைக் காட்டப்பட்டிருக்கிறது.

மேற்கண்டபடிக்குள்ள செக்கை அடியில் பூர்த்தி செய்து காட்டப்படுகிறது.

௸ செக்குகளில் 1 அணு முத்திரை அடிக்கப்பட்டிருக்கும். மேல்கண்ட செக்குகள் யார் பெயருக்கு எழுதப்பட்டிருக்கிறதோ அவர்கள் ௸ செக்குகளை வேரு ஒருவர் பெயருக்கு எண்டார்ஸ் செய்து கொடுக்கலாம். எண்டார்ஸ் பெற்றவர்களுக்குப் பணம் கொடுக்கப்படும்.

(Coupen) Book No. 1224.

**THE NATIONAL BANK OF INDIA Ltd.,**
**MADRAS.**

---

Rs. 400/-

No. 4.

Dated 5—1—1910.

Name Ramayya Rajoo & Sons.

**THE NATIONAL BANK OF INDIA Ltd.,**

No. 4. **Book No. 1224.**

*Madras, 5th January, 1910.*

*Pay to Messrs. Ramayya Rajoo & Sons, or order*

*the sum of Rupees Four Hundred only.*

*Rs. 400/-*

(*Signed*) M. N. RAMAN CHETTY.

இவைகள் தான் பாங்கிச் செக்குகள் என்று சொல்லப்படுகின்றன.

## அத்தியாயம் XV.

## கர்ரன்ஸி நோட்டுப் பதிவு புஸ்தக விளக்கம்.

கர்ரன்ஸி நோட்டு என்பது துரைத்தனத்தாரால் கொடுக்கப்பட்ட ஒரு பிராமிஸரி நோட்டு என்று சொல்லவேண்டியதாயிருக்கிறது. அதாவது அதில் கண்ட தொகையை கொண்டு வந்தார் வசம் கொடுப்பதாய் ஒப்புக்கொண்டு துரைத்தனத்தார் கையொப்பமிட்டிருக்கிறார்கள். ஆகையால் அவைகள் யாரிடம் இருந்தாலும் ரொக்க ரூபாய்க்கு ஸமானம் தான்.

இதர ஜனங்களுடைய பிராமஸரி நோட்டை நாம் பணமாக மாற்றவேண்டுமானால் அதில் கையெழுத்துப் போட்டவரிடம் அல்லது அவருக்கு வேண்டியவரிடமல்லாது வேறு இடத்தில் மாற்றிப் பணம் வாங்க முடியாது. கர்ரன்ஸி நோட்டுகளோ அப்படியல்ல யாரிடத்தில் எப்பொழுது வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம். அதுவுமல்லாமல் நாம் என்ன சரக்கு யாரிடத்தில் வாங்கினாலும் அவைகளுக்கு ஈடாகக் கர்ரன்ஸி நோட்டுகளைக் கொடுக்கலாம்.

ஆகையாற்றான் கர்ரன்ஸி நோட்டுகளை ரொக்கப் பணம்போல் பாவித்து வரவேண்டும்.

ஆனால் ஷை நோட்டுகள் சில ஸமயங்களில் திருட்டு நோட்டுகள் என்று கண்டுபிடிக்கப் பட்டால் இன்ன இடத்தில் வாங்கப்பட்டது என்று ரூபிப்பதற்காக அடியிற்கண்டவாறு பதிந்து வரவேண்டும்.

மேற்கண்டபடி நூறு ரூபாய் நோட்டுகளுக்கும் அதற்கு மேற்பட்ட தொகையுள்ள நோட்டுகளுக்கு மாவது பதிவு வைக்கவேண்டும்.

9

## 1910 வருஷம் ஏப்ரல் மீ 1உ முதல் கர்ரன்ஸி நோட்டுப் பதிவு புஸ்தகம்.

| நோட்டின் நம்பர். | தேதி. | தொகை. | இன்ன ஊர் நோட். | இன்னாரிடமிருந்து. | கிடைத்த தேதி. | நோட்டு செலவான தேதி. | இன்னாருக்குக் கொடுத்தது. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 4187 | 19-5-12 | ரூ 100 | மதுராஸ். | அ. க. | 20-3-13 | 24-3-13 | முத்தையர். |

இவ்விதம் தமிழ் நாட்டுக் கணக்குகளை நம் முன்னோர்களுடைய ஏற்பாட்டை அனுஸரித்தும் ஆங்கிலேயர்களுடைய வழக்கங்களை யொட்டியும், நாட்டுக்கோட்டை நகரத்தாருடைய வழக்கப்படி கணக்குகள் வைத்து, சிட்டைக் குறிப்பு, அஸல் குறிப்பு, பெயரேடு, அயன் தொகைப் புஸ்தகம், லாப நஷ்டக் கணக்கு, அட்டவணைப் புஸ்தகம், அனுப்புத் தபால் காப்பிப் புஸ்தகம், வரவு தபால் பயில் புஸ்தகம், தபால் அனுப்பு வரவு புஸ்தகம், உண்டியல் அனுப்பு வரவு புஸ்தகம், கைச்சாற்று வவுச்சர் பயில் புஸ்தகம், உண்டியல் புஸ்தகம், செக்குப் புஸ்தகம், கர்ரன்ஸி நோட்டுப் பதிவு புஸ்தகம் முதலிய புஸ்தகங்களை ஸரியாய் எழுதிவந்தால், அந்தந்த வருஷ முடிவில் மாத்திரமல்ல அதற்குப் பிறகு எந்த வருஷத்தில் பார்த்தாலும் ஸகல நடபடிக்கைகளையும் தெரிந்து கொள்ளலாம்.

ஆனால் இந்நூலின் விபரங்களை நன்றாய் கவனித்தால் பாங்கர் முதலிய ரொக்கக் கடைகள் உள்ளவர்களுக்கும் ஷெ ரொக்கக் கடைகளில் வேலை பார்க்கிறவர்களுக்கும், அவசிய முள்ளவைகள் போல் தோன்றும்.

பல பல வியாபாரங்களில் பல விதமாய்க் கணக்குகள் வைக்கவேண்டியதாய் இருந்தாலும் இந்நூலிற் கண்டபடிதான் சிட்டைக் குறிப்பு, அஸல் குறிப்பு, பெயரேடு, அயன் தொகை முதலியவைகள் வைக்கப் படவேண்டும்.

வருமான வரிக் கணக்கு பாகத்தில் கண்டபடி ஒவ்வொரு தொழிலுக்கும் பெயரேடுகள் மாத்திரம் வேறுபட்டால் போதுமானதாய் இருக்கிறது,



உ

# தமிழ்நாட்டுக் கணக்குப்பதிவு நூல்.

## இரண்டாவது பாகம்

## இன் கம்டாக்ஸ் விளக்கம்.

### 1. டாக்ஸ் என்பதை விளக்குவது.

டாக்ஸ் என்பது ராஜாங்கத்தாரால் பிரஜைகளிடத்தில் வாங்கப்படும் வரி என்று சொல்லப்படுகிறது.

ஜனங்கள் ஒவ்வொருவரும் ஸௌக்கியமாய் வாழ்ந்து வரவேண்டுமானால் அவரவர்கள் தங்களுக்கு வேண்டிய ஸௌகரியங்களைத் தாங்களே செய்து கொள்ள வேண்டியிருக்கிறது.

உதாரணமாக ஜனங்கள் தங்களுக்கு ஸவாரிபோக வேண்டுமானால் அவரவர்களுடைய சக்திக்குத் தக்கபடி ஒற்றைமாட்டு வண்டியோ குதிரை வண்டியோ ஸாரட்டுகளோ மோட்டார்வண்டிகளோ எதுவாங்கக் கூடியதோ அதை வாங்கி வைத்துக்கொண்டு விடுகிறார்கள்.

ஆனால் அவ்வண்டிகள் செல்லுவதற்கு ஸரியான சாலைகளை எல்லோர்களுக்கும் பொதுவாக ராஜாங்கத்தார் ஏற்படுத்தவேண்டியிருக்கிறது.

ஜனங்கள் தங்களுக்கு வேண்டிய சினேகிதர்களுக்கு ஸாமான்னியமான ஸமாச்சாரங்களை அனுப்ப வேண்டுமானால் ஒவ்வொருவரும் தனித்தனி ஆள் பிடித்து அனுப்ப வேண்டும். அப்படி அனுப்புவதில் ஜனங்களுக்கு எவ்வளவு கஷ்டங்களும் நஷ்டங்களும் உண்டாகின்றன.

இக்கஷ்ட நஷ்டங்களை நிவர்த்தி செய்ய ராஜாங்கத்தார் தபால்இலாக்காவை நியமிக்கவேண்டியிருக்கிறது.

அதுபோலவே அவஸரமான ஸமாசாரங்களை ஒரு ஊரில்இருந்து மற்றொரு ஊருக்கு அனுப்ப வேண்டுமானால் ஒவ்வொருவரும் தனித்தனி தந்திக்கம்பிகள் ஏற்படுத்திக் கொள்ளுவது ஸாத்தியமில்லை.

அதற்கு ராஜாங்கத்தார் தந்தி இலாக்காவை ஏற்படுத்த வேண்டியிருக்கிறது.

தூரதேசங்களுக்குப் பிரயாணம் போக வேண்டுமானல் இருப்புப்பாதைகளையும் ராஜாங்கத்தாரே ஏற்படுத்தவேண்டியிருக்கிறது.

இன்னும் இப்படிப்போலொத்த பொது நன்மையான காரியங்களை ராஜாங்கத்தார் செய்யவேண்டியதற்காக பிரஜைகளிடத்தில் வாங்கும் தொகைதான் டாக்ஸ் என்று சொல்லப்படுகிறது.

## 2. டாக்ஸின் பிரிவுகளை விளக்குவது.

அப்படி ராஜாங்கத்தாரால் வாங்கப்படும் டாக்ஸ் "டாரெக்ட்டாக்ஸ்" என்றும் "இன்டாரெக்ட் டாக்ஸ்" என்றும் இருவகைப்படும்.

டாரெக்ட் டாக்ஸ் என்பது பிரஜைகளால் ராஜாங்கத்தாரிடத்தில் நேரில் செலுத்தக்கூடிய லாண்டு ரெவென்யு டாக்ஸ், போஸ்டல் டாக்ஸ், தந்தி டாக்ஸ் வீட்டு டாக்ஸ் முதலியவைகள் தான்.

இன்டாரெக்ட்டாக்ஸ் என்பது, குடிகளிடத்தில் வாங்காமல் நேரில் வியாபாரிகளிடத்திலேயே வாங்கிவிடுகிற, புகையிலைடாகஸ், கஸ்டம்ஸ்டாக்ஸ், முதலியவைகள்.

இவ்விதமாய் டாக்ஸ் என்பது இரண்டு பிரிவுகளாக இருக்கின்றன.

## 3. இங்கிலாந்தின் டாக்ஸை விளக்குவது.

இங்கிலாந்தில் III வது வில்லியம் என்னும் அரசருடைய அரசாக்ஷி வரையில் அடுப்புவரி என்பதாக ஒருவரி ஏற்படுத்தியிருந்தார்கள். அதாவது ஒவ்வொரு வீட்டிலும் எவ்வளவு அடுப்புகள் இருக்கின்றனவோ அவ்வளவிற்கும் வரி வாங்கி வந்தார்கள். வரிவஸூல் செய்பவர்கள் வீட்டிற்குள் போய் அடுப்புகளை எண்ணுவது அஸாத்தியமாய் இருப்பதை உத்தேசித்து அதை ரத்துசெய்து ஜன்னல்வரி என்னும் வரியை ஏற்படுத்தினார்கள். ஏனென்றால் வீட்டைச் சுற்றிலும் போய்ப்பார்த்து, ஜன்னல்களை எண்ணுவது சுலபமாய் இருந்தது.

அதிக நாகரீகமடைந்த இக்காலத்திலோ இங்கிலாந்தில் அப்படிப்பட்ட வரிகளையெல்லாம் ரத்துசெய்து ஜனங்களுடைய சம்பளம், வீட்டினுடைய வாடகை, வரும்படிகளின் தொகை, ஒவ்வொருவர் குடிக்கக்

கூடிய பிராந்தி, ஒயின் முதலியவைகள் போன்ற இவைகளுக்கு வரி ஏற்படுத்தி இருக்கிறார்கள்.

## 4. இந்தியா டாக்ஸை விளக்குவது.

இந்தியாவிலும் மேற்கண்டபடி லாண்டு ரெவென்யூடாக்ஸைத் தவிர மற்றக் காரியங்களுக்கும் டாக்ஸ் ஏற்படுத்தி வந்தார்கள்.

அப்பால் இங்கிலாந்தைப் போலவே இந்தியாவிலும் வியாபாரம் ஜாஸ்தியானபடியால், 1880ம் வருஷத்திற்கு இப்பால், அவரவர்களுக்கு வரும் நில வரும்படி யல்லாத மற்றவகையாயுள்ள வரும்படிகளுக்கு, வருமான வரியை விதிக்க சட்டம் ஏற்படுத்தப்பட்டது

இதுவரை ஏற்படுத்தப் பட்டிருந்த வரியை நிர்ணயிப்பது ஒவ்வொரு காரியங்களிலும் வரிவிதிக்கும் அதிகாரிகளுக்கு சுலபமாயிருந்தது. உதாரணமாக தபால் இலாக்கா வரியை ஒவ்வொருவரும் செலுத்த வேண்டியதற்கு, தபாலின் இடையை வைத்து தோலாவிற்கு இவ்வளவு பைஸா என்று நிர்ணயித்து விட்டார்கள். அப்படியே தந்தி இலாக்காவில் வார்த்தைக்கு இவ்வளவு அணா என்றும், லாண்டு ரெவெனியூவில் ஏக்கருக்கு இவ்வளவு ரூபா யென்றும், பிராந்தி சாராயம் விற்பவர்களிடம் கியாலனுக்கு இவ்வளவு என்றும், இருப்புப்பாதை இலாக்காவில் பிரயாணம் செய்யவேண்டியவர்களுக்கு மயிலுக்கு இவ்வளவு பைஸா என்றும், இப்படி யெல்லாம் சுலபமாய் டாக்ஸ் ஏற்படுத்திவிட்டார்கள்.

## 5. வருமான வரியை விளக்குவது.

வருமான வரி விதிப்பது மற்றவைகளைப்போல சுலபமாய் விதிக்கக் கூடியதல்ல. அப்படி சுலபமாய் விதிக்கக் கூடாததையொட்டி கணக்குமூலம் வரி ஏற்படுத்துவது என்னும் வழியை அனுஸரிக்கிறார்கள்.

கொஞ்சவரும்படியுள்ளவர்களுக்கு கணக்குகள் ஸரியாய் ஏற்படுத்திக் கொள்ளுவது கஷ்டம் என்பதை உத்தேசித்தும், தங்களுடைய குடும்பச் செலவுகளை நடத்தி அதிலிருந்து மிச்சப்படுத்துகிறவர்களிடம் மாத்திரம் வரி வஸூல் செய்தால் போதும் என்ற எண்ணத்தை வஹித்த நமது காருண்ணியமுள்ள ஆங்கிலேய கவரன்மெண்டார் வருஷம் ஒன்றுக்கு ஆயிர ரூபாயையாவது அதற்கு மேற்பட்ட தொகைகளையாவது ஸம்பாதிப்பவர்களுக்கு மாத்திரம் வருமான வரி விதிக்கிறார்கள்.

## 6. வருமான வரி விதிக்கும் முறையை விளக்குவது.

இந்த வரியானது மற்ற வரிகளைப்போலல்லாமல் கணக்கை வைத்துக்கொண்டே தீர்மானிக்க வேண்டியதாய் இருக்கிறது என்று முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. ஆயிரரூபாய்க்குமேல் வருமானம் உள்ளவர்கள் அதற்கு இவ்வளவுதான் வரி செலுத்தலாம் என்று வருமான வரிவிதிக்கும் அதிகாரிகளுக்கு ரூபிப்பதற்காக, வரவு செலவு கணக்கு வைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

ஆனால் வரி செலுத்தக் கூடாதவர்களுக்கு கணக்கு வேண்டாமென்றாலோ அவர்களும் வரவு செலவு கணக்கு வைத்துக் கொள்ள வேண்டியது தான். ஏனென்றால் ஆயிர ரூபாய்க்குக் குறைந்து தான் அவர்கள் ஸம்பாதிக்கிறார்கள் என்று வரி விதிக்கும் அதிகாரிகளுக்கு ரூபிக்க வேண்டியதாய் வரும். ஆகையால் எல்லோர்களும் வரவு செலவு கணக்கு வைத்துக் கொள்ள வேண்டியது தான்.

இந்தியர்களில் அனேகர் வரவு செலவு கணக்கு வைத்துக் கொள்ளாமல், தாங்களும் கஷ்டத்திற்குள்ளாகி தன்னைச் சேர்ந்தவர்களையும் கஷ்டத்திற்குள்ளாக்குகிறார்கள்.

இதின் மூலமாயாவது அவர்கள் கணக்கு வைத்துக் கொள்ளட்டும் என்றே துரைத்தனத்தார் இந்தியர்களிடத்தில் விசேஷ அபிமானத்தை வஹித்து வருமான வரி விதிக்கும் சட்டத்தை உண்டாக்கினார்கள் என்று கூடச் சொல்ல வேண்டியிருக்கிறது.

இப்படி யிருந்தும் அனேகர்கள் வரவு செலவு கணக்கு வைத்துக் கொள்ளாமல், வருமான வரி விதிக்கும் அதிகாரிகள் போடும் வரியை செலுத்திக் கொண்டு வருகிறார்கள். கணக்கு வைத்துக் கொண்டிருக்கும் சிலரும், சரியானபடி கணக்கு வைத்துக் கொள்ளாமல், அவர்களும் போடும் வரியை செலுத்திவருகிறார்கள். இப்படிக் கணக்கை வைத்துக் கொண்டு விதிக்கும் வரி தான் வருமான வரி என்று சொல்லப்படுகிறது.

## 7. வருமான வரிக் கணக்குத் தாயார் செய்ய வேண்டிய வழியை விளக்குவது.

இக்கணக்கில் முக்கியமாய் கவனிக்க வேண்டிய வைகள் மூன்று விஷயங்கள் இருக்கின்றன.

1. முதல் வருஷம் ஏப்ரல் மீ 1வ முதல் மறுவருஷம் மார்ச்மீ 31வ வரை இன்னின்ன வழிகளில் இவ்வளவு இவ்வளவு வரும்படி என்பதைத் தனித் தனியாய்க் காட்ட வேண்டும்.

2. ஷை காலங்களில் இன்னின்ன வழிகளில் இவ்வளவு இவ்வளவு செலவு என்பதைத் தனித் தனியாய்க் காட்ட வேண்டும்.

3. தனித் தனிப் பெயரேட்டில் பதிந்திருக்கும் முதற் கலத்தில் கண்ட தொகைகளை ஒன்று கூட்டி ஷை வரவு தொகையில் இருந்து, தனித் தனிப் பெயரேட்டில் பதிந்திருக்கிற செலவு தொகைகளை ஒன்று கூட்டிக் கழித்து வந்த தொகைக்குத் தான் வருமான வரி விதிக்கப்படும். அப்படிக் கழித்து வந்த தொகை தான் அஸல் வரும்படி யென்று சொல்லப்படுகிறது.

ஸரியானபடி கணக்கு எழுதி வந்து அதிகாரிகளுக்கு ஒப்பித்துக் கொடுத்தால் அக்கணக்கின்படி 1,000 ரூபாய்க்குக் குறைந்த வரும்படி யுள்ளவர்களுக்கு வருமான வரி விதிக்கமாட்டார்கள்.

## 8. K. பாரம் இன்னது என்பதை விளக்குவது.

ஒவ்வொரு வருஷமும் மார்ச்மீ 31வ வரை இன்கம் டாக்ஸ் கணக்கிற்கு கே. பாரம் என்பதாக

ஒரு கணக்குத் தயார் செய்து கொடுக்க வேண்டியது. ஷெ பாரத்தில் 7 கலங்கள் ஏற்பட்டிருக்கும்.

1. நபருடைய பெயர்.

2. வேலை நடத்தும் இடம்.

3. வரும்படி விபரங்கள்.

4. இன்ன காலம் முதல் இன்ன காலம் வரை இவ்வளவு இவ்வளவு வரும்படி என்ற விபரங்கள்.

5. வரும்படியில் இருந்து கிரமமாய் கழிக்கக் கூடிய செலவு தொகைகள்.

6. 4 வது கலத்தில் இருந்து 5 வது கலத்தைக் கழித்து வந்த தொகை. அதாவது அஸலாய் வந்த லாபம்.

7. ஷரா.

மேற்கண்ட பாரத்தை அடியில் காட்டப்படுகிறது.

மேற்கண்ட பாரத்தை அடியில் காட்டப்படுகிறது.

| நபருடைய பெயர். | வசிக்கும் இடம் அல்லது வேலை நடத்தும் இடம். | வரும்படி விபரங்கள். ஒவ்வொரு வகையில் வரும் வரும்படிகளை தனித்தனி காட்ட வேண்டும். | | | | | கழிக்கவேண்டிய செலவு மொத்தத் தொகை. | பாக்கி அஸல் வரும்படி. | ஷரா. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | *a* வரி விதிக்கப்பட்ட வரும்படி முகாந்திரங்கள். | *b* பங்குகள் உண்டானால் இத்தனை பங்கு. | *c* பங்குக்காரர்களுடைய பெயர். | *a* வரும்படி மொத்தம் இவ்வளவு என்பது. | *b* வரும்படி வந்த காலம். | | | |
| 1 | 2 | 3 | | | 4 | | 5 | 6 | 7 |
| | | | | | | | | | |

## 9. K. பாரம் தயாரிக்க வேண்டிய வழியை விளக்குவது.

1. இந்தக் கலத்தில், கடை ஒருவருடையதாயிருந்தால் அவருடைய பெயரைப் போடவேண்டும். வர்த்தகக் கூட்டத்தாராயிருந்தால், அக்கூட்டத்தாருடைய விலாஸத்தை இதில் எழுதவேண்டும்.

2. இந்தக் கலத்தில் வர்த்தகம் அல்லது தொழில் நடக்கும் இடத்தை எழுதவேண்டும். அப்படி நடக்கும் தொழில் பல இடங்களானால், பல ஊர்களையும் எழுதி, அதில் வாஸம் செய்யும் ஊர் இன்னதென்று குறிக்கவேண்டும்.

3. இந்தக் கலத்தில் (*a*) பாகத்தில் வரும்படியினுடைய விபரங்களை எழுதவேண்டும். அதாவது கட்டிடங்களில் வரக்கூடிய வாடகை, வட்டிக்குவிட்டிருக்கும் தொகைகளின் வட்டி, இதற வியாபாரங்களில் ஒவ்வொன்றிலும் உள்ள தனித்தனி வரும்படி, சம்பளம், பென்ஷன், வருஷவர்த்தனை, நன்கொடை, இவைகள் போன்ற விபரங்களை எழுதவேண்டும். கவர்ன்மெண்டுப் பத்திரவட்டியும், ஸொந்தக்காரர்களால் வாஸம் செய்யப்படும் கட்டிடங்களின் மதிப்பு வாடகையும், வரிக்குள்ளானவைகள் தான்.

(*b*.) பாகத்தில் பங்குக்காரர்கள் உண்டானால் அந்தந்த வரும்படி விபரங்களை யொட்டி இவ்வளவு பங்கு என்பதாய்க் காணவேண்டும்.

(*c*.) பாகத்தில் பங்குக்காரர்களுடைய பெயரை தனித்தனி காணவேண்டும்.

4. இதின் (*a*) பாகத்தில் வரும்படித் தொகைகளைக் காணவேண்டும் (*b*) பாகத்தில் எந்தத் தேதிமுதல் எந்தத் தேதிவரை வரும்படி வந்தகாலம் என்பதைக் காணவேண்டும்.

5. இக்கலத்தில் வரும்படியை யொட்டி ஏற்பட்ட செலவுகளை எழுதவேண்டும்.

ஆனால் கணக்கில் காட்டப்பட்ட லாபங்கள் விஷயமாகவே, முழுவதும் பிடித்திராத விரயத்தொகை அல்லது செலவு தொகையின் பொருட்டும், வரி விதிக்கப்பட்டவருடைய ஸ்வரெக்ஷணைக்காகவோ, அவருடைய குடும்ப அல்லது வீட்டு ஸிப்பந்திகளின், ஸ்வரெக்ஷணைக்காகவோ பிடித்த செலவின் பொருட்டும், உள்ள தொகையை மொத்த வரவில் இருந்து எவ்வளவும் கழிப்பது கூடாது. தவிர வரி விதிக்கப்பட்டவர் மதுராஸ் 1884 வருஷத்தின் 1வது ஆக்டின் 119 120, 138, 140, 148, 150 இந்த ஸெக்ஷன்களின் படிக்கும், மதுராஸ் 1884 வருஷத்து 4வது ஆக்டின் 63, 75வது ஸெக்ஷன்களின்படிக்கும், 1884வருஷத்து 5வது ஆக்டின் 57, I, II ஸெக்ஷன்களின்படிக்கும், இந்தியா 1889 வருஷத்து 13வது ஆக்ட்டு 17வது ஸெக்ஷன்படிக்கும், கட்டிடங்கள், வியவஸாயத்திற்கு உட்படாதமனைகள், இவைகளின் சுவதந்திரத்திற்காக ஏற்பட்டிருக்கும் வரிகளைத்தவிர, தான் செலுத்தும் எவ்வித வரிகளையும் இறைகளையும் மொத்த வரவு தொகையில் இருந்து எவ்வளவும் கழிக்கக்கூடாது. வியாபார ஸம்பந்தமாயும் தொழில் ஸம்பந்தமாயும் என்ன செலவு நேர்ந்திருக்கிறதோ அதை மாத்திரம் இக்கலத்தில் எழுதவேண்டும்.

6. வரும்படியில் இருந்து செலவைக்கழித்து இக்கலத்தில் எழுதவேண்டும்.

7. முன் வருஷத்திற்கும் இவ்வருஷத்திற்கும் வரவு செலவு வித்தியாஸங்கள் ஜாஸ்தி நேர்ந்தால் இக் கலத்தில் விவரிக்கவேண்டும்.

## 10. மொத்த வரவில் இருந்து கழிக்கக் கூடியவைகளை விளக்குவது.

மொத்த வரவில் இருந்து எவைகளைக் கழித்தால் ஒப்புக்கொள்ளக் கூடுமோ அவைகளுக்கு உதார ணம்:—

1. தொழில் அல்லது வர்த்தகம் இவைகளுக்கு உபயோகப்பட்ட கருவிகள், கட்டிடங்கள், வேலைக்குரிய யந்திரங்கள், இவைகள் மராமத்து செய்வதற்காக வாஸ்தவத்தில் ஏற்பட்ட தொகைகள்.

2. ஷை யந்திரங்கள் ஆயுதங்கள் கையிருப்பு ஸாமான்கள் ஆகிய இவைகளுக்குச் சேதம் நேர்ந்தால், உத்திர வாதம் செய்வதற்காகக் கொடுத்த தொகைகள் (எந்த வருஷத்து வரும்படிக்குக் கணக்குக் கொடுக்கப் படுகிறதோ அந்த வருஷத்துப் பிரீமியம் தான் கழிக் கப்படும்.)

3. அப்படிப்பட்ட தொழில் அல்லது வர்த்தகத் திற்காக வென்றே உபயோகிக்கப்பட்ட இடத்தின் வாடகை.

"ஆனால் ஷை இடமானது தொழிலுக்கு மாத்தி ரம். உபயோகப்படுத்தப்படாமல் குடியிருப்பு முதலிய வைகளுக்கு உபயோகப்படுத்தப்பட்டால் அந்த பாகத்

திற்குள்ள வாடகையை மொத்தவாடகையில் இருந்து கழித்து பாக்கியை மாத்திரம் தான் மொத்த வரும்படியில் இருந்து கழிக்கலாம்."

4. வரி விதிக்கப்பட்ட வருடைய செலவில் ஷெகட்டிடம் மராமத்து செய்யப்பட்டால் அதை மராமத்து செய்வதற்காக வாஸ்தவத்தில் ஏற்பட்ட தொகை.

"இப்படிப் பட்ட செலவுகள் வவுச்சர் மூலமாய் ரூபிக்கப்படக் கூடியதாய் இருக்க வேண்டும்."

5. வர்த்தக ஸம்பந்தமாய் வேலைக்கென்றே ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஸிப்பந்திகளின் சம்பளம்.

"ஆனால் வரி விதிக்கப்பட்ட வருக்கு பிரிட்டிஷ் இந்தியாவிற்கு வெளியில் தொழில் நடந்து அப்படிப்பட்ட தொழிலுக்கும் ஷெ. ஸிப்பந்திகள் வேலை செய்தால் இரண்டுவேலைகளுக்கும் ஈவு செய்து பிரிட்டிஷ் இந்தியாவில் நடக்கும் வேலைக்கு அச்சிப்பந்திகளுக்கு என்ன ஏற்படக் கூடியதோ அதை மாத்திரம் தான் கழிக்கலாம்."

6. வர்த்தகத்தில் ஏற்பட்ட நஷ்டத் தொகையாவது, சரக்கிற்கு ஏற்பட்ட நஷ்டத் தொகையாவது, வாஸ்தவத்தில் திரும்பிக் கிடைக்கக் கூடாதது என்று கணக்கு மூலம் தெரிந்தால் அத்தொகைகள்.

"ஒரு வியாபாரத்தில் சில வழியில் லாபமும் சில வழியில் நஷ்டமும் ஏற்பட்டால், நஷ்டம் லாபத்தை விட ஜாஸ்தியானல் அந்த அதிக நஷ்டத் தொகையைக் கழிக்கலாம்."

7. பின்வரும் நிபந்தனைகளுக்கு உட்பட்டு வருஷமுடிவிற்குள் வராததென்று வாஸ்தவத்திலும் தகுந்த காரணங்களின் பேரிலும்தள்ளி விடப்பட்ட சச்சுக் கடன் தொகைகள் (bad debts).

a. மேற் சொன்ன சச்சுக்கடன் அல்லது கடன்கள், கடன் ஏற்பட்ட தேதியில் இருந்து வருஷந் தோறும் பின் கணக்கில் கொண்டு வரப்பட்டவை களா யிருக்க வேண்டும்.

b. அது இதற்கு முந்தி ஒரு தடவை நஷ்டமாகக் கழிக்கப்பட்ட தாயிருக்கக் கூடாது.

c. ஒரு குறிப்பிட்ட கடன் தொகை ஒரு வருஷத்தில் வாஸ்தவமாகத் தகுந்த காரணத்தின் பேரில் கணக்கின் லாப நஷ்டத்திற்கு ஒரு தடவை எழுதி விடப்பட்டிருந்தால் அடுத்த வருஷத்திலாவது அதற்குப் பிற்பாடு எந்த வருஷத்திலாவது, கிடைக்கும் லாபத்தில் இருந்து ஷை கடனில் எப்பாகத்தையும் கழிக்கவும் அல்லது அதற்கு எதிரடையாகச் சாட்டவும் கூடாது.

8. வர்த்தகத்திற்காகக் கடன் வாங்கப்பட்ட மூலதிரவியத்தின் வட்டியை வரும்படியில் கழிப்பதானால், ஷை மூலதிரவியம் முற்றிலும் வர்த்தகத்தில் தான் உபயோகப்பட்டது என்று வரி விதிக்கும் அதிகாரிகளுக்குத் திருப்தியுண்டாகும்படி காட்டவேண்டும்.

"மூலதிரவியம் முற்றிலும் வர்த்தகத்திற்கு உபயோகப்படாவிட்டால் உபயோகப்பட்ட திரவியத்தின் வட்டியை மாத்திரம் வரும்படியில் கழிக்கலாம்.

9. தற்செயலாய் நேரிடக் கூடிய செலவுகள் அதாவது, கமிஷன் டிஸ்கவுண்டு செலவு, தபால் செலவு ,தந்திச் செலவு, கோர்ட்டுச் செலவு, அட்வர்ட் டயிஸ் மெண்டுச் செலவு, காகிதம் மை முதலியவை களின் செலவுகள், கப்பல் ரயில் முதலியவைகளில் சரக்கு ஏற்றுமதி, இறக்குமதிச் செலவுகள், இப்படிப் பட்ட செலவுகளேயும் மொத்த வரும்படியில் இருந்து கழிக்கலாம்.

“இவ்விஷயங்களிலும் வருமான வ்ரி விதிக்கும் அதிகாரிகள் மனதிற்கு ஏற்க வவுச்சர்கள் இருக்க வேண்டும்”

10. இன்ஷியூரன்ஸ் கம்பேனிக்கு செலுத்தப் பட்ட தொகைகள்.

“அதாவது வரி செலுத்துபவருக்குப் பிராண ஹானிவரும் காலத்தில் குடும்பமெம்பர்களுக்கு உதவி செய்வதற்காக உடன்படும் லயிப் இன்ஷியூரன்ஸ் கம்பேனிக்கு செலுத்தப்படும் ப்ரீமியம்.”

“இவைகளுக்குப் பணம் கட்டின ரெசீதுகள் காட்டப்பட வேண்டும்.”

ஆனல் சட்டத்திற்கு விரோதமாய் செலுத்தப் பட்ட தொகைகள் ஒப்புக் கொள்ளப்பட மாட்டாது.

11. தொழில் அல்லது வர்த்தகத்திற்கு உதவி யாக ஏற்பட்டிருக்கும் நபர்களுக்கு இடவேளைக்கு என்று செலவு செய்யப்பட்ட சாப்பாட்டுச் செலவு.

12. யந்திரம் வேலைக்குரிய ஆயுதங்கள் இவை களின் சாதாரண பாதுகாப்பிற்காகவும், மராமத்திற்

காகவும், அந்த வருஷத்தின் லாபத்தில் இருந்து வாஸ்தவமாக செலவழிக்கப்பட்ட தொகை.

13. யந்திரம் வேலைக்குரிய ஆயுதங்கள் ஆகிய இவைகளின் மதிப்பின் மேல் நூற்றுக்குப் பத்து வரை மதிப்புக் குறைவிற்காக அந்த வருஷத்தின் லாபங்களில் இருந்து வாஸ்தவமாய் எடுத்து வைக்கப் பட்ட தொகை.

" இவ்விதம் கழிக்கப்படும் தொகைகள் எந்த வருஷத்து வரும்படியில் கழிக்கப் படுகிறதோ அந்த வருஷத்தில் அந்த யந்திரங்கள், ஆயுதங்கள், பெறக் கூடிய தொகைக்குத் தக்கபடி கழிக்க வேண்டும்."

14. சொந்தக்காரர்களால் வாடகைக்கு விடப் பட்டிருக்கும் வீடுகள் விஷயங்களில்:—

*a.* அப்படிப்பட்ட வீடுகளுக்கு சேதம் நேரிட்டால் உத்தர வாதம் செய்வதற்காகவாவது, உத்தர வாதம் செய்து வைத்திருப்பதற்காகவாவது செலவான தொகைகள்.

" ஆனல் எந்த வருஷத்தில் வரி விதிக்கப்படுகிறதோ அந்த வருஷத்தில் கிடைக்கிற வரும்படியின் மேல் அவ்வருஷத்தில் செலுத்தப்பட்ட கையொப்பம் ப்ரீமியம் இவைகளை மாத்திரம் கழிக்கலாம்.

*b.* வரி விதிக்கப்பட்ட வருடைய செலவில் வீடுகள் மராமத்து செய்யப்பட்டால், அவைகளை மராமத்துச் செலவிற்காகவும், புதுப்பிப்பதற்காகவும் அவ் வருஷத்தில் வாஸ்தவமாய்ச் செலவான தொகையை

கழிக்கலாம். ஆனால் அக்கட்டிடங்களின் மதிப்புக் குறைவிற்காக தொகை ஒப்புக்கொடுக்கப்பட மாட்டாது.

*c.* வாடகைத் தொகையிலே மொத்தத்தில் நூற்றுக்கு 6 வீதமும், அல்லது அதற்கு மேற்படாமல் வாடகை வஸூலுக்காகச் செலவான தொகை யானால் அவைகளைக் கழிக்கலாம்.

*d.* ஸ்வாதீன மில்லாமல் கொதுவை, வைத்துக் கொண்டவருக்கு அவ்வருஷத்திலே வட்டி வாஸ்தவத்தில் செலுத்தப்பட்டிருந்தாலும், செலுத்தப்படாமல் இருந்தாலும் அவ்வித வட்டியைக் கழிக்கலாம்.

*e.* வரிகொடுப்பவரால் அந்த வீடுகளுக்கு அல்லது காலி மனைகளுக்கு செலுத்தப்பட்ட யாதொரு வாடகை அல்லது குயிட்டென்டுவரி, இவைபோன்ற வரியைக் கழிக்கலாம்.

15. 1886 வருஷத்து 2வது ஆக்ட் 24வது பிரிவின்படி சொந்தக்காரர் வாஸம்செய்யும் காரியங்களுக்காக அனுபவிக்கப்படும் வீடுகள் விஷயங்களில்:—

*a.* சொந்தக்காரர் தங்களுடைய கட்டிடங்களை வாஸம் செய்யும் வீடுகளாக அனுபவிப்பார்களாகில் மதிப்பிட்ட அதின் வருஷ வாரி வாடகையை 6 பங்காக்கி அதின் 5 பங்கை 4வது கலத்திற்கண்ட நிகர் வரும்படியுடன் சேர்த்தால் மொத்தம் எவ்வளவு ஆகிறதோ அவைகளுக்கு வரி விதிக்கப்படும். அப்படியாகப்படுத்திவரும் தொகை வரி விதிக்கக்கூடிய தொகையாய் இருந்தாலும் சரி, விதிக்கக்கூடாத

தொகையாயிருந்தாலும் சரி: அத்தொகையை இதர வரும்படிகளுடன் சேர்க்கவேண்டியதுதான்.

*b*. வரிவிதிக்கப்படும் காலத்தில் ஸொந்தக்காரரால் அனுபவிக்கப்படாமல், ஆனால் ஸொந்தக்காரர் உபயோகத்திற்கென்றே பூட்டிவைக்கப்பட்டிருந்தால் அப்படிப்பட்ட வீடுகள் விஷயத்திலும் மேற்கண்டபடி மதிப்பு ஈவுவாடகையை வரும்படியுடன் சேர்க்கவேண்டியதுதான்.

கட்டிடம் புதுப்பிப்பது என்னும் வார்த்தையானது கட்டிடங்கள் முன்னிருந்த ஸ்திதியிலேயே இருக்கநேர்ந்திருக்கிறபழுதுகளை மாத்திரம் பார்ப்பது என்று அர்த்தமே தவிர வேறு வஸதிகளுக்காகச் சேர்த்துக் கட்டப்படுவது என்று அர்த்தமில்லை.

*c*. ஸொந்தக்காரர் குடியிருக்கும் வீட்டிலேயே வேரு ஜனங்கள் குடிக் கூலிக்கு இருந்தால், அந்த இரண்டு பாகத்தையும் வெவ்வேராய் அந்தந்த ரேட்டுப்படி கணக்கிடவேண்டியது.

## 11. மொத்த வரும்படியிலிருந்து கழிக்கக்கூடாதவைகளை விளக்குவது.

மொத்த வரும்படியில் இருந்து அடியிற் கண்டவைகளைக் கழிக்கக்கூடாது.

1. சட்டப்புஸ்தகங்கள் காகிதங்கள் இவைகள் வாங்க வக்கீலுக்குப் பிடித்தசெலவு.

2. கட்டிடங்களைப் புதுப்பிக்கும் செலவல்லாமல் இனிமேல் புதுப்பிப்பதற்காக என்று எடுத்து வைக்கப்பட்ட தொகை.

3. இனிமேல் உண்டாகப் போகிறதென்று முன்னதாக எதிர்பார்க்கப்பட்ட அல்லது தற்செயலாய் நேரக்கூடிய நஷ்டத்திற்காக லாபத்திலிருந்து ரக்ஷக நிதியாக எடுத்து வைக்கப்பட்ட தொகை.

4. கடன் தொகைகளை செலுத்துவதற்காக எடுத்து வைக்கப்பட்ட தொகை.

5. வர்த்தகக் கூட்டத்தின் பங்குக்காரர்கள் கொடுத்த மூலதனத்திற்கு வட்டி.

6. பங்குக்காரர்களுக்கு வர்த்தனை.

7. வராதவைகள் என்று எழுதப்படாத சச்சு அல்லது ஸந்தேகமான கடன் ( expected loss.)

8. முந்திய வருஷத்தில் நேரிட்டது இவ்வளவு என்று நிச்சயித்த நஷ்டத்திற்காக இவ்வருஷத்திய லாபத்தில் இருந்து ஏதாவது தொகை எடுத்துவைத்தால் அது.

9. நிலவரி போன்ற இதரவரிகள்.

10. வரிவிதிக்கப் பட்டவருடைய ஸவரெக்ஷணைக்காவது, அல்லது அவர் குடும்பஸவரெக்ஷணைக்காவது, பிடித்த செலவு.

11. வீட்டு ஊழியக்காரர்களுக்கு கொடுக்கப்பட்ட சம்பளம்.

12. வீட்டு ஊழியக்காரர்களுக்குக் கொடுக்கப்பட்ட இனும் முதலியவைகள்.

13. பந்தயம், தர்மம், கல்விச்சாலை முதலியவைகளுக்குக் கையொப்பம்.

14. வர்த்தகக்கூட்டத்தில் சேர்ந்த பங்குக்காரர்களுக்கு செலவழிக்கப்பட்ட இடவேளை சாப்பாட்டுச் செலவு.

15. வட்டியை ரொக்கமாக வாங்காமல் அதற்குப் பத்திரம் எழுதிவாங்கினுல் அந்தத்தொகை.

16. இனிமேல் ஏற்படக்கூடிய நஷ்டத்திற்காக உத்தரவாத நிதிக்கு ஏற்படுத்தப்பட்ட தொகை.

17. கட்டிடங்களின் மதிப்புக் குறைவிற்காகக் கழிவு.

18. யந்திரம் வேலைக்குரிய ஆயுதங்கள் விலைக்கு வாங்கப்பட்ட செலவு.

இவைபோன்றவைகளைக் கழிக்கக்கூடாது.

இவ்விதமாகவருமான வரிநிர்ணயிக்கப்படுகிறது.

## 12. வருமான வரி நிர்ணயிக்கும் வழியை விளக்குவது.

வருமானவரியை நிர்ணயிப்பது வருஷ முடிவில் கண்டுபிடிக்கப் படும் அயன்தொகையன்றி (Balance Sheet) முடியாது.

ஆனுல் அயன் தொகையானது பெயரேடு ஏற்படும் வித்தியாஸத்தால் ஒவ்வொரு வியாபாரத்திலும் ஒவ்வொருவிதமாய் இருக்கும்.

ஆகையால் வருமான வரி இவ்வளவுதான் என்று கண்டுபிடிப்பதற்கும், வருமானவரி ஏற்படக்கூடாதவைகளாயிருந்தால் இல்லையென்று கண்டுபிடிப்பதற்கும் ஸரியான லாபம் இன்னது என்று கண்டுபிடிப்பதற்

கும், எல்லாக்கடைகளுக்கும், வீடுகளுக்கும், கம்பேனிகளுக்கும், வர்த்தகக் கூட்டங்களுக்கும், சங்கங்களுக்கும், வர்க்குஷாப்புகளுக்கும், அடியிற்கண்ட பெயரேடுகள் அவசியம் வேண்டும்.

## 13. வருமான வரிச்சட்டத்தை அநுஸரித்துவைத்துக் கொள்ள வேண்டிய பெயரேடுகளை விளக்குவது.

வருமான வரியைக்கண்டுபிடிக்க எல்லாத் தொழில்களுக்கும் மேற்கண்டபடி அடியிற்கண்ட பெயரேடுகள் வேண்டும். இதற்கு ஆங்கிலத்தில் கிளாஸிப்பிகேஷன் ஆப்-அக்கவுண்ட்ஸ். (Classification of Accounts) என்று சொல்வதுண்டு.

1. ஸ்வாமிகள் பற்று வரவு கணக்கு--ஒவ்வொரு தொழிலிலும் வியாபாரத்திலும் புதுக்கணக்கு எழுத ஆரம்பிக்கும் காலத்தில் அவரவர்கள் ஆராதிக்கக்கூடிய தெய்வத்தை பிரார்த்தனை செய்துகொண்டு செலவேட்டின்வசம் செலவெழுதி அத்தொகையை இதில் வரவுவைக்க வேண்டியது. வேண்டியகாலங்களிலெல்லாம் அப்பிரார்த்தனைகளை முடிக்க இதில் பற்று எழுதிக்கொள்ளவேண்டியது.

2. பங்கு முதல் வரவு கணக்கு--இதில் தொழில் அல்லதுவர்த்தகத்திற்காக மூலதனமாக வைக்கப்படும் தொகையை வரவுவைக்கவேண்டும். இத்தொகைக்கு வட்டிபோடுவதில்லை.

3. ஆதாய வரவு கணக்கு—இதில் புதுக்கணக்கு எழுதும் காலத்தில் வரவு வைக்கப்படும் தொகை

களைத்தவிர ஒவ்வொரு வருஷமும் லாபக்கணக்கு ஏட்டில் கடைச்செலவு நீக்கி பாக்கியாயுள்ள தொகையையும், நிலஸம்பந்தமாயுள்ள வரவுகளையும் இதில் கொண்டுவரவேண்டும்.

4. தர்மப் பற்று வரவு கணக்கு—இதில் தர்மத்தின் பொருட்டு செலவாகும் தொகைகளை இதில் பதியவேண்டும். கிடைக்கும் லாபங்களில் I பாகத்தை இதற்கு வரவுவைப்பது என்னும்வழக்கம் இருந்தாலும், அல்லது வருஷத்திற்கு இவ்வளவு ரூபாய் இதற்கு வரவுவைப்பது என்று இருந்தாலும் அத்தொகைகளை இதில் வரவுவைக்கவேண்டும். அப்படி வரவு வைத்தபிறகு மற்ற ஆஸாமிகளின் பற்று வரவு ஏடுகளைப்போலவே இதுவும் ஒரு ஏடு ஆகிவிடுகிறது.

5. வீட்டுப் பற்று வரவு கணக்கு—இந்த ஏட்டில் கடை அல்லது கம்பேனி முதலாளிகள், தங்கள் பிரயோஜனத்திற்காவும், தங்கள் குடும்ப மெம்பர்களின் பிரயோஜனத்திற்காகவும் பற்றுவழி செய்துகொள்ளும் தொகைகளை இதில் பதியவேண்டும். மற்ற ஆஸாமிகளினுடைய பெயரேடுகளைப்போல் இதுவும் ஒரு ஏடு தான்.

6. இதர ஆஸாமிகள் பற்று வரவு கணக்கு—இதில் பற்று வரவு செய்யும் ஒவ்வொரு ஆஸாமியினுடையபெயரேடும்சேர்ந்தது. ஆகையால் ஒவ்வொரு ஆஸாமிக்கும் தனித்தனி பெயரேடு போட்டுப் பற்று வரவு செய்து கணக்கு முடிக்கவேண்டும்.

7. தளவாட ஸாமான் கோள்முதல் கணக்கு—இதில் பணம் ஸம்பாத்திய விஷயமாய் செய்யவேண்டிய

வேலைகளுக்கு ஸாதனமான ஸாமான்களின் விலையை இதில் எழுதவேண்டும்.

மேலேகண்ட 7 பற்றுவரவு ஏடுகளும் வருமான வரிக்கு ஸம்பந்தமில்லை.

8. வட்டிப் பற்று வரவு கணக்கு—இதில் தொழில் ஸம்பந்தமாய் வாங்கும் கடன் தொகைகளுக்கு கொடுக்கப்படும் வட்டியையும், பற்றுவரவுகாரர்களிடமிருந்து வாங்கப்படும் வட்டியையும் பதியவேண்டும்.

9. வட்டம் கமிஷன் பற்று வரவு கணக்கு—இதில் வட்டம் கமிஷன் முதலியவைகள் வாங்கினாலும், அல்லது கொடுத்தாலும், இதில் பதியவேண்டும்.

10. வாடகைப் பற்று வரவு கணக்கு—இதில் வாடகை முதலியவைகள் வாங்கினாலும் அல்லது வாடகை முதலியவைகள் கொடுத்தாலும் இதில் பதியவேண்டும்.

11. லாப வரவு கணக்கு—இதில் மேற் கண்ட ஏடுகளில் ஸம்பந்தப் படாத லாபங்களை எழுதிக்கொண்டு வந்து, வருஷ முடிவில், வட்டி வரவு, வாடகை வரவு, வட்டம் கமிஷன் வரவு, ஒவ்வொரு வியாபாரங்களிலும் வரும் தனித் தனி ஏடுகளில் செலவு நீக்கிய லாப வரவு முதலிய வரவு ஏடுகளைக் குறிப்பில்லாமல் கணக்கு எழுதி தாக்கல் செய்யவேண்டும்.

12. கடைச் செலவு கணக்கு—இதில் மேற் கண்ட செலவுகளில் ஸம்பந்தப் படாத செலவுகள் நேர்ந்தால் அவைகளை எழுதிக்கொண்டுவந்து, வருஷ முடிவில், வட்டிச் செலவு, வாடகைச் செலவு, வட்டம்

கமிஷன் செலவு, செய்யப்படும் வியாபாரங்களின் பேயரேடுகளில் அதிகப்பற்று ஏற்பட்டால் அந்த நஷ்டங்கள் இவை முதலானசெலவுகளை குறிப்பில்லாமல் தாக்கல் செய்யவேண்டும்.

13. அட்வர்ட்டயஸ்மேண்டுச் செலவு கணக்கு—இதில் தங்களுடைய வியாபாரம் பிரஸித்தமாகும் படிக்கு நேரிடும் செலவுகளைக் கொண்டுவரவேண்டும். வருஷ முடிவில் இவ்வேட்டுத்தொகையை கடைச் செலவு ஏட்டிற்குக் கொண்டுபோகவேண்டும். இவ்விதமாக மேற் கண்டபடிக்கு வீடு, கடைகம்பேனி முதலிய ஒவ்வொன்றுக்கும் 13 பெயரேடுகள் அவசியம் வேண்டும்.

மற்றப் பெயரேடுகள் அந்தந்தத் தொழிலுக்குத் தக்கபடி ஏற்படுத்திக் கொள்ளவேண்டும்.

அப்படி ஏற்படுத்திக்கொள்ள வேண்டிய ஏற்பாடுகளை உதாரணமாக சிலதொழில்களுக்கு அடியில் விவரித்துக்காட்டுவோம்.

## 14. வீட்டுக்கணக்குகளுக்கு வேண்டிய பெயரேடுகளையும் அவைகளினின்று வரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் வருமான விளக்குவது.

வீடுகளிலேயே இருந்துகொண்டு பலவிதமான தொழில்களும் செய்து ஸம்பாதிப்பவர்களுக்கு மேலே சொல்லப்பட்டிருக்கும் 13வகை பெயரேடுகள் ஏற்படுத்திக்கொள்ள வேண்டியதைத்தவிர அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. குடும்ப ஸாப்பாட்டுச் செலவு கணக்கு—இவ் வேட்டில் குடும்ப ஸம்பந்தமாய் ஏற்படும் ஸாப்பாட்டுச் செலவுகளைப் பதியவேண்டும். வருஷமுடிவில் இக்க ணக்கைத் தொகைகட்டி ஷை தொகையைக் குறிப்பில் லாமல் வீட்டுப் பற்று வரவு எட்டில் தாக்கல்செய்ய வேண்டும்.

2. குடும்பஸாதல்வார் செலவு கணக்கு—இதில் தமக்கும் குடும்ப மெம்பர்களுக்கும் ஏற்படக்கூடிய வஸ்திரம் முதலிய செலவுகளைப் பதியவேண்டும். இக்கணக்கு வருமான வரிக்கு ஸம்பந்தமில்லை வருஷ முடிவில் இக்கணக்கைத் தொகைகட்டி ஷை தொகையை குறிப்பில்லாமல் வீட்டுப்பற்றுவரவு எட் டில் தாக்கல் செய்யவேண்டும்.

3. நிலம் கோள்முதல் கணக்கு—இவ்வேட் டில் தமக்கு பாகமாகக்கிடைத்த நிலங்களை விலை போட்டு ஷை விலையைப் பங்கு முதல் கணக்கில் வரவு வைத்து இவ்வேட்டில் கொள்முதல் பற்று எழுத வேண்டும். பிறகு வாங்கப்படும் நிலங்களையும் இதில் கொள்முதல் எழுதவேண்டும். இதில்சிலபாகங்களை விற்கும்படி நேர்ந்தால் அவைகளை விற்று வரவு வைத்து தாக்கல் செய்யலாம். இவ்வேட்டின் தொகை முதலாக பாவிக்கப்படக்கூடியது. இதுவேறுஎட்டிற்கு கொண்டுபோகக் கூடியதல்ல. இதுவருமான வரிக் கும் ஸம்பந்தமில்லை.

4. வீடு கோள்முதல் கணக்கு—இந்த எட்டில் பாகமாய்க் கிடைத்த வீடுகளைக் கொள்முதல் எழுதி பங்குக் கணக்கில் வரவுவைத்து, பின்னுல்வாங்கும்

வீடுகளையும் இதில் கொண்டுவரவேண்டும். இத்தொகையும் முதலாக பாவிக்கப்படக்கூடியது. இது வேறு ஏட்டிற்குக் கொண்டுபோகக் கூடியதல்ல. இதுவும் வருமானவரிக்கு ஸம்பந்தமில்லை.

5. கடை கோள்முதல் கணக்கு—இவ்வேடும் நிலம் கொள்முதல் வீடு கொள்முதல் மாதிரிதான்.

6. தோட்டம் கோள்முதல் கணக்கு—இவ்வேடும் நிலம் கொள்முதல் வீடு சொள்முதல் மாதிரிதான்.

7. நகை கோள்முதல் கணக்கு—இவ்வேட்டில் தமக்கு பாகமாய்க்கிடைத்த நகைகளை மதிப்பிட்டு தாக்கல்செய்து ஷெ தொகையைப் பங்குமுதல்கணக்கில் வரவுவைக்க வேண்டியது. இதுவும் வேறுஏட்டிற்குக் கொண்டுபோகக்கூடியதல்ல. இதுவும் வருமானவரிக்கு ஸம்பந்தமில்லை.

8. ஸாமான் கோள்முதல் கணக்கு— இதில் வீட்டின் உபயோகத்திற்காக பாகமாய்க் கிடைத்த ஸாமான்களை விலைமதிப்பிட்டு ஷெ தொகையைக் கொள்முதல் பற்றுஎழுதிப் பங்கு முதல்கணக்கில் வரவுவைக்கவேண்டும். பின்னிடுவாங்கும் ஸாமான்களையும் இதில் கொண்டுவரவேண்டும். இந்தஏடும் வேறு ஏட்டிற்குக் கொண்டுபோககூடியதல்ல. இதுவும்வருமானவரிக்கு ஸம்பந்தமில்லை.

9. புஸ்தகம் கோள்முதல் கணக்கு—இதுவும் ஸாமான்கொள்முதல் ஏடுமாதிரிதான்.

10. இதரகடைகளுக்கு முதலனுப்புக்கணக்கு- இதில் வேறு இடங்களில் ஸொந்தக்கடைகள் வைத்

தால் அக்கடைகளுக்கு அனுப்பப்படும் முதலை இதில் பதியவேண்டும். இத்தொகைக்கு வட்டியில்லை. இக்கடைகளில் வரும் லாபங்களை ஒவ்வொரு வருஷமும் மார்ச்மீ 31வ வரை கணக்குமுடித்து லாபக்கணக்கு ஏட்டில்விபரம்கண்டு வரவுவைக்கவேண்டும். ஷைலாபங்கள் ஆங்கிலேய கவர்ன்மெண்டாரால் ஒருமுறை வரிவிதிக்கப்பட்டிருந்தால் அப்படிப்பட்ட லாபங்களை வருமானவரிக்கு ஸம்பந்தமில்லாத ஆதாயவரவு ஏட்டிலேயே தாக்கல்செய்யவேண்டும். அப்படிப்பட்ட விஷயத்தில் வருமானவரி ரெசீதுகள் காட்டப்பட வேண்டும்.

11. சம்பளம், வருஷவர்த்தனை, இனும் வரவு கணக்கு—இதில் தமக்குவரக்கூடிய சம்பளம் பென்ஷன் முதலியவைகளை வரவு வைத்துக்கொண்டுவந்து வருஷமுடிவில் தொகைகட்டி அத்தொகையை லாப வரவு ஏட்டிற்குக் குறிப்பில்லாமல் கொண்டுபோக வேண்டும். ஆனால் பென்ஷன்வரும்படிக்கும் கவர்ன்மெண்டுச்சம்பளம் முதலியவரும்படிக்கும் ஒருமுறை வரிவிதிக்கப்பட்டிருந்தால், அத்தொகைகளை ஆதாய வரவுஏட்டில் தாக்கல்செய்யவேண்டும். ஆனால் இவ் விஷயத்திலும் வருமானவரி ரெசீது காட்டப்பட வேண்டும்.

12. நில வரும்படிப் பற்று வரவு கணக்கு— இதில் நில ஸம்பந்தமான வரும்படிகளை விலைபோட்டு வரவுவைத்து, அந்த ஸாமான்கள் விற்கக் கூடியவைகளானல், அவைகளை அந்தந்த ஸாமான் கொள்முதல் பற்றுஎழுதி வரவேண்டும். அப்பால் அந்த ஸாமான்

கள் விற்கிறகாலத்தில் விற்று வரவு வைக்கவேண்டும். இந்த ஏட்டின் வரும்படி, வருமான வரிக்குள்ளானதல்ல. வருஷமுடிவில் தொகைகட்டும் காலத்தில் இதில் கிஸ்திமராமத்து முதலியவைகளுக்குத் தொகை பற்றுயிருந்தால் அத்தொகையை வரும்படியில் கழித்து பாக்கியை வருமானவரிக்கு ஸம்பந்தமில்லாத ஆதாயவரவு ஏட்டிற்குக் கொண்டுபோக வேண்டும்

மேற்கண்டபடி கணக்குகள் தாக்கல்செய்யப்பட்டு வந்தால் ஸரியான லாபம் இன்னது என்றும் அதற்கு வருமானவரி இன்னது என்றும் சுலபமாய்க் கண்டு பிடிக்கலாம்.

மேலேகண்டபடி தாக்கல் செய்யப்பட்ட பிறகு, கடைச்செலவு என்னும் ஏட்டின் தொகையை லாப வரவு ஏட்டில்பற்றுஎழுதிக் கழித்தால் அதில் வருவது தான் லாபம். அதற்குத்தான் வருமானவரி ஏற்படும். லாபவரவைக் கடைச்செலவில் கழித்தால்நஷ்டம்தான்.

## 15. பாத்திரக் கடைகளுக்கு வேண்டிய பெயரேடுகளையும் ஷை கடையின் வருமான வரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் விளக்குவது.

இக்கடைக்கு மேலேகண்ட 13 பெயரேடுகள் நீங்கலாக அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. பித்தளைத்தகடு கொள்முதல் விற்று வரவு கணக்கு—இவ்வேட்டில் வாங்கும் தகடுகளைக் கொள் முதல் எழுதியும் விற்கக்கூடியவைகளை விற்று வரவு வைத்தும் வருஷமுடிவில் மிச்சமிருக்கும் தகடுகளை

அது ஸமயம் வாங்கக்கூடிய விலைப்படி விற்று வரவு வைத்து பின்கணக்காய் கொள்முதல் எழுதவேண்டும்.

கடைசியாகத் தொகைகட்டி அதிக வரவானால் அதை லாபக்கணக்கு ஏட்டிற்கும் அதிகப்பற்றானால் அதைக்கடைச்செலவு ஏட்டிற்கும் விபரங்கண்டு கொண்டுபோகவேண்டும். இதைக் குறிப்பில்லாமல் தாக்கல்செய்யலாம். அதிக வரவு லாபம் என்றும் அதிகப்பற்று நஷ்டம் என்றும் ஏற்படும்.

2. தாம்பரத்தகடு கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

3. ஈயம் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

4. பித்தளைப்பாத்திரம் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

5. தாம்பரப்பாத்திரம் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

6. ஈயப்பாத்திரம் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

7. வெங்கலப்பாத்திரம் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

8. துராப்பானை கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

9. சில்லரைப்பாத்திரம் கொள்முதல் விற்று வரவு கணக்கு—

10. திருநெல்வேலிப்பானை கொள்முதல் விற்று வரவு கணக்கு—

11. சில்லரைஸாமான் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

12. பழையஸாமான் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

ஷை ஏடுகளையும் பித்தளைத்தகடு கொள்முதல் ஏட்டைப்போலவே வருஷ முடிவில் பாக்கியிருப்பவைகளை அக்காலத்தில் வாங்கக்கூடிய விலைப்படி விலைபோட்டு விற்று வரவுவைத்து புதுக்கணக்காய் கொள்முதல் எழுதிக்கொள்ளவேண்டும்.

அப்பால் பழையகணக்கு ஏடுகளைத் தொகைகட்டிக் கழித்து அதிகவரவு தொகைகள் லாபமாகையால் அவைகளை லாபக்கணக்கு ஏட்டிற்கும், அதிகப்பற்று வரக்கூடியவைகள் நஷ்டமாகையால் அவைகளை கடைச்செலவு ஏட்டிற்கும் குறிப்பில்லாமல் கொண்டு போகவேண்டும்.

இக்கடைக் கணக்குகளுக்கு இப்படியெல்லாம் பெயரேடுகள் ஏற்படுத்த வேண்டும். அப்பொழுது தான் அந்தந்த வகையில் ஸரியான இருப்பையும் ஸரியானலாபத்தையும் கண்டுபிடிக்கலாம்.

இக்கடையில் கடைச்செலவு ஏட்டுத்தொகையை லாபக்கணக்கு ஏட்டில் தாக்கல்செய்து கழித்தால் பாக்கிவருவதுதான் லாபம். இத்தொகைக்குத் தான் வருமானவரி விதிக்கப்படும்.

## 16. ஜவுளிக்கடையில் வைக்கவேண்டிய பெயரேடுகளையும் அக்கடையில் வருமானவரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் விளக்குவது.

இக்கடைக்கு முன்னமேயே சொல்லப்பட்டிருக்கும் 13வகைப் பெயரேடுகள் நீங்கலாக அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. பஞுரீஸ்பட்டு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

2. கும்பகோணம் பட்டு கோள்முதல் விற்று வரவு கணக்கு—

3. பட்டுப்புடவை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

4. நாட்டுவேஷ்டி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

5. சாயவேஷ்டி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

6. சீர்மைவேஷ்டி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

7. சீர்மைச்சீட்டி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

8. சீர்மைப்புடவை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

9. பிளானல் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

10. வேீட் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

11. நாட்டுப் பழுக்காய்ச்சேலை கோள்முதல் விற்று வரவு கணக்கு—

12. லாங்கிளாத்துக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

13. ரேடிமேட் உருப்படி கோள்முதல் விற்று வரவு கணக்கு—

14. சில்லரை ஜவுளி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

15. சில்லரை ஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

16. மல்பீஸ் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

17. கச்சை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

18. பம்பாய் வேஷ்டி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

ஆக, குறைந்தது மேற்கண்டபடி 18 வகைப் பெயரேடுகளாவது இருக்கவேண்டும்.

ஷை ஏடுகளில் கொள்முதலாகும் சரக்குகளை அந்தந்தப் பெயரேட்டில் கொள்முதல் எழுதி, அந்தந் தப் பெயரேட்டில் விற்றுவரவுகளைப் பதியவேண்டும்.

வருஷமுடிவில் அந்தந்த தினுஸில் இருக்கும் ஜெவுளிகளை அவ்வப்பொழுது வாங்கக்கூடிய விலைப்படி விற்று வரவுவைத்து பின் கணக்கில் கொள்முதல் எழுதவேண்டும்.

பிறகு முன் கணக்குப் பெயரேடுகளைத் தனித்தனி பற்று வரவு தொகைகட்டவேண்டும்.

அப்பால் வரவில் இருந்து பற்றைக்கழித்தால் லாபம் என்றும், பற்றிலிருந்து வரவைக்கழித்தால் நஷ்டம் என்றும் ஏற்படுகிறது.

பிறகு வரவுதொகைகளை லாபக்கணக்கு ஏட்டிற்கும் பற்று தொகைகளை கடைச்செலவு ஏட்டிற்கும் கொண்டுபோகவேண்டும். இதை குறிப்பில்லாமல் தாக்கல் செய்யலாம்.

லாபக்கணக்கு ஏட்டில் கடைச்செலவு கணக்கைக் குறிப்பில்லாமல் தாக்கல் செய்து கழிக்கப்பட்டு வருவதுதான் லாபம். இத்தொகைக்குத் தான் வருமான வரி விதிக்கப்படும்.

## 17. மளிகைக் கடைகளில் ஏற்படவேண்டிய பெயரேடுகளையும் அக்கடையில் வருமான வரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் விளக்குவது.

இக்கடைக்கும் முன் சொல்லியிருக்கும் 13 பெயரேடுகள் நீங்கலாக அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. பச்சரிசி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

2. புழுங்கலரிசி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

3. மாவு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

4. துவரம்பருப்பு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

5. கடலைப்பருப்பு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

6. உளுத்தம்பருப்புக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

7. மோச்சைப் பருப்புக் கோள்முதல் விற்று வரவு கணக்கு—

8. பாசிப்பருப்புக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

9. உளுந்து கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

10. பச்சைக்கடலை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

11. பாசிப்பயறு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

12. மொச்சை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

13. தட்டைப்பயறு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

14. கோதுமை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

15. ரவை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

16. கற்கண்டு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

17. சீனி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

18. வெல்லம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

19. பருத்திக்கொட்டை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

20. லவங்கஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

21. மருந்து ஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

22. மஸாலை ஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

23. கடுகு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

24. மிளகு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

25. சீரகம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

26. வெந்தயம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

27. மல்லி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

28. பாக்குக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

29. நெய் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

30. எண்ணெய் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

31. புண்ணுக்கு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

32. சீயக்காய் கோள்முதல் விற்று வரவு கணக்கு-

33. காப்பிக்கொட்டை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

34. மிளகாய் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

35. புளி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

36. உப்புக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

37. சில்லரைச் சரக்குக் கோள்முதல் விற்று வரவு கணக்கு—

முன் பாராவில் கண்ட 13 வகை பெயரேட்டைத்தவிர மேலேகண்ட 37 பெயரேடுகளும் வேண்டும். பெரிய மளிகைகளில் ஜாஸ்தியான சரக்குகள் வாங்கவேண்டியும் விற்கவேண்டியும் இருப்பதால் ஜாஸ்திக்கொள்முதல் விற்றுவரவு நடக்கும் சரக்குகளுக்குத் தனித்தனிப் பெயரேட்டில் வரவு செலவு செய்துகொண்டு வந்தாற்றான் ஸரியான லாபங்களைக் கண்டுபிடிப்பதுடன் சரக்குகளில் நேர்ந்த குறைவுகளும் தெரியும்.

இக்கணக்கிலும் தனித்தனி கொள்முதலும் விற்றுவரவும் செய்துவந்து வருஷமுடிவில் பாக்கிச் சரக்குகளை விற்றுவரவு வைத்து, புதுக்கணக்கில் கொள்முதல் எழுதிக்கொள்ளவேண்டும்.

அப்பால் பழைய கணக்குகளைத் தொகைகட்டி பற்று வரவு கழித்து லாபத்தை லாபவரவு ஏட்டிற்கும் நஷ்டத்தை கடைச்செலவு ஏட்டிற்கும் விபரமாய் குறிப்பில்லாமல் தாக்கல் செய்யவேண்டும்.

பிறகு இதிலும் லாபவரவு ஏட்டில் கடைச் செலவு ஏட்டைக் குறிப்பில்லாமல் பதிவு செய்து கழித்துவரும் தொகைதான் லாபம் என்று ஏற்படும். இத்தொகைக்குத்தான் வருமான வரி ஏற்படும்.

## 18. பல சில்லறை கடைகளில் ஏற்பட வேண்டிய இதரப் பெயரேடுகளையும் அக் கடையில் வருமான வரியைக் கண்டு பிடிக்கும் வழியையும் விளக்குவது.

இக்கடைகளில் மேலே சொன்ன 13 வகைப் பெயரேட்டைத்தவிர அடியிற்கண்ட பெயரேடுகளும் வெண்டும்.

1. அரிசி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

2. பலசரக்குக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

3. எண்ணெய் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

4. நெய் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

5. ஷாப்பு ஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

6. சில்லரை ஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

இவ்விதமுள்ள சில்லரைக்கடைகளில் ஒவ்வொரு ஸாமானிலும் கொள்முதல் விற்றுவரவு கொஞ்சமாயிருக்கக்கூடியதால் ஒவ்வொரு சரக்கிற்கும் தனித்தனிப் பெயரேடு வேண்டியதில்லை. தவிரவும் இப்படிப்பட்ட கடைகளில் முதலாளியே நேரில் வியாபாரம் செய்யக்கூடியதாயிருக்கும்.

இக்கணக்குகளையும் வருஷமுடிவில் தொகை கட்டி கையிருப்பு சரக்குகளை அப்பொழுது வாங்கக்கூடிய விலைப்படி விற்றுவரவு வைத்து புதுக்கணக்கில் கொள்முதல் எழுதவேண்டும்.

அப்பால் பழைய பெயரேட்டைத் தொகைகட்டிக் கழித்து அதிக வரவு வரக்கூடியவைகளை லாபவரவு ஏட்டிற்கும் அதிகப் பற்று வரக்கூடியவைகளைக் கடைச்செலவு ஏட்டிற்கும் கொண்டுபோகவேண்டும். இதைக் குறிப்பில்லாமல் தாக்கல் செய்யலாம். பிறகு கடைச்செலவு ஏட்டைத் தொகைகட்டி அத் தொகையை லாபவரவு, ஏட்டில் குறிப்பில்லாமல் பதிந்து, பற்றை வரவிலிருந்து கழித்துவரும் தொகை தான் லாபம். இந்த லாபத்தொகை ரூ 1000 மாவது அதற்கு மேலாவது வாராதவரையில் வருமான வரி விதிப்பதில்லை.

## 19. காசுக்கடைகளில் வைக்கவேண்டிய பெயரேடுகளையும் அக்கடையில் வருமான வரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் விளக்குவது.

இக்கடைகளுக்கு முன்பாராவில் சொல்லியிருக்கும் 13 வகைப் பெயரேடுகளைத் தவிர அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. தங்கம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

2. வெள்ளி கோள்முதல் விற்றுவரவு கணக்கு-

3. சிகப்புக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு-

4. இதர ரேத்தினம் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

5. புது நகை கோள்முதல் விற்றுவரவு கணக்கு-

6. பழைய நகை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

7. வெள்ளி ஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

இக்கடைகளில் இவ்விதம் பெயரேடுகள் ஏற்படுத்திக்கொள்ளவேண்டும்.

வருஷமுடிவில் மிச்ச சரக்குகளை அக்காலத்தில் வாங்கக்கூடிய விலைப்படி விற்றுவரவு வைத்துப் புதுக் கணக்கில் கொள்முதல் எழுதிக்கொள்ளவேண்டும்.

அப்பால்பழைய பெயரேடுகளைத் தொகைகட்டிப் பற்றுவரவு கழித்து அதிகவரவை லாபவரவு ஏட்டிற்

கும் அதிகப்பற்றை கடைச்செலவு எட்டிற்குக் கொண்டுபோகவேண்டும். இக்கணக்குகளை குறிப்பில்லாமல் தாக்கல் செய்யலாம்.

பிறகு கடைச்செலவு எட்டை லாபவரவு எட்டில் குறிப்பில்லாமல் பதிந்து பற்றுவரவு கழித்து அதிக வரவு தொகைதான் லாபம் என்று ஏற்படும். இத்தொகைக்குத்தான் வருமானவரி விதிக்கப்படும்.

## 20. மரக்கடைகளில் வைக்கவேண்டிய பெயரேடுகளையும் அவைகளுக்கு வருமான வரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் விளக்குவது.

இக்கடைகளில் முன் பாராவில் சொல்லியிருக்கும் 13 வகைப் பெயரேடுகள் நீங்கலாக அடியிற் கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. தேக்குமரம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

2. தேக்கு சில்லறை ஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

3. தேக்குச் சிலாகை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

4. மேற்குத்திமரம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

5. மேற்குத்தி சில்லறை உருப்படி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

6. பலமரம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு-

7. பலமரச் சிலாகை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

8. சீர்மை யோடு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

9. சீர்மை தளவரிசைக்கல் கோள்முதல் விற்று வரவு கணக்கு—

10. மூங்கில்பாய் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

11. மூங்கில் கோள்முதல் விற்றுவரவு கணக்கு-

12. மரஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு

13. கயிறு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

14. கடப்பைக் கல் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

ஆக இக்கடைக்கு வியாபாரத்திற்கு தக்கபடி மேற்கண்ட பெயரேடுகள் வேண்டும்.

வருஷமுடிவில் மேற்கண்ட பெயரேடுகளில் மிச்சப்படும் சரக்குகளை அப்போது வாங்கும் விலைப்படி விலைபோட்டு விற்று வரவுவைத்து தாக்கல்செய்து பின்கணக்கில் கொள்முதல் எழுதவேண்டும்.

பழைய பெயரேடுகளைத் தொகை கட்டிப் பற்று வரவு கழித்து அதிக வரவை லாபவரவு ஏட்டிற்கும் அதிகப் பற்றை கடைச்செலவு ஏட்டிற்கும் குறிப்பில்லாமல் தாக்கல் செய்யவேண்டும்.

அப்பால் கடைச்செலவு ஏட்டை லாபவரவு ஏட்டில் குறிப்பில்லாமல் தாக்கல் செய்து பற்றுவரவு

கழித்துவரும் அதிக வரவுதான் லாடம் என்று ஏற்படும். இதற்குத்தான் வருமான வரி விதிக்கப்படும்.

## 21. ஷாப்புக்கடைகளில் வைக்கவேண்டிய பெயரேடுகளையும், அக்கடைகளில் வருமான வரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் விளக்குவது.

இக்கடைக்கு முன் பாராவில் சொன்னபடி 13 பெயரேடுகளும் அவசியம்வேண்டும். இவைகளைத்தவிர அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. பேப்பர் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

2. கண்ணாடி ஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

3. ஸோப்புக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

4. தீப்பெட்டி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

5. பிஸ்கட்டுக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

6. பேப்பர்மெட்ஸ் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

7. அக்கவுண்டு புக்கு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

8. பால்ப் பெட்டி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

9. பாக்கிங்கு ஸாமான் கொள்முதல் விற்பவரவு கணக்கு—

10. வர்ணஸாமான் கொள்முதல் விற்பவரவு கணக்கு—

11. வாரனீஸ் ஸாமான் கொள்முதல் விற்பவரவு கணக்கு—

12. பன்னீர்ப் பெட்டி கொள்முதல் விற்பவரவு கணக்கு—

13. ஸெண்டு கொள்முதல் விற்பவரவு கணக்கு-

14. இரும்பு ஸாமான் கொள்முதல் விற்பவரவு கணக்கு--

15. பீங்கான் ஸாமான் கொள்முதல் விற்பவரவு கணக்கு—

16. இனுமல் ஸாமான் கொள்முதல் விற்பவரவு கணக்கு—

17. காலிக்கோ கொள்முதல் விற்பவரவு கணக்கு—

18. ஸ்டேஷனரி ஸாமான் கொள்முதல் விற்ப வரவு கணக்கு—

19. நூல் கொள்முதல் விற்பவரவு கணக்கு—

20. பனியன் கொள்முதல் விற்பவரவு கணக்கு-

21. அல்மீனியம் ஸாமான் கொள்முதல் விற்ப வரவு கணக்கு—

22. ட்ரங்க் பெட்டி கொள்முதல் விற்பவரவு கணக்கு—

23. மேலின்ஸ்புட் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

24. லேதர் ஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

25. பலசில்லரை ஸாமான் கோள்முதல் விற்று வரவு கணக்கு—

இக்கடைகளில் கிளாஸிபிகேஷன் செய்வதானுல் ரொம்ப விரியும். ஸமயோஜிதப்படி இன்னம் முக்கிய மாய் வேண்டிய பெயரேடுகளைச் சேர்த்தும் அவசிய மில்லாத பெயரேடுகளைத் தள்ளியும் கூடக்கணக்கு வைத்துக் கொள்ளலாம்.

இவ்வேடுகளையும் வருஷமுடிவில் தொகைகட்டி கையிருப்புச் சரக்குகளைப் பின் கணக்குவசம் காலக் கிரயப்படி விற்று வரவுவைத்துப் புதுக்கணக்கில் கொள்முதல் எழுதவேண்டும்.

அப்பால் பழைய ஏடுகளில் பற்றுவரவு தொகை கட்டிக் கழித்து அதிக வரவை லாபவரவு ஏட்டிற்கும், அதிகப்பற்றைக் கடைச்செலவு ஏட்டிற்கும் குறிப்பில் லாமல் கொண்டுபோகவேண்டும்.

பிறகு கடைச்செலவு ஏட்டைத் தொகைகட்டி ஷெ தொகையையும் குறிப்பில்லாமல் லாபவரவு ஏட்டில் தாக்கல் செய்யலாம்.

இவ்வேட்டில் வரும் அதிகவரவு தொகைதான் லாபம் என்று சொல்லப்படும். இத்தொகைக்குத் தான் வருமான வரி விதிக்கிருர்கள்.

## 22. எண்ணெய்க் கடைகளில் வைக்க வேண்டிய பெயரேடுகளையும் அக்கடைகளில் வருமான வரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் விளக்குவது.

இக்கடைகளுக்கும் முன் பாராவிற் சொன்ன 13 பெயரேடுகளும் வேண்டும். அவைகளைத் தவிர, அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. நல்லெண்ணெய் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

2. தேங்கா யெண்ணெய் கொள்முதல் விற்று வரவு கணக்கு—

3. விளக்கெண்ணெய் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

4. கடலை யெண்ணெய் கொள்முதல் விற்று வரவு கணக்கு—

5. இலுப்பெண்ணெய் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

6. இதர எண்ணெய் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

7. கி. எண்ணெய் கொள்முதல் விற்றுவரவ கணக்கு—

8. நெய் கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

9. பிண்ணாக்கு கொள்முதல் விற்றுவரவு கணக்கு—

10. இலுப்பறப்புக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

11. எள்ளுக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு-

12. தேங்காய் கோள்முதல் விற்றுவரவு கணக்கு-

13. இலுப்பக்கோட்டை கோள்முதல் விற்று வரவு கணக்கு—

14. கடலைக்கோட்டை கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

15. இதர சரக்குக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

இக்கடைகளில் மேலேகண்ட பெயரேடுகளும், அவசியம் வேண்டும்.

வருஷமுடிவில் ஷ ஏடுகளைத் தொகைகட்டி மீதச் சரக்குகளை அப்போதுள்ள விலைப்படி விற்று வரவுவைத்து பின் கணக்கில் கொள்முதல் எழுத வேண்டும்.

அப்பால் முன் கணக்கைத் தொகைகட்டிப் பற்றுவரவு கழித்து அதிக வரவை லாபக்கணக்கு ஏட்டிற்கும் அதிகப்பற்றை கடைச்செலவு ஏட்டிற்கும் குறிப்பில்லாமல் கொண்டுபோகவேண்டும்.

பிறகு கடைச்செலவு ஏட்டைத் தொகைகட்டி ஷ ஏட்டையும் குறிப்பில்லாமல் லாபவரவு ஏட்டில் தாக்கல் செய்யவேண்டும்.

இவ்வேட்டில் வரும் அதிக வரவுதொகைதான் லாபம் எனப்படுகிறது. இத்தொகைக்குத்தான் வருமான வரி விதிக்கப்படும்.

## 23. புஸ்தகக் கடைகளில் வைக்கவேண்டிய பெயரேடுகளையும் அவைகளில் வருமான வரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் விளக்குவது.

இக்கடைகளுக்கும் முன்பாராவில் சொன்ன 13 பெயரேடுகளும் வேண்டும்.

இவைகளைவிட அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. சட்டப் புஸ்தகம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

2. சாஸ்திரப் புஸ்தகம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

3. பஞ்சாங்கம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

4. டயிரி க்யாலேண்டர் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

5. தமிழ் நாவல்வகைப்புஸ்தகம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

6. இங்கிலீஷ் நாவல்வகைப் புஸ்தகம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

7. இதரபாஷைவகைப்புஸ்தகம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

8. பல சில்லரைப் புஸ்தகம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

9. காலேஜ் புஸ்தகம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

10. ஐஸ்கூல் புஸ்தகம் கோள்முதல் விற்று வரவு கணக்கு—

11. மிடில் ஸ்கூல் புஸ்தகம் கோள்முதல் விற்று வரவு கணக்கு—

12. ப்ரைமேரி ஸ்கூல் புஸ்தகம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

13. நாடகப் புஸ்தகம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

14. எக்ஸர்ஸயிஸ் புக்குக் கோள்முதல் விற்று வரவு கணக்கு—

15. வர்த்தகப் புஸ்தகம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

16. அக்கவுண்ட் புக்குக் கோள்முதல் விற்று வரவு கணக்கு—

17. ஸ்டேஷனேரி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

18. வயித்தியப் புஸ்தகம் கோள்முதல் விற்று வரவு கணக்கு—

19. ஜோஸியப் புஸ்தகம் கோள்முதல் விற்று வரவு கணக்கு—

மேலேகண்ட ஏடுகளும் வேண்டும். வருஷமுடிவில் பெயரேடுகளைத் தொகை கட்டி மீதச்சரக்குகளை கொள்முதல்படி விற்று வரவுவைத்துப் பின்கணக்கில் கொள்முதல் எழுதவேண்டும்.

அப்பால் பெயரேடுகளைத் தொகைகட்டிப் பற்று வரவு கழித்து அதிகவரவை லாபக்கணக்கு ஏட்டிற்

கும் அதிகப்பற்றை கடைச்செலவு ஏட்டிற்கும் குறிப்பில்லாமல் கொண்டுபோகவேண்டும்.

பிறகு கடைச்செலவு ஏட்டைத் தொகைகட்டி ஷை ஏட்டையும் குறிப்பில்லாமல் லாபவரவு ஏட்டில் தாக்கல் பண்ணவேண்டும்.

இவ்வேட்டில் வரும் அதிகவரவு தொகைதான் லாபம் எனப்படுகிறது. இத்தொகைக்குத்தான் வருமானவரி விதிக்கப்படுகிறது.

இந்தப் பிரகாரம் ஒவ்வொருகடைக்கும் அததற்குத் தக்கபடி பெயரேடுகள் கிளாஸிபை செய்து சொள்ளவேண்டும்.

வேலைகள் நடக்கக்கூடிய இடங்களானல் ஒவ்வொரு வேலை செய்யக்கூடிய தொழிற்சாலைகளுக்கும் வேண்டிய பெயரேடுகளை விளக்குவோம்.

எல்லாக்கடைகளுக்கும் அவசியம் வேண்டும் என்று கூறப்பட்ட, ஸ்வாமிகள் பற்றுவரவு கணக்கு, பங்கு முதல் வரவு கணக்கு, ஆதாய வரவு கணக்கு, தர்மப் பற்றுவரவு கணக்கு, வீட்டுப் பற்றுவரவு கணக்கு, இதர ஆஸாமிகள் பற்றுவரவு கணக்கு, தளவாட ஸாமான் கொள்முதல் கணக்கு, வட்டிப் பற்றுவரவு கணக்கு, வட்டம் கமிஷன் பற்றுவரவு கணக்கு, வாடகைப் பற்றுவரவு கணக்கு, லாபவரவு கணக்கு, கடைச்செலவு கணக்கு, அட்வர்ட்டயிஸ் மெண்டுச் செலவு கணக்கு, முதலிய 13 பெயரேடுகள் தொழிற்சாலைகளுக்கும் வேண்டும்.

மேலே கண்டவைகளைவிட அடியிற்கண்ட பெயரேடுகளும் ஒவ்வொரு தொழிற்சாலைக்கும் வேண்டும்.

அவைகளைத் தனித்தனியாய்ப் பிரித்து சில தொழிற் சாலைகளுக்குக் காட்டுவோம்.

## 24. லைடாவாட்டர் கம்பேனிகளில் வைக்கவேண்டிய பெயரேடுகளையும் அவைகளில் வருமான வரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் விளக்குவது.

இத்தொழிற் சாலைகளில் முன்பாராவிற் கண்ட 13 பெயரேடுகள் நீங்கலாக அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. பாட்டில் கோள்முதல் விற்றுவரவு கணக்கு-

2. மிஷீன் கோள்முதல் கணக்கு—

3. எஸ்ஸென்ஸ் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

4. கலர் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

5. புருஷ் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

6. ரப்பர் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

7. ஒயிட்டிங் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

8. ஸல்ப்யூரிக் ஆஸிட் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

9. டார்டாரிக் ஆஸிட் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

10. ஸாக்ரீன் சீனி கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

11. லேபிள் கோள்முதல் விற்றுவரவு கணக்கு-

12. வண்டிமாடு வகையரு கோள்முதல் விற்று வரவு கணக்கு—

13. வண்டிப் பற்றுவரவு கணக்கு—

14. சரக்கு விற்றுவரவு கணக்கு—

15. எஸ்ஸென்ஸ் கலர் செலவு கணக்கு—

16. கியாஸ் செலவு கணக்கு—

17. பாட்டில் செலவு கணக்கு—

18. ஸாக்ரீன் சீனி செலவு கணக்கு—

19. ரப்பர், புருஷ், டிக்கெட்டுச் செலவு கணக்கு

20. டார்டாரிக் செலவு கணக்கு—

21. வண்டிச் செலவு கணக்கு—

22. இதர ஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

23. கியாஸ் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

24. அயிஸ் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

ஆக 24 பெயரேடுகள் வேண்டும்.

இப்பெயரேடுகளையும் வருஷமுடிவில் தொகை கட்டி கையிருப்பு சரக்குகளை அக்கால விலைப்படி வாங்கக்கூடிய விலைபோட்டு விற்று வரவு வைத்து பின் கணக்கில் கொள்முதல் எழுதவேண்டும். ஆனால் மிஷீன் கொள்முதல் ஏடுமாத்திரம் தொகைகட்டின படி இருக்கவேண்டியதுதான்.

மற்ற ஏடுகளைப் பற்றுவரவு கழித்து அதிக வரவை லாபக்கணக்கு ஏட்டிற்கும், அதிகப் பற்றைக் கடைச் செலவு ஏட்டிற்கும் குறிப்பில்லாமல் தாக்கல் செய்யவேண்டும்.

பிறகு கடைச்செலவு ஏட்டைத் தொகைகட்டி இத்தொகையைக் குறிப்பில்லாமல் லாபவரவு ஏட்டிற்குக் கொண்டுபோகவேண்டும்.

இவ்வேட்டில் வரும் அதிக வரவு தொகைதான் லாபம் எனப்படுகிறது. இத்தொகைக்குத்தான் வருமான வரி விதிக்கப்படும்.

## 25. ரயிஸ்மில்களில் வைக்கவேண்டிய பெயரேடுகளையும் அவைகளுக்கு ஏற்படக்கூடிய வருமான வரியையும் விளக்குவது.

இத்தொழிற்சாலைகளிலும் முன் பாராவிற்கண்ட 13 பெயரேடுகளும் வேண்டும். அவைகளைவிட அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. மிஷீன் கோள்முதல் கணக்கு—
2. மிஷீன் கட்டிடப் பற்றுவரவு கணக்கு—
3. மிஷீன் வரவு கணக்கு—
4. மிஷீன் செலவு கணக்கு—
5. மிஷீன் ரிப்பேர் செலவு கணக்கு—

ஆக மேற்கண்ட 18 பெயரேடுகளும் போதுமானது.

மிஷீன் கொள்முதல், மிஷீன் கட்டிடப் பற்று வரவு நீங்கலாக மற்ற மூன்று பெயரேடுகளையும் தொகை கட்டி, மிஷீன் செலவு, மிஷீன் ரிப்பேர், இச் செலவுகளை கடைச்செலவு ஏட்டிற்கும் மிஷீன் வரவு தொகையை லாபவரவு ஏட்டிற்கும் குறிப்பில்லாமல் தாக்கல் பண்ணவேண்டும்.

அப்பால் கடைச்செலவு ஏட்டை லாபவரவு ஏட்டில் குறிப்பில்லாமல் தாக்கல் செய்து ஒன்றிலிருந்து

ஒன்றைக் கழித்துவரும் அதிக வரவுதான் லாபம் என்று ஏற்படும். அத்தொகைக்குத்தான் வருமான வரி விதிக்கப்படும்.

## 26. அச்சாபீஸ்களில் ஏற்படுத்திக்கொள்ள வேண்டிய பெயரேடுகளையும் அவைகளில் வருமான வரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் விளக்குவது.

ஷை தொழிற்சாலைகளிலும் முன்பாராவிற் சொன்ன பெயரேடுகள் 13ம் வேண்டியதுதான்.

இவைகளைத்தவிர அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. மிஷீன் கோள்முதல் கணக்கு—
2. கட்டிடம் கோள்முதல் கணக்கு—
3. மிஷீன் சேலவு கணக்கு—
4. டயிப்புக் கோள்முதல் விற்றுவரவு கணக்கு-
5. பேப்பர் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—
6. அட்டை கோள்முதல் விற்றுவரவு கணக்கு-
7. காலிக்கோ கோள்முதல் விற்றுவரவு கணக்கு—
8. புஸ்தகம் கோள்முதல் விற்றுவரவு கணக்கு-
9. இதர ஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—
10. கம்போஸிங் பற்றுவரவு கணக்கு—
11. ஸ்ட்ரைக்கிங் பற்றுவரவு கணக்கு—
12. பயிண்டிங் பற்றுவரவு கணக்கு—

13. ரூலிங் பற்றுவரவு கணக்கு—

14. அக்கவுண்ட் புக்கு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

ஆக மேற்கண்ட பெயரேடுகள் வேண்டும்.

வருஷமுடிவில் ஷை பெயரேடுகளைத் தொகை கட்டி கையிருப்பு சரக்குகளைக் கொள்முதல்படி விலை போட்டு விற்று வரவுவைத்துப் பின் கணக்கில் கொள் முதல் எழுதவேண்டும்.

அப்பால் மிஷீன் கொள்முதல், கட்டிடம் கொள் முதல், நீங்கலாக பாக்கி ஏடுகளைப் பற்றுவரவு கழித்து அதிகவரவை லாபவரவு ஏட்டிற்கும் அதிகப் பற்றை கடைச்செலவு ஏட்டிற்கும் குறிப்பில்லாமல் கொண்டுபோய் தாக்கல் செய்யவேண்டும்.

பிறகு கடைச்செலவு ஏட்டை (இக்கம்பேனி களில் இவ்வேட்டைக் கம்பேனிச்செலவு ஏடு என்றும் வைக்கலாம்) லாபவரவு ஏட்டில் குறிப்பில்லாமல் தாக் கல் செய்து பற்றுவரவு கழித்துவரும் தொகைதான் லாபம் எனப்படுகிறது. இத்தொகைக்குத்தான் வரு மானவரி விதிக்கப்படும்.

## 27. ரெப்ரெஷ்மெண்டு ரூம்களில் பெய ரேடுகள் வைத்துக்கொள்ளவேண்டிய வகைகளையும், அவைகளில் வருமான வரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் விளக்குவது.

இக்கடைகளுக்கு முன்பாராவிற் கண்ட 13 பெயரேடுகளும் வேண்டும்.

இவைகளைத் தவிர அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. ஏரியட்டட் வாட்டர் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

2. பிஸ்கட்டு கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

3. அயிஸ் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

4. இதர ஸாமான் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

5. சமையல் பற்றுவரவு கணக்கு—

6. டிப்பன் பற்றுவரவு கணக்கு—

7. பால் கோள்முதல் விற்றுவரவு கணக்கு—

ஆக மேற்கண்ட பெயரேடுகள் வேண்டும்.

வருஷமுடிவில் தொகைகட்டி மீதமுள்ள சரக்குகளை வாங்கின விலைப்படி விற்று வரவுவைத்துப் பின் கணக்கில் கொள்முதல் எழுதவேண்டும்.

பிறகு தொகை கட்டின பெயரேடுகளைப் பற்று வரவு கழித்து அதிகப் பற்றைக் கடைச்செலவு ஏட்டிற்கும் அதிகவரவை லாபவரவு ஏட்டிற்கும் குறிப்பில்லாமல் கொண்டுபோய் தாக்கல் செய்யவேண்டும்.

அப்பால் கடைச்செலவு ஏட்டை லாபவரவு ஏட்டில் குறிப்பில்லாமல் தாக்கல் செய்து பற்றுவரவு கழித்துவரும் அதிக வரவுதான் லாபம் என்று ஏற்படுகிறது. அத்தொகைக்குத்தான் வருமான வரி விதிக்கப்படுகிறது.

## 28. ஆபரண தொழிற்சாலைகளில் வைக்க வேண்டிய பெயரேடுகளையும் அச்சாலைகளில் வருமான வரியைக் கண்டுபிடிக்கும் வழியையும் விளக்குவது.

இத்தொழிற் சாலைகளில் முன் பாராவிற் சொன்ன 13 பெயரேடுகளும் வேண்டும்.

இவைகளைவிட அடியிற்கண்ட பெயரேடுகளும் வேண்டும்.

1. தங்கவேலைக் கூலிப் பற்றுவரவு கணக்கு—
2. இழைப்புவேலைக் கூலிப் பற்றுவரவு கணக்கு—
3. வெள்ளிவேலைக் கூலிப் பற்றுவரவு கணக்கு-
4. சேதாரப் பற்றுவரவு கணக்கு—

ஆக மேற்கண்ட பெயரேடுகள் வேண்டும்.

வருஷமுடிவில் ஷை ஏடுகளைத் தொகைகட்டிப் பற்றுவரவு கழித்து அதிகவரவு வரக்கூடியவைகளை லாபவரவு ஏட்டிற்கும் அதிகப்பற்று வரக்கூடியவைகளை கடைச்செலவு ஏட்டிற்கும் கொண்டுபோக வேண்டும். பிறகு கடைச்செலவு ஏட்டைத் தொகை கட்டி லாபவரவு ஏட்டில் தாக்கல் செய்யவேண்டும். இவைகளையும் குறிப்பில்லாமலேயே தாக்கல் செய்யலாம்.

லாபவரவு ஏட்டில் வரும் அதிகவரவுதான் லாடம் எனப்படுகிறது. இத்தொகைக்குத்தான் வருமானவரி விதிக்கப்படுகிறது.

இவ்விதமாக ஒவ்வொரு வியாபாரத்திலும் ஒவ்வொரு தொழிற் சாலையிலும் வருமான வரிச்சட்டத்தை அனுசரித்துப் பெயரேடுகள் வைத்துக் கொள்ளவேண்டும்.

மேற்கண்டபடிக்குள்ள தொழில்களில் ஒவ்வொரு தொழிலையும் நடத்தக் கணக்குவைக்கும் முறையை இவ்விடம் விளக்குவதில் இப்புஸ்தகம் விரியும். ஆகையால் ஒவ்வொரு வியாபாரத்திற்கும், தொழிற்சாலைக்கும், எவ்விதமாகக் கணக்குகள் வைத்துவந்தால் வருமான வரி விதிக்கும் அதிகாரிகள் ஆக்ஷேபிக்கமாட்டார்களோ, எந்தவிதமாய்க் கணக்குவைத்தால் ஸரியான லாபத்தைக் கண்டு பிடிக்கலாமோ, அவ்வழியைத் தனித்தனி ப்ரைமர் மூலமாய் விளக்கப்படும்.

வருமான வரியைக் கண்டுபிடிக்கும் அட்டவணை இத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறது.

வருஷம் 1க்கு ரூ 2,000 வரை வரும்படியுள்ள மாஸாந்திர சம்பளமல்லாத இதரர்களுக்கு வருமான வரி :—

| | | | | |
|---|---|---|---|---|
| 1,000 ரூ | முதல் | 1,250 | வரை | ரூ. 20 |
| 1,250 ரூ | ,, | 1,500 | ,, | ரூ. 28 |
| 1,500 ரூ | ,, | 1,750 | ,, | ரூ. 35 |
| 1,750 ரூ | ,, | 2,000 | ,, | ரூ. 42 |

வருஷம் ஒன்றுக்கு ரூபாய் இரண்டாயிரத்திற்கு குறைந்து ஸம்பாதிப்பவர்சளுக்கு ரூபாய் 1-க்கு பைசா 4 வீதம் வருமான வரி அட்டவணை.

(இது மாஸாந்திர சம்பளமுள்ளவர்களுக்கு மாத்திரம்.)

| வரும்படி ரூ. | வரி ரூ. | | | வரும்படி ரூ. | வரி ரூ. | | | வரும்படி ரூ. | வரி ரூ. | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 0 | 0 | 4 | 21 | 0 | 7 | 0 | 41 | 0 | 13 | 8 |
| 2 | 0 | 0 | 8 | 22 | 0 | 7 | 4 | 42 | 0 | 14 | 0 |
| 3 | 0 | 1 | 0 | 23 | 0 | 7 | 8 | 43 | 0 | 14 | 4 |
| 4 | 0 | 1 | 4 | 24 | 0 | 8 | 0 | 44 | 0 | 14 | 8 |
| 5 | 0 | 1 | 8 | 25 | 0 | 8 | 4 | 45 | 0 | 15 | 0 |
| 6 | 0 | 2 | 0 | 26 | 0 | 8 | 8 | 46 | 0 | 15 | 4 |
| 7 | 0 | 2 | 4 | 27 | 0 | 9 | 0 | 47 | 0 | 15 | 8 |
| 8 | 0 | 2 | 8 | 28 | 0 | 9 | 4 | 48 | 1 | 0 | 0 |
| 9 | 0 | 3 | 0 | 29 | 0 | 9 | 8 | 49 | 1 | 0 | 4 |
| 10 | 0 | 3 | 4 | 30 | 0 | 10 | 0 | 50 | 1 | 0 | 8 |
| 11 | 0 | 3 | 8 | 31 | 0 | 10 | 4 | 51 | 1 | 1 | 0 |
| 12 | 0 | 4 | 0 | 32 | 0 | 10 | 8 | 52 | 1 | 1 | 4 |
| 13 | 0 | 4 | 4 | 33 | 0 | 11 | 0 | 53 | 1 | 1 | 8 |
| 14 | 0 | 4 | 8 | 34 | 0 | 11 | 4 | 54 | 1 | 2 | 0 |
| 15 | 0 | 5 | 0 | 35 | 0 | 11 | 8 | 55 | 1 | 2 | 4 |
| 16 | 0 | 5 | 4 | 36 | 0 | 12 | 0 | 56 | 1 | 2 | 8 |
| 17 | 0 | 5 | 8 | 37 | 0 | 12 | 4 | 57 | 1 | 3 | 0 |
| 18 | 0 | 6 | 0 | 38 | 0 | 12 | 8 | 58 | 1 | 3 | 4 |
| 19 | 0 | 6 | 4 | 39 | 0 | 13 | 0 | 59 | 1 | 3 | 8 |
| 20 | 0 | 6 | 8 | 40 | 0 | 13 | 4 | 60 | 1 | 4 | 0 |

வருஷம் ஒன்றுக்கு ரூபாய் இரண்டாயிரத்திற்கு குறைந்து ஸம்பாதிப்பவர்களுக்கு ரூபாய் 1-க்கு பைசா 4 வீதம் வருமான வரி அட்டவணை.— (தொடர்ச்சி.)

| வரும்படி ரூ. | வரி ரூ. | | | வரும்படி ரூ. | வரி ரூ. | | | வரும்படி ரூ. | வரி ரூ. | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 61 | 1 | 4 | 4 | 81 | 1 | 11 | 0 | 200 | 4 | 2 | 8 |
| 62 | 1 | 4 | 8 | 82 | 1 | 11 | 4 | 300 | 6 | 4 | 0 |
| 63 | 1 | 5 | 0 | 83 | 1 | 11 | 8 | 400 | 8 | 5 | 4 |
| 64 | 1 | 5 | 4 | 84 | 1 | 12 | 0 | 500 | 10 | 6 | 8 |
| 65 | 1 | 5 | 8 | 85 | 1 | 12 | 4 | 600 | 12 | 8 | 0 |
| 66 | 1 | 6 | 0 | 86 | 1 | 12 | 8 | 700 | 14 | 9 | 4 |
| 67 | 1 | 6 | 4 | 87 | 1 | 13 | 0 | 800 | 16 | 10 | 8 |
| 68 | 1 | 6 | 8 | 88 | 1 | 13 | 4 | 900 | 18 | 12 | 0 |
| 69 | 1 | 7 | 0 | 89 | 1 | 13 | 8 | 1,000 | 20 | 13 | 4 |
| 70 | 1 | 7 | 4 | 90 | 1 | 14 | 0 | | | | |
| 71 | 1 | 7 | 8 | 91 | 1 | 14 | 4 | | | | |
| 72 | 1 | 8 | 0 | 92 | 1 | 14 | 8 | | | | |
| 73 | 1 | 8 | 4 | 93 | 1 | 15 | 0 | | | | |
| 74 | 1 | 8 | 8 | 94 | 1 | 15 | 4 | | | | |
| 75 | 1 | 9 | 0 | 95 | 1 | 15 | 8 | | | | |
| 76 | 1 | 9 | 4 | 96 | 2 | 0 | 0 | | | | |
| 77 | 1 | 9 | 8 | 97 | 2 | 0 | 4 | | | | |
| 78 | 1 | 10 | 0 | 98 | 2 | 0 | 8 | | | | |
| 79 | 1 | 10 | 4 | 99 | 2 | 1 | 0 | | | | |
| 80 | 1 | 10 | 8 | 100 | 2 | 1 | 4 | | | | |

வருஷம் ஒன்றுக்கு இரண்டாயிர ரூபாயையாவது அதற்கு மேல்பட்ட தோகையையாவது ஸம்பாதிப்பவர்களுக்கு ரூபாய் 1-க்கு பைசா 5 வீதம் அட்டவணை.

| வரும் படி ரூ. | வருமான வரி | | | வரும் படி ரூ. | வருமான வரி | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | 0 | 0 | 5 | 65 | 1 | 11 | 1 |
| 2 | 0 | 0 | 10 | 70 | 1 | 13 | 2 |
| 3 | 0 | 1 | 3 | 75 | 1 | 15 | 3 |
| 4 | 0 | 1 | 8 | 80 | 2 | 1 | 4 |
| 5 | 0 | 2 | 1 | 85 | 2 | 3 | 5 |
| 6 | 0 | 2 | 6 | 90 | 2 | 5 | 6 |
| 7 | 0 | 2 | 11 | 95 | 2 | 7 | 7 |
| 8 | 0 | 3 | 4 | 100 | 2 | 9 | 8 |
| 9 | 0 | 3 | 9 | 200 | 5 | 3 | 4 |
| 10 | 0 | 4 | 2 | 300 | 7 | 13 | 0 |
| 15 | 0 | 6 | 3 | 400 | 10 | 6 | 8 |
| 20 | 0 | 8 | 4 | 500 | 13 | 0 | 4 |
| 25 | 0 | 10 | 5 | 600 | 15 | 10 | 0 |
| 30 | 0 | 12 | 6 | 700 | 18 | 3 | 8 |
| 35 | 0 | 14 | 7 | 800 | 20 | 13 | 4 |
| 40 | 1 | 0 | 8 | 900 | 23 | 7 | 0 |
| 45 | 1 | 2 | 9 | 1,000 | 26 | 0 | 8 |
| 50 | 1 | 4 | 10 | 2,000 | 52 | 1 | 4 |
| 55 | 1 | 6 | 11 | 3,000 | 78 | 2 | 0 |
| 60 | 1 | 9 | 0 | 4,000 | 104 | 2 | 8 |

வருஷம் ஒன்றுக்கு இரண்டாயிர ரூபாயையாவது அதற்கு மேல்பட்ட தொகையையாவது ஸம்பாதிப்பவர்களுக்கு ரூபாய் 1-க்கு 5 பைசா வீதம் அட்டவணை. (தொடர்ச்சி.)

| வரும்படி ரூ. | வருமான வரி | | | வரும்படி ரூ. | வருமான வரி | | |
|---|---|---|---|---|---|---|---|
| 5,000 | 130 | 3 | 4 | 7,00,000 | 18,229 | 2 | 8 |
| 6,000 | 156 | 4 | 0 | 8,00,000 | 20,833 | 5 | 4 |
| 7,000 | 182 | 4 | 8 | 9,00,000 | 23,437 | 8 | 0 |
| 8,000 | 208 | 5 | 4 | 10,00,000 | 26,041 | 10 | 8 |
| 9,000 | 234 | 6 | 0 | 20,00,000 | 52,083 | 5 | 4 |
| 10,000 | 260 | 6 | 8 | 40,00,000 | 1,04,166 | 10 | 8 |
| 20,000 | 520 | 13 | 4 | | | | |
| 30,000 | 781 | 4 | 0 | | | | |
| 40,000 | 1,041 | 1 | 8 | | | | |
| 50,000 | 1,302 | 1 | 4 | | | | |
| 60,000 | 1,562 | 8 | 0 | | | | |
| 70,000 | 1,822 | 14 | 8 | | | | |
| 80,000 | 2,083 | 5 | 4 | | | | |
| 90,000 | 2,343 | 12 | 0 | | | | |
| 1,00,000 | 2,604 | 2 | 8 | | | | |
| 2,00,000 | 5,208 | 5 | 4 | | | | |
| 3,00,000 | 7,812 | 8 | 0 | | | | |
| 4,00,000 | 10,416 | 10 | 8 | | | | |
| 5,00,000 | 13,020 | 13 | 4 | | | | |
| 6,00,000 | 15,625 | 0 | 0 | | | | |

உ

# தமிழ் நாட்டுக் கணக்குப் பதிவு நூல்.

மூன்றாவது பாகம்.

## தபால், தந்தி, ரயில் இலாக்கா வரிக்கணக்கு விளக்கம்.

### 1. தபால் வரியை விளக்குவது.

தபால் வரி யென்பது தபால் இலாக்காவால் வஸூல் செய்யப்பட்ட தொகைகள். நிலம் வைத்துக் கொண்டிருப்பவர்களிடம் நில வரியும், வீடு வைத்துக் கொண்டிருப்பவர்களிடம் வீட்டு வரியும், வியாபாரம் செய்கிறவர்களிடம் வருமான வரியும் வாங்குவது போல, தபால் இலாக்கா மூலம் ஸமாச்சாரங்களை எழுதியனுப்புகிறவர்களிடம் தபால் வரி வஸூல் செய்யப்படுகிறது. இத்தபால் இலாக்கா வரியை வஸூல் செய்ய ஏற்படுத்தியிருக்கும் சட்டங்கள் மைல்களைப் பொருத்ததல்ல. தபாலின் எடையைப் பொருத்ததாய் இருக்கிறது. ஆகையால் எவ்வளவு ஸமீபத்தில் உள்ள ஊராயிருந்தாலும், எவ்வளவு தூரத்தில் உள்ள ஊராயிருந்தாலும் ஒரே விதமான வரிதான் வஸூல் செய்யப்படுகிறது. ஆனால் இந்தியாவிற்குள் அனுப்பப்படும் தபால்களுக்கு ஒரு ரேட்டும் வெளிநாடுக

ளுக்கு அனுப்பப்படும் தபால்களுக்கு ஒரு ரேட்டும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். தபால் வரிகளெல்லாம் தபால் தலைகள் மூலமாகவே செலுத்தப்படுகின்றன.

தபால் கார்டுகள் உள்நாடு—இதில் ஒருபக்கத்தில் காலணா முத்திரை அடிக்கப்பட்டிருக்கும். முத்திரை யடிக்கப்பட்ட பக்கத்தின் இடது பாகத்தில் மேல்விலா ஸம் இன்ன ஊர் இன்னாருக்கு என்று எழுத வேண்டும்.

ஷை பக்கத்தின் வலது பாகத்திலும் பின் புறத்தி லும் ஸமாசாரம் எழுதப்பட வேண்டும்.

இதற்கு பதிலாய் ஸொந்த கார்டுகளிலும் எழுதி காலணா முத்திரை யொட்டலாம். ஆனால் அது போஸ் டல் சட்டத்தை அனுஸரித்ததாய் இருக்க வேண்டும்.

இரட்டை தபால் கார்டுகள்—இதில் முன் பக்கம் இருக்கும் கார்டு அனுப்பப்படுகிறவருக்கு ஸமாசாரம் எழுதப்பட வேண்டியது.

பின் பக்கம் இருக்கும் கார்டில் அனுப்பப் பெற்றவர் அனுப்பியவருக்கு வேண்டுமானால் பதில் எழுதலாம்.

உரைகள்—இதில் அரையணா முத்திரை அடித்த உரைகளும், இரண்டணா முத்திரையடித்த உரை களும் உண்டு. அரையணா உரையில் தபால் எழுதி வைத்து அனுப்பப்படலாம். இரண்டணா உரையில் ரெஜிஸ்டர் செய்யவேண்டிய தபால்களை அனுப்ப லாம்.

ரேஜிஸ்டர்—ஸாதாரண தபால்களும் போஸ்ட் கார்டுகளும், புஸ்தகப் பாக்கெட்டுகளும் பதிவு செய் யாமல் அனுப்பப்படும். அப்படி பதிவு செய்து அனுப்பவேண்டுமானால் இரண்டணா முத்திரை ஒபரி யாய் ஒட்டப்பட வேண்டும். ஆனால் இரண்டணா உரையில் ரெஜிஸ்டர் செய்தால் தபால் எடைக்குள்ள ஸ்டாம்பு மாத்திரம் ஒட்டினால் போதுமானது.

அக்நாலேட்ஜ்மேண்டு— ரெஜிஸ்டர் உருப்படி கள் அனுப்பப்பட்டால் பெற்றுக்கொண்டவரிட மிரு ந்து அவர்கள் பெற்றுக்கொண்டதற்கு ருசுவாய் அவர்களுடைய கையெழுத்து அனுப்பினவருக்கு வேண்டுமானால், ரெஜிஸ்டர் கூலியும் தபால் கூலியும் நீங்கலாக ஒபரியாய் 1-அணா முத்திரை ஒட்டப்பட வேண்டும்.

பாக்கேட்டுகள்—புஸ்தகங்களையும், அச்சு பாரங் களையும், கணக்கு நகல்களையும், பாக்கெட்டுகளாக அனுப்பலாம். இவைகள் இரண்டு பக்கங்களிலும் (அல்லது 1 பக்கமாவது) திறந்துவிடப்பட்டு உரை போடப்படவேண்டும். அடியில் கண்டவிகிதப்படி இதற்கு தபால் முத்திரை ஒட்டப்பட வேண்டும்.

பார்ஸல்கள்— மருந்துகளையும், நகைகளையும் இன்னும், தபால் இலாக்கா உத்தியோகஸ்தர்களுக்கா வது, தபாலில் போகும் இதர உருப்படிகளுக்காவது தீங்கை விளைவிக்கக்கூடாத ஸாமான்களையும், சட்டப் படிக்கு எடை அளவிற்கு மேற்படாமலும் குறையா மலும் இருந்தால் பார்ஸல்மூலமாய் அனுப்பலாம். அடி யிற்கண்ட விகிதப்படி அவைகளுக்கு தபால் முத்திரை ஒட்டப்பட வேண்டும்.

இன்ஷியோரன்ஸ்— இன்ஷியோரன்ஸ் என்பது பொறுப் பேற்றல் அதாவது உத்திரவாதம் செய்தல். தபாலில் அனுப்பப்படும் ஸாமான்களை இன்ஷியூர் செய்து அனுப்பலாம். அப்படி செய்யப்பட வேண்டு மானால் உள்ளிருக்கும் ஸாமானுக்கு விலை ஏற்படுத்தி அத்தொகைக்கு இன்ஷியூர் செய்ய வேண்டும். அப் படி செய்யக்கூடிய உருப்படிகள் நன்ருய் டப்பிகளில் மூடி ஈயப்பத்து வைக்கப்பட்டு அதற்கு மேல் துணி போட்டுத் தைத்து, தைத்த மூலைகளிலெல்லாம் அரக்கு முத்திரை ஸீல் வைக்கப்பட வேண்டும்.

நாணயங்களும், பொன் வெள்ளி நகைகளும், ரெத்தின நகைகளும், நோட்டுகளும் அவசியம் இன்ஷி யூர் செய்யப்பட வேண்டும். அதினுடைய கட்டணவிப ரங்களும் அடியில் விவரிக்கப் படுகின்றன.

வால்யூபேயபிள்— பார்ஸல்களையும், பாக்கெட் களையும், ரயில்வே ரசீதுகளையும், வால்யூபேயபிள் ஆக அனுப்பலாம். அதாவது உள்ளிருக்கும் ஸாமான் களை ஆர்டரின் பேரில் அனுப்பியிருந்தால் அதில் கண்ட தொகையை அனுப்பப் பெற்றவர்களிடமிருந்து தபால் இலாக்கா அதிகாரிகளே வஸூல் செய்து அனுப்பியவருக்குக் கொடுப்பார்கள். அனுப்பப் பெற் றவர் தொகை செலுத்தாவிட்டால் அந்த உருப்படி யானது அனுப்பியவருக்கே திருப்பிக் கொடுக்கப்படும். வால்யூ பேயபிள் (Value Payable) என்பது "பெறுமானம் செலுத்தப்படக்கூடியது" என்று அர்த்தமாகிறது.

இத்தொகைகளுக்குள்ள கட்டணங்கள் உள்நாட்டு மணியார்டர் கட்டணம் போல்தான். தபால் ரயில்வே ரசீதுகளை உரைபோடாமல் திறந்தே வி. பி. செய்யலாம்.

அதிற்கண்ட தொகை ரூ 1,000-க்கு மேற்படக்கூடாது.

ரெயில்வேரெசிதுகளில் வி. பி. அனுப்புகிறவர் பெயருக்கே ஸாமான்கள் ஒப்புக்கொள்ளப்பட்டதாயிருக்க வேண்டும். வி. பி. அனுப்புகிறவர் அதிற்கண்ட ஸாமானை இன்னொரிடம் டெலிவரி செய்ய வேண்டுமென்று என்டார்ஸ் பண்ணிக் கையெழுத்திட்டிருக்கவேண்டும்.

மணியார்டர்—ஒருவர் மற்றொருவருக்குப் பணம் அனுப்ப வேண்டுமானல் மணியார்டர்மூலம் அனுப்பலாம். அதாவது நாம் அனுப்பவேண்டியவருடைய பெயர் விலாசம் முதலியவைகளையும், அனுப்புகிறவர் பெயரையும் தொகையையும் கண்டு அதற்காக ஏற்பட்டிருக்கும் பாரத்தில் எந்தபாஷையிலாவது எழுதி ஷெ பாரத்துடன் தொகையையும் அதற்குள்ள கமிஷனையும் தபாலாபீஸில் கொடுத்து ரசீது பெறவேண்டியது. பணம் பெற்றுக்கொண்டவருடைய கையெழுத்து வேறுகட்டண மில்லாமலே அனுப்பியவருக்கு அனுப்பப்படும்.

மணியார்டர் செய்யும்தொகை 1 அணுவினுடைய பின்னமாய் வரக்கூடாது. ரூ 600-க்கு மேலும் மணியார்டர் ஏற்றுக்கொள்ளப் படமாட்டாது.

## தபால் கூலியின் விபரங்கள்.

ஒற்றைகார்டு-காலணா } தோலா என்பது
இரட்டை கார்டு-அரையணா } 1 ரூ எடை

கடிதங்கள்— 1 தோலா வரை ... ... ½ அணா.
1 தோலாவிற்கு மேல் 10 தோலா வரை 1 அணா.
மேற்பட்ட பிரதி 10 தோலாவிற்கு ... 1 அணா.
பாக்கெட்டு புக்போஸ்ட் 10 தோலா வரை ... ½ அணா.
மேற்பட்ட பிரதி 10 தோலாவிற்கு ... ½ அணா.
பார்ஸல்கள்— 40 தோலா வரை ... ... 2 அணா.
40 க்கு மேல் 80 தோலா வரை ... 4 அணா.
மேற்பட்ட பிரதி 40 தோலாவிற்கு ... 2 அணா.

இவைகள் முன் பணமாக ஸ்டாம்பு ஒட்டப்பட வேண்டியது. ரெஜிஸ்ட்ரேஷன்பிரத்தியேகம்.

இன்ஷியூரன்ஸ் 50 ரூபாய் வரை ... ... 1 அணா.
பிரதி 50 ரூபாய்க்கு ... ... ... ... 1 அணா.
மணியார்டர் 5 ரூபாய் வரை ... ... ... 1 அணா.
10 ரூபாய் வரை ... ... 2 அணா.
10-க்கு மேல் 25 ரூபா. வரை 4 அணா.

ரூ 25-க்கு மேல் பிரதி 25 ரூபாய்க்கும் அதன் சில்லரைக்கும் 4 அணா. ஆனால் சில்லரை

5 ரூபாய்க்கு மேல் ஆகாவிட்டால் ... அணா 1.
10 ரூபாய்க்கு மேல் ஆகாவிட்டால் ... அணா 2
15 ரூபாய்க்கு மேல் ஆகாவிட்டால் ... அணா 3.

அணாவிற்குக் குறைந்த பின்னம் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது என்று முன்னமே சொல்லியிருக்கிறது.

மேல் விலாஸம்— தபாலில் அனுப்பப்படும் உருப்படிகளில் விலாஸம் செவ்வையாய் எழுதாவிட்டால் அந்த உருப்படிகள் கொடுபடா விட்டாலும், பிசகாய் கொடுபட்டாலும், அல்லது தாமதமாய்க் கொடுபட்டாலும் அதற்கு தபால் இலாக்கா உத்திரவாதியல்ல. முக்கியமாய் மேல் விலாஸம் அடியிற்கண்டவை போல எழுதப்பட வேண்டும்.

---

மகா-ா-ா-ஸ்ரீ

அ. ரு. வ.

வெங்கடாசலம் செட்டியார்

அவர்கள்,

மளிகை, கொத்தவால் சாவடி,

சென்னை.

---

மகா-ா-ா-ஸ்ரீ

M. ராஜ கோபால நாயுடு அவர்கள்,

பண்டார வாடை, பாபநாசம் போஸ்ட்,

தஞ்சாவூர் ஜில்லா.

---

மகா-ா-ா-ஸ்ரீ

ராமஸ்வாமி அய்யர் அவர்கள்,

கிளர்க்கு, ஸப்ரேஜிஸ்டரார் ஆபீஸ்,

திருமயம்,

புதுக் கோட்டை.

## முன்பணம் செலுத்தப்படாத தபால்கள்.

கவர்கள், அல்லது பாக்கெட்டுகள் இவைகளுக்கு முன்பணம் செலுத்தப்படாவிட்டால் கொடுக்கப்படும் காலத்தில் இரட்டிப்புச் சார்ஜ் வசூல் செய்யப்படும். குறைத்து செலுத்தப்பட்டிருந்தால் குறைந்த தொகைக்கு இரட்டிப்பு வசூல்செய்யப்படும். மேற்கண்டபடிக்கு வரும்படி வரவேண்டிய ஸம்பந்தமாய் தபால் இலாக்காவிற்கு செலுத்தப்படும் வரிகளை மொத்தவரவில் இருந்து கழிக்க வருமானவரி இலாக்கா அனுமதி கொடுக்கிறது. ஆனால் அவைகள் வரிவிதிக்கும் அதிகாரிகளால் ஒப்புக்கொள்ளக் கூடியவைகளாய் இருக்க வேண்டும்.

## 2. தந்திவரியை விளக்குவது. (உள் நாடு)

அவஸரமான ஸமாச்சாரங்களை அனுப்பவேண்டுமானால் தந்திமூலமாய் அனுப்பலாம். ஒவ்வொருவருடைய ஸமாச்சாரத்தையும் தந்திக்கம்பி மூலம் தனித்தனியனுப்பவேண்டியிருப்பதால் தபால் இலாக்காமாதிரி இந்த இலாக்காவில் குறைந்த கட்டணத்திற்கு அனுப்பமுடியாது. ஜாஸ்தியான கட்டணம் ஏற்படும். அது அடியில் விபரிக்கப்படுகிறது. அப்படி அனுப்பப்படும் ஸமாச்சாரங்கள் இரண்டு வகுப்புகளாக இருக்கின்றன.

### I. இது ஸாதாரண தந்தி.

இதற்கு 12 வார்த்தைகளுக்கு 6 அணாவாகும். 12 வார்த்தைகளுக்கு குறைந்தாலும் 6 அணா தான். பிரதி கூடுதலாகும் ஒவ்வொரு வார்த்தைக்கும் 6 பைஸாவாகும். அனுப்புகிற ஊர் நீங்கலாக மற்ற

விலாஸம் முதலிய வார்த்தைகளுக்கெல்லாம் கட்டணம் உண்டு. இது எந்த பாஷையானாலும் ஆங்கிலத்தில் எழுதப்பட வேண்டும். ஒரு வார்த்தையில் 15 எழுத்து களுக்கு மேல் இருக்கக்கூடாது.

## II. தீவிர தந்தி.

இது அவஸரமாய் செல்லக்கூடியது. இதற்கு 12 வார்த்தைகளுக்கும் அதற்குக் குறைந்த வார்த்தை களுக்கும் கட்டணம் ரூ 1. இதற்கு மேலாகும் ஒவ் வொரு வார்த்தைக்கும் அணா 2 ஆகும். மற்ற விப ரங்கள் ஸாதாரண தந்தி மாதிரிதான். எந்த தந்திக்கும் பதில் சார்ஜ் கட்டலாம். தந்தியனுப்பப் பெற்றவர் கட்டண மில்லாமலே பதில் கொடுக்கலாம். ஆனால் தந்தியனுப்பினவரால் கட்டப்பட்ட தொகை கம்மியா னால் ஷை கம்மித் தொகை பதில் அனுப்புகிறவரால் செலுத்தப்பட வேண்டும். அணாவிற்குக் குறைந்து பதில் சார்ஜ் கட்ட முடியாது.

தந்தி இலாக்காவிற்கு செலுத்தப்பட வேண்டிய தொகைகளும் தபால் முத்திரை ரூபமாகவே செலுத் தப்படுகின்றன.

தந்தி மணியார்டர்— தொகைகள் அவஸரமாய் மணியார்டர் பண்ணப்பட வேண்டுமானால் ஸாதாரண மான மணியார்டர் பாரத்தில் மணியார்டர் ஏற்பாட்டுப் படி எழுதி குருக்கே தந்தியால் என்று எழுதிவிட வேண்டும். வழக்கமான கமிஷனுடன் தந்திச் செல வையும் தபால் ஆபீஸில் கொடுத்தால் மணியார்டரை தந்திமூலம் அனுப்பி பணம் பட்டுவாடா செய்வார்கள்.

இத்தந்தி இலாக்கா ஸம்பந்தமாய் செலவாகும் தொகைகள் வரும்படி ஸம்பந்தமாகவே செய்யப்பட்டால் வருமான வரி சட்டப்படி இச்செலவுகளை மொத்த வரவில் இருந்து கழிக்கலாம். ஆனால் இவைகளும் வருமான வரி விதிக்கும் அதிகாரிகளால் ஒப்புக் கொள்ளக் கூடியவைகளாய் இருக்க வேண்டும்.

## 3. ரயில் வரியை விளக்குவது.

ரயில் இலாக்காவரிகள் மைலையும் எடையையும் பொருத்தது.

ஜனங்கள் பிரயாணம் போகவேண்டுமானால் ஒவ்வொரு பிரயாணிக்கும் மைலுக்கு இவ்வளவு என்று சட்டம் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. ஸாதாரணமாய் பிரயாணம் செய்பவர்கள் 3-வது வகுப்பிலும் கொஞ்சம் சௌகரியத்தைக் கூட அபேக்ஷித்தால் இரண்டாவது வகுப்பிலும் ஜாஸ்தியான சௌகரியங்களை அபேக்ஷித்தால் 1-வது வகுப்பிலும் பிரயாணம் செய்யலாம்..ரயில் வரியெல்லாம் ரயில் சார்ஜ் என்று சொல்லப்படும். அப்படி வாங்கப்படும் சார்ஜ்கள் ஒவ்வொரு வகுப்பிற்கும் ஒவ்வொரு ரேட்டாய் இருக்கிறது. அவைகள் அடியில் விபரிக்கப்படுகின்றன. ரயிலில் பிரயாணஞ்செய்யவேண்டியவர்கள்,சார்ஜை புறப்படும் ஊரிலேயே முன்பணமாகச்செலுத்தி டிக்கட்டுகள்பெற வேண்டும். அப்படி யல்லாமல் டிக்கட்டு அன்னியில் பிரயாணஞ் செய்பவர்களிடம், அவர்கள் எந்தவண்டியில் பிரயாணம் செய்கிறார்களோ அவ்வண்டி எந்த ஊரில் இருந்து புறப்பட்டதோ அவ்வூருக்கும் டிக்கட்டு இல்லாமல் பிரயாணி இறங்கும் ஊருக்கும் உள்ளசார்ஜ்

உடன் 1-வது வகுப்பிற்கு ரூ 6-ம் 2வதுக்கு ரூ 3-ம், 3 வதுக்கு ரூ 1-ம் அபராதமாகச் சேர்த்து வாங்கப் படும். வாங்கின டிக்கட்டிற்கண்ட ஸ்டேஷனல்லாமல் அதிகதூரமுள்ள ஸ்டேஷனுக்குப் பிரயாணம் செய் பவர்களிடமும், டிக்கட்டிற்கண்ட வகுப்பல்லாமல் உயர்ந்த வகுப்பில் பிரயாணம் செய்பவர்களிடமும், வாங்கவேண்டிய தொகையுடன் மேற்கண்டபடி அபராதமும் வஸூல் செய்யப்படும்.

லக்கேஜ்—இதுபிரயாணிகளுடன் கூடக்கொண்டு போகும் ஸாமான்.

3-வது வகுப்புப் பிரயாணிகள் நபர் 1-க்கு 15 சேரும், இரண்டாவது வகுப்புப் பிரயாணிகள் நபர் 1-க்கு 30 சேரும், முதலாவது வகுப்புப் பிரயாணிகள் நபர் 1-க்கு 60 சேரும் சார்ஜ் இல்லாமல் கொண்டு போகலாம்.

அப்படிக்கொண்டுபோகும் ஸாமான்கள் அதிக எடையானல் அதிக எடையுள்ளவைகளுக்கு பார்ஸல் ரேட்டுப்படி செலுத்த வேண்டும். ஆனல் லக்கேஜ் ஸாமான்கள் பிரயாணம் புறப்படும் இடத்தில் நிறுக்கப் படாமல் போய்ச் சேரும் ஸ்டேஷனில் ரயில்வே உத்தி யோகஸ்தரால் கண்டு பிடிக்கப்பட்டு நிறுக்கப்பட்டால் தள்ளுபடி இல்லாமலே முழு லக்கேஜ் தொகை வஸூல் செய்யப்படும்.

லக்கேஜானல் அனேக ஸாமான்களை ஒரே எடை யில் நிறுத்தும், பார்ஸலானல் ஒவ்வொரு உருப்படி யையும் நிறுத்தும் சார்ஜ் வஸூல் செய்யப்படும்.

லக்கேஜ் ஸாமான்களில் பிரயாணிகளுக்கு வேண்டியவைகளை வைத்துக் கொண்டு பாக்கியை புறப்படும் ஸ்டேஷன் லக்கேஜ் கிளர்க்கிடம் ஒப்பி வைத்து ரசீது பெற்றால் இறங்குகிற ஸ்டேஷனில் பெற்றுக் கொள்ளலாம்.

பார்ஸல்—வியாபார ஸம்பந்தமாயும் ஸொந்தமாயும் அனுப்ப வேண்டிய ஸாமான்கள் சிறிதாயிருந்தால் போஸ்ட் பார்ஸல் மூலம் அனுப்பப்படுவதுபோல ஜாஸ்தி எடையுள்ள ஸாமான்களை ரயில்வே பார்ஸல் மூலம் அனுப்பலாம். ஆனால் போய்ச்சேர வேண்டிய ஊர் ரயில்வே ஸ்டேஷனாய் இருக்க வேண்டும்.

ஒவ்வொரு ஸாமானும் ஸரியானபடி பாக் செய்யப்பட்டுப் பிறரால் இலகுவாய் திறக்கக்கூடாதவைகளாய் இருக்க வேண்டும். ஒவ்வொரு பார்ஸலும் தனித் தனி எடை போட்டுக் கணக்குப் பண்ணப்பட வேண்டும். இவைகளுக்குச் சார்ஜ், ஸாமான் போய்ச்சேரும் இடத்திலும் கொடுக்கலாம்.

எந்த இடத்தில் கொடுத்தாலும் ஒரே சார்ஜ்தான். பார்ஸலில் அடங்கியிருக்கும் ஸாமான் இன்னது என்று உறுதியாய்ச் சொல்லப்படவேண்டும். உணவு ஸாமானாகவும் சீக்கிரம் கெட்டுப்போகக்கூடிய ஸாமான்களாவும் உள்ளவைகளை அரைப்பார்ஸல் ரேட்டில் (half parcel rate) அனுப்பலாம். மற்றும் சில ஸாமான்களை கால்பார்ஸல் ரேட்டில் (quarter parcel rate) அனுப்பலாம். ஆனால் இப்படிக் குறைந்த சார்ஜில் அனுப்பப்படுகிறவைகளுக்கு சார்ஜ் முன் பணமாகவே கொடுக்கப்பட வேண்டும்.

பார்ஸல்கள் அனுப்பப்பட்டால் அவைகளும் லக்கேஜ்களும் வந்துசேர்ந்த 7 நாள்களுக்குள் டெலிவரி பெற்றுக்கொள்ளப்படவேண்டும். மேற்கண்ட காலத்திற்குள் டெலிவரி யெடுக்காவிட்டால் நாள் 1-க்கு மணு 1-க்கு 6 பைஸாவீதம் வாடகை வஸூலிக்கப்படும். ஆனால் அப்படி வஸூல் செய்யப்படும் வாடகை பிரதி ஒவ்வொரு பார்ஸலுக்கும் 1 அணுவிற்குக் குறையமாட்டாது.

ரயில்வே மணு—

| | |
|---|---|
| 3 ரூபா யெடை ... ... | 1 பலம். |
| 8 பலம்... ... ... ... | 1 சேர். |
| $1\frac{3}{5}$ சேர்... ... ... ... (ஒண்ணரையே ரெண்டுமா சேர்) | 1 பவுண்டு. |
| 2 பவுண்டு... ... ... | 1 ரயில்வே சேர். |
| 40 ரயில்வே சேர் ... | 1 ரயில்வே மணு. |

I. ரயில்வே பார்சல் சார்ஜ்கள்—

a. $2\frac{1}{2}$ சேர் அல்லது $\frac{1}{2}$ கனஅடிக்கு மேற்படாவிட்டால்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 முதல் 500 மைல் வரை ... ... | ரூ. | 0 | 4 | 0 |
| 501 „ 1,000 „ ... ... | „ | 0 | 8 | 0 |
| 1,001 „ 1,500 „ ... ... | „ | 0 | 12 | 0 |
| 1,500 மைலுக்குமேல் எவ்வளவு மைலானாலும் | „ | 1 | 0 | 0 |

b. $2\frac{1}{2}$ சேருக்குமேல் 5 சேர் வரை அல்லது 1 கனஅடிவரை.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 முதல் 250 மைல் வரை ... ... | ரூ. | 0 | 4 | 0 |
| 251 „ 500 „ ... ... | „ | 0 | 8 | 0 |
| 501 „ 750 „ ... ... | „ | 0 | 12 | 0 |
| 751 „ 1,000 „ ... ... | „ | 1 | 0 | 0 |
| 1,001 „ 1,250 „ ... ... | „ | 1 | 4 | 0 |
| 1,251 „ 1,500 „ ... ... | „ | 1 | 8 | 0 |
| 1,501 „ 1,750 „ ... ... | „ | 1 | 12 | 0 |
| 1,750 மைலுக்குமேல் எவ்வளவானாலும் ... | „ | 2 | 0 | 0 |

மேற்கண்டவாறு ரயில்வே பார்ஸல்களுக்கு சார்ஜ் வஸூல் செய்யப்படுகின்றன. அடியிற்கண்ட ஸாமான்கள் பார்ஸலில் அனுப்பபட்டால் அரைச் சார்ஜ் வஸூலிக்கப்படும்:—

வாழையிலை முதலிய இலைகள், பழங்கள், வெற்றிலை, காய்கறிகள், அப்பளம், வெண்ணெய், மீன், பால், தயிர், மிட்டாய் பலகாரங்கள், ரொட்டி, சுதேசிபிஸ்கட்டுகள், அயிஸ், பச்சைமிளகாய், புஷ்பம், தேங்காய் முதலிய கெட்டுப் போகக்கூடிய தீன் ஸாமான்களும் செடிகளும் நீயூஸ் பேப்பர்களும் அரைப்பார்ஸல் ரேட்டில் அனுப்பப்படும். ஆனால் அவைகள் சொந்தக்காரருடைய ஜெவாப் தாரியின் பேரில் தான் ஒப்புக்கொள்ளப்படும்.

கால்பார்ஸல் ரேட்டில் அனுப்பக்கூடிய ஸாமான்கள்:—

குடிக்கிற தண்ணீர், முழுப்பார்ஸல் ரேட்டிலும் அரைப்பார்ஸல் ரேட்டிலும் அனுப்பப்பட்ட ஸாமான்கள் அடங்கிய காலிப்பெட்டிகள், அயிஸ் அனுப்பப்பட்ட சாக்குகள் இவைகளை சொந்தக்காரர் ஜெவாப் தாரியின் பேரில் அனுப்பலாம். ஆனால் அந்த ஸாமான்கள் பார்ஸலில் வந்தவைகள் தான் என்று ரசீது நம்பர்மூலம் ரூபிக்கவேண்டியதுடன் வந்த 1 வாரத்திற்குள் திருப்பியனுப்பப்படவேண்டும். ஷை ஸாமான்கள் அனுப்பியவர்களுக்குத்தான் திருப்பியனுப்பப்படலாம்.

அரைப்பார்ஸல் ரேட்டு, கால்பார்ஸல் ரேட்டில் அனுப்பப்படும் ஸாமான்களுக்கு சார்ஜ்கள் முன்னதா

கவே செலுத்தப்படவேண்டும் என்று முன்னமே சொல்லியிருக்கிறது. ஜாஸ்தியான ஸாமான்களை குட்ஸ் மூலம் அனுப்பவேண்டும். இச்செலவுகளெல்லாம் மொத்தலாபத்தில் இருந்து கழிக்கக்கூடிய செலவுகளாக ஒப்புக்கொள்ளப்படும். பிரயாணிகளுடைய சார்ஜ்கள் 50 மைல்வரை ஒரு விதமாயும் அதற்கு மேல்பிரயாணம் செய்பவர்களுக்கு ஒரு விதமாயும் இருக்கிறது.

மூன்று வகுப்புகளுக்கும் மைல் கணக்குப்படி உள்ள சார்ஜ்கள் அடியில் 100 மைல்வரை விவரிக்கப் படுகின்றன. ஆனால் அவைகள் நீலகிரிமலை ரயில்வேய்க்கு ஸம்பந்தமில்லை. மூன்றாவது வகுப்புப் பிரயாணிகள் விஷயத்தில் 50 மைலுக்குள் சொல்லப்பட்ட சார்ஜ்கள் எல்லா சின்னலயன்களுக்கும் ஸம்பந்தப்படும்.

பெரிய லயன்களின் சார்ஜ்கள் அடியில் விபரிக்கப் படுகின்றன.

| | ஒவ்வொரு பாஸேஞ்சருக்கும் மைல் 1-க்கு. | |
|---|---|---|
| | மெயிலுக்கு பைஸா | மற்ற வண்டிகளுக்கு பைஸா |
| திருப்பத்தூர், கிருஷ்ணகிரி, மோரார்ப்பூர், உஸூர் ரயில்வே நீங்கலாக போத்தனூருக்குக் கிழக்கில் உள்ள பாதைகளில் ... ... ... | $2\frac{1}{2}$ | 2 |
| கொச்சின் ரயில்வே உள்பட போத்தனூருக்கு மேற்கிலுள்ள பாதைகளில் ... ... ... | 2 | 2 |
| திருப்பத்தூர் — கிருஷ்ணகிரி மோராப்பூர்—உஸூர் ரயில்வேலயன்களில்... ... ... ... ... ... | 2 | 2 |

. ஒவ்வொரு கடைகளிலும் உள்ள பங்குக்காரர் களும், ஸிப்பந்திகளும் வரும்படி கிடைக்கக்கூடிய ஸம்பந்தமாயும் ரயில் பிரயாணம் செய்தால் மேற் கண்டபடிக்குள்ள ரேட்டுப்படியுள்ள செலவுகளை மொத்தவரவில் இருந்துகழிக்க வருமானவரி இலாக்கா அனுமதிக்கிறது.

## II. அரைப்பார்ஸல் சார்ஜ்ரேட்டு. (Half rate.)

| மைல். | 2½ சேர். ரூ. | அ. | 5 சேர். ரூ. | அ. | மைல். | 2½ சேர். ரூ. | அ. | 5 சேர். ரூ. | அ. | மைல். | 2½ சேர். ரூ. | அ. | 5 சேர் ரூ. | அ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 250 | 0 | 2 | 0 | 2 | 1750 | 0 | 8 | 0 | 14 | 3250 | 0 | 14 | 1 | 10 |
| 500 | 0 | 2 | 0 | 4 | 2000 | 0 | 8 | 1 | 0 | 3500 | 0 | 14 | 1 | 12 |
| 750 | 0 | 4 | 0 | 6 | 2250 | 0 | 10 | 1 | 2 | 3750 | 1 | 0 | 1 | 14 |
| 1000 | 0 | 4 | 0 | 8 | 2500 | 0 | 10 | 1 | 4 | 4000 | | | | |
| 1250 | 0 | 6 | 0 | 10 | 2750 | 0 | 12 | 1 | 6 | மும் அதற்கு | 1 | 0 | 2 | 0 |
| 1500 | 0 | 6 | 0 | 12 | 3000 | 0 | 12 | 1 | 8 | மேலும் | | | | |

## III. கால்பார்ஸல் சார்ஜ்ரேட்டு. (Quarter rate.)

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 250 | 0 | 2 | 0 | 2 | 3000 | 0 | 6 | 0 | 12 | 5750 | 0 | 12 | 1 | 7 |
| 500 | 0 | 2 | 0 | 2 | 3250 | 0 | 7 | 0 | 13 | 6000 | 0 | 12 | 1 | 8 |
| 750 | 0 | 2 | 0 | 3 | 3500 | 0 | 7 | 0 | 14 | 6250 | 0 | 13 | 1 | 9 |
| 1000 | 0 | 2 | 0 | 4 | 3750 | 0 | 8 | 0 | 15 | 6500 | 0 | 13 | 1 | 10 |
| 1250 | 0 | 3 | 0 | 5 | 4000 | 0 | 8 | 1 | 0 | 6750 | 0 | 14 | 1 | 11 |
| 1500 | 0 | 3 | 0 | 6 | 4250 | 0 | 9 | 1 | 1 | 7000 | 0 | 14 | 1 | 12 |
| 1750 | 0 | 4 | 0 | 7 | 4500 | 0 | 9 | 1 | 2 | 7250 | 0 | 15 | 1 | 13 |
| 2000 | 0 | 4 | 0 | 8 | 4750 | 0 | 10 | 1 | 3 | 7500 | 0 | 15 | 1 | 14 |
| 2250 | 0 | 5 | 0 | 9 | 5000 | 0 | 10 | 1 | 4 | 7750 | 1 | 0 | 1 | 15 |
| 2500 | 0 | 5 | 0 | 10 | 5250 | 0 | 11 | 1 | 5 | 8000 | 1 | 0 | 2 | 0 |
| 2750 | 0 | 6 | 0 | 11 | 5500 | 0 | 11 | 1 | 6 | | | | | |

**IV.** 5 சேருக்கு மேலும் அல்லது 1 கன அடிக்குமேலும் உள்ள பார்ஸல்களுக்கு முழுச்சார்ஜ் ரேட்டு.

| மைல்கள். | 5 சேருக்குமேல் 10 சேர் வரை. ரூ. | அ. | 20 சேர் வரை. ரூ | அ. | 30 சேர் வரை. ரூ. | அ. | 40 சேர் வரை. ரூ. | அ. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 25 மைல் வரை. | 0 | 4 | 0 | 4 | 0 | 4 | 0 | 4 |
| 25 மைலுக்குமேல் 50க்கு மேல் படாமல். | 0 | 4 | 0 | 4 | 0 | 8 | 0 | 8 |
| 50 .. 75 ,, | 0 | 4 | 0 | 8 | 0 | 12 | 0 | 12 |
| 75 ,, 100 ,, | 0 | 4 | 0 | 8 | 0 | 12 | 1 | 0 |
| 100 ,, 125 ,, | 0 | 8 | 0 | 12 | 1 | 0 | 1 | 4 |
| 125 ,, 150 ,, | 0 | 8 | 0 | 12 | 1 | 0 | 1 | 8 |
| 150 ,, 175 ,, | 0 | 8 | 1 | 0 | 1 | 4 | 1 | 12 |
| 175 ,, 300 ,, | 0 | 8 | 1 | 0 | 1 | 8 | 2 | 0 |
| 300 ,, 325 ,, | 0 | 12 | 1 | 4 | 1 | 12 | 2 | 4 |
| 325 ,, 350 ,, | 0 | 12 | 1 | 4 | 2 | 0 | 2 | 8 |
| 350 ,, 375 ,, | 0 | 12 | 1 | 8 | 2 | 4 | 2 | 12 |
| 375 ,, 450 ,, | 0 | 12 | 1 | 8 | 2 | 4 | 3 | 0 |
| 450 ,, 475 ,, | 1 | 0 | 1 | 12 | 2 | 8 | 3 | 4 |
| 475 ,, 500 ,, | 1 | 0 | 1 | 12 | 2 | 12 | 3 | 8 |
| 500 ,, 525 ,, | 1 | 0 | 2 | 0 | 3 | 0 | 3 | 12 |
| 525 ,, 600 ,, | 1 | 0 | 2 | 0 | 3 | 0 | 4 | 0 |
| 600 ,, 625 ,, | 1 | 4 | 2 | 4 | 3 | 4 | 4 | 4 |
| 625 ,, 650 ,, | 1 | 4 | 2 | 4 | 3 | 8 | 4 | 8 |
| 650 ,, 675 ,, | 1 | 4 | 2 | 8 | 3 | 12 | 4 | 12 |
| 675 ,, 750 ,, | 1 | 4 | 2 | 8 | 3 | 12 | 5 | 0 |
| 750 ,, 775 ,, | 1 | 6 | 2 | 12 | 4 | 0 | 5 | 4 |
| 775 ,, 900 ,, | 1 | 6 | 2 | 12 | 4 | 2 | 5 | 8 |
| 900 ,, 925 ,, | 1 | 9 | 3 | 0 | 4 | 6 | 5 | 12 |
| 925 ,, 950 ,, | 1 | 9 | 3 | 0 | 4 | 10 | 6 | 0 |
| 950 ,, 1050 ,, | 1 | 9 | 3 | 2 | 4 | 12 | 6 | 4 |

## பிரயாணிகள் சார்ஜ்கள்.

| மைல். | 1வது வகுப்பு. | | 2வது வகுப்பு. | | 3வது வகுப்பு. | | மைல். | 1வது வகுப்பு. | | 2வது வகுப்பு. | | 3வது வகுப்பு. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ. | ரூ. | அ. | அ. | ப. | | ரூ. | அ. | ரூ. | அ. | அ. | ப. |
| 1 | 0 | 3 | 0 | 1½ | 0 | 6 | 26 | 1 | 10 | 0 | 13 | 5 | 0 |
| 2 | 0 | 3 | 0 | 1½ | 0 | 6 | 27 | 1 | 11 | 0 | 14 | 5 | 3 |
| 3 | 0 | 3 | 0 | 1½ | 0 | 6 | 28 | 1 | 12 | 0 | 14 | 5 | 6 |
| 4 | 0 | 4 | 0 | 2 | 0 | 9 | 29 | 1 | 13 | 0 | 15 | 5 | 6 |
| 5 | 0 | 5 | 0 | 2½ | 1 | 0 | 30 | 1 | 14 | 0 | 15 | 5 | 9 |
| 6 | 0 | 6 | 0 | 3 | 1 | 0 | 31 | 1 | 15 | 1 | 0 | 6 | 3 |
| 7 | 0 | 7 | 0 | 3½ | 1 | 3 | 32 | 2 | 0 | 1 | 0 | 6 | 6 |
| 8 | 0 | 8 | 0 | 4 | 1 | 6 | 33 | 2 | 1 | 1 | 1 | 6 | 6 |
| 9 | 0 | 9 | 0 | 4½ | 1 | 6 | 34 | 2 | 2 | 1 | 1 | 6 | 9 |
| 10 | 0 | 10 | 0 | 5 | 1 | 9 | 35 | 2 | 3 | 1 | 2 | 7 | 0 |
| 11 | 0 | 11 | 0 | 5½ | 2 | 3 | 36 | 2 | 4 | 1 | 2 | 7 | 0 |
| 12 | 0 | 12 | 0 | 6 | 2 | 6 | 37 | 2 | 5 | 1 | 3 | 7 | 3 |
| 13 | 0 | 13 | 0 | 6½ | 2 | 6 | 38 | 2 | 6 | 1 | 3 | 7 | 6 |
| 14 | 0 | 14 | 0 | 7 | 2 | 9 | 39 | 2 | 7 | 1 | 4 | 7 | 6 |
| 15 | 0 | 15 | 0 | 7½ | 3 | 0 | 40 | 2 | 8 | 1 | 4 | 7 | 9 |
| 16 | 1 | 0 | 0 | 8 | 3 | 0 | 41 | 2 | 9 | 1 | 5 | 8 | 3 |
| 17 | 1 | 1 | 0 | 8½ | 3 | 3 | 42 | 2 | 10 | 1 | 5 | 8 | 6 |
| 18 | 1 | 2 | 0 | 9 | 3 | 6 | 43 | 2 | 11 | 1 | 6 | 8 | 6 |
| 19 | 1 | 3 | 0 | 9½ | 3 | 6 | 44 | 2 | 12 | 1 | 6 | 8 | 9 |
| 20 | 1 | 4 | 0 | 10 | 3 | 9 | 45 | 2 | 13 | 1 | 7 | 9 | 0 |
| 21 | 1 | 5 | 0 | 11 | 4 | 3 | 46 | 2 | 14 | 1 | 7 | 9 | 0 |
| 22 | 1 | 6 | 0 | 11 | 4 | 6 | 47 | 2 | 15 | 1 | 8 | 9 | 3 |
| 23 | 1 | 7 | 0 | 12 | 4 | 6 | 48 | 3 | 0 | 1 | 8 | 9 | 6 |
| 24 | 1 | 8 | 0 | 12 | 4 | 9 | 49 | 3 | 1 | 1 | 9 | 9 | 6 |
| 25 | 1 | 9 | 0 | 13 | 5 | 0 | 50 | 3 | 2 | 1 | 9 | 9 | 9 |

## பிரயாணிகள் சார்ஜ்கள். (தொடர்ச்சி.)

| மைல். | 1வது வகுப்பு. | | 2வது வகுப்பு. | | 3வது வகுப்பு. | | மைல். | 1வது வகுப்பு. | | 2வது வகுப்பு. | | 3வது வகுப்பு. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ. | ரூ. | அ. | அ. | ப. | | ரூ. | அ. | ரூ. | அ. | ரூ. | அ. |
| 51 | 3 | 3 | 1 | 10 | 9 | 0 | 76 | 4 | 12 | 2 | 6 | 0 | 13 |
| 52 | 3 | 4 | 1 | 10 | 9 | 0 | 77 | 4 | 13 | 2 | 7 | 0 | 13 |
| 53 | 3 | 5 | 1 | 11 | 9 | 0 | 78 | 4 | 14 | 2 | 7 | 0 | 13 |
| 54 | 3 | 6 | 1 | 11 | 9 | 0 | 79 | 4 | 15 | 2 | 8 | 0 | 14 |
| 55 | 3 | 7 | 1 | 12 | 10 | 0 | 80 | 5 | 0 | 2 | 8 | 0 | 14 |
| 56 | 3 | 8 | 1 | 12 | 10 | 0 | 81 | 5 | 1 | 2 | 9 | 0 | 14 |
| 57 | 3 | 9 | 1 | 13 | 10 | 0 | 82 | 5 | 2 | 2 | 9 | 0 | 14 |
| 58 | 3 | 10 | 1 | 13 | 10 | 0 | 83 | 5 | 3 | 2 | 10 | 0 | 14 |
| 59 | 3 | 11 | 1 | 14 | 10 | 0 | 84 | 5 | 4 | 2 | 10 | 0 | 14 |
| 60 | 3 | 12 | 1 | 14 | 10 | 0 | 85 | 5 | 5 | 2 | 11 | 0 | 15 |
| 61 | 3 | 13 | 1 | 15 | 11 | 0 | 86 | 5 | 6 | 2 | 11 | 0 | 15 |
| 62 | 3 | 14 | 1 | 15 | 11 | 0 | 87 | 5 | 7 | 2 | 12 | 0 | 15 |
| 63 | 3 | 15 | 2 | 0 | 11 | 0 | 88 | 5 | 8 | 2 | 12 | 0 | 15 |
| 64 | 4 | 0 | 2 | 0 | 11 | 0 | 89 | 5 | 9 | 2 | 13 | 0 | 15 |
| 65 | 4 | 1 | 2 | 1 | 11 | 0 | 90 | 5 | 10 | 2 | 13 | 0 | 15 |
| 66 | 4 | 2 | 2 | 1 | 11 | 0 | 91 | 5 | 11 | 2 | 14 | 1 | 0 |
| 67 | 4 | 3 | 2 | 2 | 12 | 0 | 92 | 5 | 12 | 2 | 14 | 1 | 0 |
| 68 | 4 | 4 | 2 | 2 | 12 | 0 | 93 | 5 | 13 | 2 | 15 | 1 | 0 |
| 69 | 4 | 5 | 2 | 3 | 12 | 0 | 94 | 5 | 14 | 2 | 15 | 1 | 0 |
| 70 | 4 | 6 | 2 | 3 | 12 | 0 | 95 | 5 | 15 | 3 | 0 | 1 | 0 |
| 71 | 4 | 7 | 2 | 4 | 12 | 0 | 96 | 6 | 0 | 3 | 0 | 1 | 0 |
| 72 | 4 | 8 | 2 | 4 | 12 | 0 | 97 | 6 | 1 | 3 | 1 | 1 | 1 |
| 73 | 4 | 9 | 2 | 5 | 13 | 0 | 98 | 6 | 2 | 3 | 1 | 1 | 1 |
| 74 | 4 | 10 | 2 | 5 | 13 | 0 | 99 | 6 | 3 | 3 | 2 | 1 | 1 |
| 75 | 4 | 11 | 2 | 6 | 13 | 0 | 100 | 6 | 4 | 3 | 2 | 1 | 1 |

## 4. மேல் நாட்டாருடன்வியாபாரம் செய்யும் வழி.

ஐரோப்பிய வியாபாரிகளிடமிருந்து இந்தியாவிற்கு ஸாமான்கள் வரவழைக்க வேண்டுமானால் முதலில் ஷை வியாபாரிகளுக்கு எழுதி காலக்கிரயப்படி சரக்குகளின் விலையைத் தெரிந்துகொள்ள வேண்டும். அப்பால் அவ்வியாபாரிகளின் விளம்பரப்படிக்குள்ள அட்வான்ஸ் தொகையை ஒரு பாங்கில் செக்காகவாவது, ஸ்டர்லிங்கு மணியார்டர்மூலமாகவாவது அனுப்பவேண்டும். பிறகு ஷை வியாபாரிகள் இன்டெண்டுபடிக்குள்ள ஸாமான்களை கப்பலில் புக்கு செய்து "பில் ஆப் லேடிங்கு" என்னும் கப்பல் ரசீதைவாங்குவார்கள். பிறகு சரக்குவிலையையும் அதற்கு ஏற்பட்டிருக்கும் செலவையும் சேர்த்து அட்வான்ஸ் தொகையைக் கழித்து பாக்கிக்கு ஒருதவணையுண்டியலை எழுதி மேற்படி உண்டியலை இந்தியாவிற்கும் ஐரோப்பாவிற்கும் ஸம்பந்தமுள்ள பாங்கிகளில் கொடுத்து டிஸ்கவுண்டு கழித்துப் பணத்தை முன்னதாகவே பெற்றுக்கொண்டு விடுவார்கள். அப்படிப் பணம் பெற்றுக்கொள்ளும் பொழுது "பில் ஆப் லேடிங்" என்னும் கப்பல் ரசீதை ஷை பாங்கிகளிலேயே கொடுத்து விடுவார்கள்.

அப்படி எழுதும் உண்டியல், ஒன்றாகவாவது இரண்டாகவாவது அல்லது மூன்றாகவாவது எழுதுவார்கள். இவைகளுக்கு 113-வது பக்கத்திற் கண்டபடி ஸ்டாம்பு டியூட்டிகள் விதிக்கப்படுகின்றன.

அப்படி மூன்று உண்டியல்கள் எழுதப்பட்டால் ஐரோப்பா பாங்கில் ஒரு உண்டியலை வைத்துக் கொண்டு மற்ற இரண்டு உண்டியல்களையும் கப்பல் இன்வாயிஸையும் இந்தியாவில் உள்ள தங்கள் பாங்கிக்கு அனுப்புவார்கள். ஆனால் ஒரு உண்டியலுக்குத்தான் பணம் கிடைக்கும். சிலஸமயங்களில் ஐரோப்பா வியாபாரிகள் சரக்கை இன்ஷியோர் செய்வதில்லை.

இன்ஷியோர் செய்வது என்பது பொறுப்பேற்றல் என்பதாய் தபால் இலாக்காக்கணக்குகளில் விவரிக்கப்பட்டிருக்கிறது.

அப்படிப்போல் கப்பல் சரக்குகளுக்கு அபாயம் நேர்ந்தால் தாங்கள் கொடுப்பதாய் இன்ஷியோரென்ஸ் கம்பேனிகள் இந்தியாவிலும் ஐரோப்பாவிலும் ஏற்பட்டிருக்கின்றன. அக்கம்பேனிகளில் நூற்றுக்கு இவ்வளவு கமிஷன் என்பதாக ஏற்பாடுகள் உண்டு. அப்படி இன்ஷியோர் செய்தால், அச்சரக்குகள் இந்தியாவின் துறைமுகம் வந்து சேரும் வரை இன்ஷியூரென்ஸ் கம்பேனிக்காரர் ஜெவாப்தாரியாகிறார்கள். கப்பல் முழுகி ஸாமான்களுக்கு அபாயம் நேர்ந்துவிட்டால் இன்ஷியோரன்ஸ் கம்பேனிக்காரர் இன்ஷியோர் செய்யப்பட்டதொகையைக் கொடுத்துவிடுகிறார்கள். இதற்குத் தமிழில் "வட்டத்திற்கு வாங்குதல்" என்று சொல்லுவதுண்டு.

மேற்கண்ட படிக்கு சீர்மை வியாபாரிகள் சரக்கை இன்ஷியோர் செய்யாவிட்டால் சீர்மை பாங்கர்கள் இன்ஷியூர் செய்து அனுப்புவதுண்டு.

அப்படி அனுப்பினால் இன்ஷியோர் செலவை யும் தவணையுண்டியலுடன் சேர்த்து வட்டியுடன் வஸூல் செய்வார்கள்.

சரக்கு வருவதற்கு முந்தியே உண்டியல் இரண் டும் இந்தியாவிற்கு வந்து விடும். உண்டியல் வந்த வுடன் இந்தியாபாங்கர் ஒரு உண்டியலுடன் கணக்கு விபரமும் எழுதி சரக்கிற்கு ஆர்டர் அனுப்பிய இந்தியா வியாபாரிக்கு அனுப்புவார்கள். இந்தியா வியாபாரி உடனே ஷை உண்டியலில் ஒப்புக்கையெ ழுத்திட்டு பாங்கிக்கு அனுப்பி கப்பல் இன்வாயிஸைப் பெற்றுக்கொள்ள வேண்டும். கப்பல் வந்தவுடன் சரக்கை பெடுத்துக்கொள்ளலாம்.

அப்பால் தவணைப்படி தொகையை பாங்கிக்குச் செலுத்தவேண்டும். ஒப்புக்கையெழுத்திட்டு உண்டி யலைப்பெற்றுக்கொள்ளாமல் இருந்துவிட்டால் அவர் கள் சீமை வியாபாரிக்கு விஷயங்களைத் தெரிவித்து விடுவார்கள். அதற்குள் கப்பலும் வந்துவிட்டால் பாங்கர்களே சரக்கையெடுத்து அவர்கள் கட்டிடங் களில் வைத்து நெருப்பு இன்ஷியோரன்ஸும் செய்து விடுவார்கள்.

நெருப்பு இன்ஷியோரன்ஸ் என்பது தபால், கப் பல், இன்ஷியோரன்ஸ்போலவே ஒரு பொறுப்பேற் றல்தான். அதாவது கட்டிடங்களில் ஷை. சரக்குகள் இருக்கும்பொழுது நெருப்பால் ஷை சரக்குகளுக்கு அபாயம் நேர்ந்துவிட்டால், நெருப்பு இன்ஷியோரன்ஸ் கம்பெனிக்காரர் சரக்குக் கிரயத்தை பாங்கிக்கார ருக்குக் கொடுத்துவிடுகிறார்கள் இதற்காக அவர்க

ளுக்கு நூற்றுக்கு இவ்வளவு என்று கமிஷன் ஏற்பாடுண்டு. அதுபோல் முந்தியே செலுத்தி இன்ஷியோர் செய்துவைக்கவேண்டும்.

மேற்கண்டபடி இந்தியா வியாபாரிகளால் எடுக்கப்படாத சரக்குகளை பாங்கர்களே எடுத்து பத்திரம் பண்ணி உண்டியல் தவணை ஆனவுடன் சீர்மை வியாபாரிக்கும் இந்தியா வியாபாரிக்கும் தவணை கண்டு நோட்டீஸ் கொடுப்பார்கள். ஷை தவணை முடிந்தவுடன் இந்தியாவியாபாரி, உண்டியல்தொகை, ஷைக்கு கப்பல் இன்ஷியோரன்ஸ் கமிஷன், நெருப்பு இன்ஷியோரன்ஸ் கமிஷன், சரக்கு எடுத்த செலவு, கட்டிட வாடகை இவைகளைச் செலுத்திச் சரக்கைப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

அப்படியும் எடுத்துக்கொள்ளாவிட்டால் ஷை சரக்கை பாங்கர்கள் பப்ளிக்குஏலத்தில்வைத்து வஸூலாகும் தொகையில் இருந்து தங்கள் பாக்கிகளை ஒப்படைத்துக்கொண்டு பாக்கித் தொகையை சீர்மை வியாபாரிகளுக்கு அனுப்பிவிடுகிறார்கள்.

பப்ளிக்கு ஏலத்தில் வஸூலாகும் தொகை பாங்கிக்கே போராவிட்டால் பாக்கிப்படும் தொகையை சீர்மை வியாபாரிகளிடம் பாங்கர்கள் பெற்றுக்கொண்டு விடுகிறார்கள். அப்படி நேர்ந்தால் இந்தியா வியாபாரிகள் தாங்கள் அனுப்பிய அட்வான்ஸை இழக்கவேண்டியதுதான். இதுவுமல்லாமல் சீர்மை வியாபாரிகளுக்கு இதன் மூலம் நஷ்டம் நேர்ந்தால் இந்தியா வியாபாரி அவைகளையும் கொடுக்கவேண்டியதுதான். ஆனல் உண்டியலில் ஒப்புக் கையெழுத்தும் போட்டு

சரக்கையும் எடுத்துக்கொண்டு தவணைப்படி உண்டிய லுக்குப் பணமும் கட்டாவிட்டால் பாங்கர்கள் ஷெ ஒப்புக்கையெழுத்திட்ட உண்டியல்களுக்கு ஒப்புக் கையெழுத்திட்ட பார்ட்டியிடம் கோர்ட்டு மூலம் எல்லாச் செலவையும் சேர்த்து சுலபமாய் வஸூல் செய்து போடுவார்கள். தவணையுண்டியல்களுக்குப் பணம் வஸூல் செய்வது நிறம்ப சுலபம். நம்பிக்கை யுடைய இந்தியவியாபாரிகளுக்குத் தான் சீர்மை வியா பாரிகள் தவணையுண்டியல் எழுதுவார்கள். ஸாமான்னி யமான வர்களுக்கு டிமாண்டு உண்டியல் எழுதி கப்பல் இன்வாயிஸைக் கொடுக்கும்பொழுதே பாங்கர்கள் பணம் வாங்கிவிடுவார்கள்.

இவ்வழிகளெல்லாம் இந்நூலாசிரியரால் எழு தப்படுகிற "வர்த்தகப்பழக்கம்" என்னும் நூலில் நன்றாய் விளக்கப்பட்டிருப்பதால் இவை இம்மட்டு டன் நிறுத்தப்பட்டன.

## 5. சிட்டைக் குறிப்பு அவஸ் குறிப்பு பெய ரேடு அயன் தொகை உதாரண விளக்கம்.

ஷெகணக்குகள் எழுதும் வழியை விபரத்துடன் சென்னை க. அ. சடை I மாதக் கணக்கை உதாரண மாப் எழுதிக்காட்டப்படுகிறது.

தொகை கட்டுவது பக்கத்திற்குப் பக்கம் கட்டி கடைசியில் ஒன்று சேர்த்துக் கூட்டுவதும் உண்டு. முன் பக்கத்தொகையைப் பின் பக்கத்தில் போட்டுக் கூட்டிக்கொண்டு போவதும் உண்டு.

# 1910௵ ஏப்ரல்௴ 1௳ முதல் சிட்டைக் குறிப்பு.

| வருஷம் மாதம். | தேதி | வகை விபரம். | பற்று. ரூ. | அ. | ப. | வரவு. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1910 எப்ரல் | 1 | | | | | | | |
| | | ஸ்வாமிகள் வரவு ... ... ... ... | ... | ... | ... | 7 | 0 | 0 |
| | | ஆதாய வரவு ... ... ... ... ... | ... | ... | ... | 3 | 0 | 0 |
| | | பங்கு முதல் வரவு சு. அவர்கள் வசம் ... | ... | ... | .. | 11000 | 0 | 0 |
| | | மதுராஸ் பாங்கிப்பற்று ... ... ... ... | 500 | 0 | 0 | ... | ... | ... |
| | | நாஷனல் பாங்கிப்பற்று ... ... ... | 4500 | 0 | 0 | ... | ... | ... |
| ,, | 2 | இந்தியன் பாங்கிப்பற்று ... ... ... ... | 5000 | 0 | 0 | ... | ... | ... |
| | | கடைச்செலவு புதுக்கணக்கு எழுத ... ... | 10 | 0 | 0 | ... | ... | ... |
| | | க. தெ. கடைப்பற்று இ. வட்டிக்கு ... ... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| | | நாஷனல் பாங்கி வரவு க. தெ. பெயரால் 1 நெ ... செக்கு 1க்கு ... ... ... ... ... | ... | ... | ... | 2000 | 0 | 0 |
| | | ஆ ... | 12010 | 0 | 0 | 13010 | 0 | 0 |

| வருஷம் மாதம். | தேதி | வகை விபரம். | பற்று. ரூ | அ. | ப. | வரவு. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1910 ஏப்ரல் | | முன்பக்கம் ... | 12010 | 0 | 0 | 13010 | 0 | 0 |
| | | மெழுகுவர்த்தி கொள்முதல் பற்று ஜேம்ஸ் கம்பேனி வசம் வாங்கிய மெழுகுவர்த்திப் பெட்டி 100-க்கு 10 ஆக ... ... ... ... ... | 1000 | 0 | 0 | ... | ... | ... |
| | | இந்தியன் பாங்கி வரவு ஜேம்ஸ் கம்பேனிப் பெயரால் 1 நெ. செக்கு 1-க்கு ... ... ... | ... | ... | ... | 1000 | 0 | 0 |
| | | அ. கு. பற்று கைமாற்று ... ... ... | 900 | 0 | 0 | ∠ ... | ... | ... |
| ,, | 5 | அ. கு. வரவு கைமாற்று பாக்கி ... ... ... | ... | ... | ... | ∠ 900 | 0 | 0 |
| | | மவுண்டு ரோட்டு கன்னய்யா பிரதர்ஸ் பற்று வட்டி பிராமிஸரி நோட்டு 1-க்கு நாஷனல் பாங்கி 2 நெ. செக்குக் கொடுத்த வகையில்... ... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| | | நாஷனல் பாங்கி வரவு கன்னய்யா பிரதர்ஸ் பெயரால் 2 நெ. செக்கு 1-க்கு வரவு ... ... | ... | ... | ... | 2000 | 0 | 0 |
| | | மெழுகு வர்த்தி விற்று வரவு முன்ஸிபல் ஆபீஸ் வசம் பெட்டி 10க்கு ... ... ... ... | ... | ... | ... | 120 | 0 | 0 |
| | | வீட்டுப்பற்று நாளது மாதச் செலவிற்கு ... ... | 60 | 0 | 0 | ... | ... | ... |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | தர்மப்பற்று சில்லரை தருமக் கையொப்பம் ... | 10 | 0 | 0 | ... | ... | ... |
| ,, | 15 | கமிஷன் வரவு கிரிஸணுயில் கம்பேனி வசம், கும்பகோணம் அ.ரு. கம்பேனிக்கு அனுப்பி பாஸை வீ. பி. யெடுக்கும்படி சொன்ன எண்ணெய் டின் 100-க்கு... ... ... ... ... ... | ... | ... | ... | 6 | 4 | 0 |
| | | பருத்திக்கொட்டை கொள்முதல் பற்று விருது பட்டி கூழைய நாடார் அனுப்பிய 5 மணு மூட்டை 300-க்கு ... ... ... ... ... | 1500 | 0 | 0 | ... | ... | ... |
| | | விருதுபட்டி கூழையா நாடார் வரவு 3 மாதம் தவணைக்கு ஷை மூட்டை 300-க்கு ... ... | ... | ... | ... | 1500 | 0 | 0 |
| ,, | 20 | மெழுகுவர்த்தி விற்று வரவு கோபால் பிரதர்ஸ் வசம் பெட்டி 90-க்கு 11 ஆ ... ... ... | ... | ... | ... | 990 | 0 | 0 |
| ,, | 21 | மதுராஸ் பாங்கிப்பற்று... ... ... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| ,, | 25 | க. ரு. கதிரேசன் செட்டியார் பற்று 1 வட்டி பிராமிஸரி நோட்டு 1-க்கு மதுராஸ் பாங்கிச் செக்குக் கொடுத்த வகையில் ... ... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| | | மதுராஸ் பாங்கி வரவு க. ரு. க. தி. பெயரால் 1 நெ. செக்கு 1-க்கு ... ... ... ... | ... | ... | ... | 2000 | 0 | 0 |
| ,, | 29 | அ. க. வரவு கைமாற்று ... ... ... | ... | ... | ... | ∠ 600 | 0 | 0 |
| ,, | 30 | அ. க. பற்று கைமாற்று பாக்கி ... ... ... | 600 | 0 | 0 | ∠ ... | ... | ... |
| | | ஆ ... | 22080 | 0 | 0 | 22126 | 4 | 0 |
| | | இருப்பு 46—4—0 | | | | | | |

சென்னை உ சு. அ.

## 1910௵ ஏப்ரல்௴ 1உ முதல் அஸல் குறிப்பு.

| வருஷம் மாதம். | தேதி. | பேரேட்டுப் பக்கம் | வகை விபரம். | பற்று. ரூ. | அ. | ப. | வரவு. ரூ | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1910 | | 1 | ஸ்வாமிகள் வரவு ... ... ... ... | ... | ... | ... | 7 | 0 | 0 |
| ஏப்ரல் | 1 | 2 | ஆதாய வரவு ... ... ... ... ... | ... | ... | ... | 3 | 0 | 0 |
| | | 3 | பங்கு முதல் வரவு சு. அவர்கள் வசம் ... ... | ... | ... | ... | 11000 | 0 | 0 |
| | | 4 | மதுராஸ் பாங்கிப் பற்று ... ... ... ... | 500 | 0 | 0 | ... | ... | ... |
| | | 5 | நாஷனல் பாங்கிப் பற்று ... ... ... | 4500 | 0 | 0 | ... | ... | ... |
| | | 7 | இந்தியன் பாங்கிப் பற்று ... ... ... | 5000 | 0 | 0 | ... | ... | ... |
| | | 6 | கடைச்செலவு புதுக்கணக்கு எழுத ... ... | 10 | 0 | 0 | ... | ... | ... |
| | | 8 | க. தெ. கடைப் பற்று இ. வட்டிக்கு ... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| ,, | 2 | 5 | நாஷனல் பாங்கி வரவு க. தெ. பெயரால் 1 நம்பர் செக்கு 1க்கு ... ... ... ... | ... | ... | ... | 2000 | 0 | 0 |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | 9 | மெழுகுவர்த்தி கொள்முதல் பற்று ஜேம்ஸ் கம்பேனி வசம் வாங்கிய மெழுகுவர்த்திப் பெட்டி 100க்கு 10ஆ. ... ... ... ... ... | 1000 | 0 | 0 | ... | ... | ... |
| | | 7 | இந்தியன் பாங்கி வரவு ஜேம்ஸ் கம்பேனிப்பெயரால் 1நம்பர் செக்கு 1க்கு வரவு ... ... | ... | ... | ... | 1000 | 0 | 0 |
| ,, | 5 | 10 | மவுண்ட்ரோட் கன்னையா பிரதர்ஸ் பற்று 1 வட்டிப் பிராமிஸரி நோட்டு 1க்கு நாஷனல் பாங்கி 2 நம்பர் செக்குக் கொடுத்த வகையில் பற்று... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| ,, | 5 | 5 | நாஷனல் பாங்கிவரவு கன்னய்யா பிரதர்ஸ் பெயரால் 2 நம்பர் செக்கு 1க்கு வரவு ... ... | ... | ... | ... | 2000 | 0 | 0 |
| | | 9 | மெழுகுவர்த்தி விற்று வரவு முன்ஸிப்பல்ஆபீஸ் வசம் பெட்டி 10க்கு ... ... ... ... | ... | ... | ... | 120 | 0 | 0 |
| | | 11 | வீட்டுப் பற்று நாளது மாதச் செலவிற்கு ... | 60 | 0 | 0 | ... | ... | ... |
| | | 12 | தர்மப் பற்று சில்லரை தர்மக் கையொப்பம் ... | 10 | 0 | 0 | ... | ... | ... |
| ,, | 15 | 13 | கமிஷன் வரவு சிட்டை விபரப்படி ... ... | ... | ... | ... | 6 | 4 | 0 |
| | | 14 | பருத்திக்கொட்டை கொள்முதல் பற்று விருதுபட்டி கூழையநாடார் அனுப்பிய 5 மணு மூட்டை 300க்கு 5 ஆ ... ... ... ... ... | 1500 | 0 | 0 | ... | ... | ... |
| | | | ஆக ரூ... | 16580 | 0 | 0 | 16136 | 4 | 0 |

| வருஷம் மாதம். | தேதி. | பெயரேட்டுப் பக்கம். | வகை விபரம். | பற்று. ரூ. | அ. | ப. | வரவு. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | முன்பக்கம் நூ... | 16580 | 0 | 0 | 16136 | 4 | 0 |
| | | 15 | விருதுபட்டி கூழையநாடார் வரவு ஷெ வகையில் மூட்டை 300க்கு 3ரூ தவணைக்கு ... | ... | ... | ... | 1500 | 0 | 0 |
| ,, | 20 | 9 | மெழுகுவர்த்தி விற்றுவரவு கோபால் பிரதர்ஸ் வசம் பெட்டி 90க்கு 11 ஆ ... ... ... | ... | ... | ... | 990 | 0 | 0 |
| ,, | 21 | 4 | மதுராஸ் பாங்கிப் பற்று ... ... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| ,, | 25 | 16 | க. ரு. கதிரேசன் செட்டியார் பற்று 1 வட்டி பிராமிஸரி நோட்டு 1க்கு மதுராஸ் பாங்கிச் செக்கு கொடுத்த வகையில் ... ... ... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| | | 4 | மதுராஸ் பாங்கி வரவு க. ரு. க. தி. பெயரால் 1 நம்பர் செக்கு 1க்கு வரவு ... ... ... | ... | ... | ... | 2000 | 0 | 0 |
| | | | ஆ | 20580 | 0 | 0 | 20626 | 4 | 0 |
| | | | ஆ வரவு 20626—4—0 க்கு<br>ஆ பற்று 20580—0—0 நீக்கி<br>இருப்பு 46—4—0 | | | | | | |

# பெயரேடு.

சென்னை. உ சு. அ.

## I. ஸ்வாமிகள் பற்று வரவு கணக்கு.

| வருஷம் மாதம். | தேதி | வகை விபரம். | பற்று. ரூ. | அ. | ப. | வரவு. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1910 | | ஸ்வாமிகள் பற்று வரவு கணக்கு. | | | | | | |
| எப்ரல் | 1 | வரவு புதுக்கணக்கு எழுதிய வகையில் வரவு ... | ... | ... | ... | 7 | 0 | 0 |
| | | ஆ வரவு ... | ... | ... | ... | 7 | 0 | 0 |
| | | 2. ஆதாய வரவு கணக்கு. | | | | | | |
| எப்ரல் | 1 | வரவு புதுக்கணக்கு எழுத ... ... ... | ... | ... | ... | 3 | 0 | 0 |
| | | ஆ வரவு ... | ... | ... | ... | 3 | 0 | 0 |

| வருஷம் மாதம். | தேதி | வகை விபரம். | பற்று. ரூ. | அ. | ப. | வரவு. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1910 | | | | | | | | |
| | | **3. பங்கு முதல் வரவு கணக்கு.** | | | | | | |
| எப்ரல் | 1 | வரவு சு. அவர்கள் வசம் வரவு ... ... | ... | ... | ... | 11000 | 0 | 0 |
| | | ஆக வரவு ... ... | ... | ... | ... | 11000 | 0 | 0 |
| | | **4. மதுராஸ் பாங்கிப் பற்று வரவு கணக்கு.** | | | | | | |
| எப்ரல் | 1 | பற்று ... ... ... ... ... | 500 | 0 | 0 | ... | ... | ... |
| ,, | 21 | பற்று ... ... ... ... ... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| ,, | 25 | வரவு க. ரு. க. தி. பெயரால் 1 செ. செக்கு 1-க்கு | ... | ... | ... | 2000 | 0 | 0 |
| | | ஆக ... | 2500 | 0 | 0 | 2000 | 0 | 0 |
| | | **5. நாஷனல் பாங்கிப் பற்று வரவு கணக்கு.** | | | | | | |
| எப்ரல் | 1 | பற்று ... ... ... ... ... ... | 4500 | 0 | 0 | ... | ... | ... |
| ,, | 2 | வரவு க. தெ. பெயரால் 1 செ. செக்கு 1-க்கு | ... | ... | ... | 2000 | 0 | 0 |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஏப்ரல் | 5 | வரவு கன்னய்யா பிரதர்ஸ் பெயரால் 2 நெ. செக்கு 1-க்கு வரவு ... ... ... ... | ... | ... | ... | 2000 | 0 | 0 |
| | | ஆ ... | 4500 | 0 | 0 | 4000 | 0 | 0 |
| | | **6. கடைச் செலவு கணக்கு.** | | | | | | |
| ஏப்ரல் | 2 | பற்று புதுக்கணக்கு எழுத ... ... ... | 10 | 0 | 0 | ... | ... | ... |
| | | ஆகப் பற்று ... | 10 | 0 | 0 | ... | ... | ... |
| | | **7. இந்தியன் பாங்கிப் பற்று வரவு கணக்கு.** | | | | | | |
| ஏப்ரல் | 1 | பற்று ... ... ... ... ... | 5000 | 0 | 0 | ... | ... | ... |
| | 2 | வரவு ஜேம்ஸ் கம்பேனியாரால் 1 நெ. செக்கு 1-க்கு வரவு ... ... ... ... ... | ... | ... | ... | 1000 | 0 | 0 |
| | | ஆ ... | 5000 | 0 | 0 | 1000 | 0 | 0 |
| | | **8. க. தே. கடைப் பற்று வரவு கணக்கு.** | | | | | | |
| ஏப்ரல் | 2 | பற்று இ வட்டிக்கு ... ... ... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| | | ஆகப் பற்று ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |

சென்னை. உ சு. அ.

| வருஷம் மாதம். | தேதி | வகை விபரம். | பற்று. ரூ. | அ. | ப. | வரவு. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1910 | | 9. மெழுகுவர்த்தி கொள்முதல் விற்று வரவு கணக்கு. | | | | | | |
| ஏப்ரல் | 2 | பற்று ஜேம்ஸ் கம்பேனி வசம் வாங்கிய பெட்டி 100-க்கு 10 ஆ ... ... ... ... | 1000 | 0 | 0 | ... | ... | ... |
| | 5 | வரவு பெட்டி 10-க்கு ... ... ... ... | ... | ... | ... | 120 | 0 | 0 |
| | 20 | வரவு பெட்டி 90-க்கு ... ... ... | ... | ... | ... | 990 | 0 | 0 |
| | | ஆ ... | 1000 | 0 | 0 | 1110 | 0 | 0 |
| | | ஆதிக வரவு ... | ... | ... | ... | 110 | 0 | 0 |
| | | 10. கன்னய்யா பிரதர்ஸ் பற்று வரவு சணக்கு. | | | | | | |
| ஏப்ரல் | 5 | பற்று 1 வட்டி பிராமிஸரி நோட்டு 1-க்கு ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| | | ஆகப் பற்று ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | **11. வீட்டுப் பற்று வரவு கணக்கு.** | | | | | | |
| ஏப்ரல் | 5 | பற்று செலவுக்கு … … … … | 60 | 0 | 0 | … | … | … |
| | | ஆகப் பற்று … | 60 | 0 | 0 | … | … | … |
| | | **12. தர்மப் பற்று வரவு கணக்கு.** | | | | | | |
| ஏப்ரல் | 5 | பற்று சில்லரை தர்மக் கையொப்பம் … … | 10 | 0 | 0 | … | … | … |
| | | ஆகப் பற்று .. | 10 | 0 | 0 | … | … | … |
| | | **13. கமிஷன் பற்று வரவு கணக்கு.** | | | | | | |
| ஏப்ரல் | 15 | வரவு சிட்டை விபரப்படி … … … | … | … | … | 6 | 4 | 0 |
| | | ஆ. வரவு … | … | … | … | 6 | 4 | 0 |
| | | **14. பருத்திக்கோட்டை கோள்முதல் விற்று வரவு கணக்கு.** | | | | | | |
| ஏப்ரல் | 15 | பற்று மூட்டை 300-க்கு 5 ஆக … … | 1500 | 0 | 0 | … | … | … |
| | | ஆகப் பற்று … | 1500 | 0 | 0 | … | … | … |

சென்னை உ சு. அ.

| வருஷம் மாதம். | தேதி | வகை விபரம். | பற்று. ரூ | அ. | ப. | வரவு. ரூ | அ | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | **15. விருதுபட்டி கூழைய நாடார் பற்று வரவு கணக்கு.** | | | | | | |
| எப்ரல் | 15 | வரவு பருத்திக்கொட்டை மூட்டை 300-க்கு 3 மாதம் தவணைக்கு ... ... ... ... | ... | ... | ... | 1500 | 0 | 0 |
| | | ஆ வரவு ... | ... | ... | ... | 1500 | 0 | 0 |
| | | **16. க. ரு. கதிரேசன் செட்டியார் பற்று வரவு கணக்கு.** | | | | | | |
| எப்ரல் | 25 | பற்று 1 வட்டி பிராமிஸரி நோட்டு 1-க்கு ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| | | ஆகப்பற்று ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |

1910௵ ஏப்ரல்௴ 30உ அயன் தொகை.

| வருஷம் மாதம். | தேதி. | பெயரேட்டுப் பக்கம். | பெயரேடு. | பற்று. ரூ. | அ. | ப. | வரவு. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1910 ஏப்ரல் | | | | | | | | | |
| | 30 | 1 | ஸ்வாமிகள் வரவு ... ... ... ... | ... | ... | ... | 7 | 0 | 0 |
| | | 2 | ஆதாய வரவு ... ... ... ... ... | ... | .. | ... | 3 | 0 | 0 |
| | | 3 | பங்குமுதல் வரவு ... ... ... ... | ... | ... | ... | 11000 | 0 | 0 |
| | | 4 | மதுராஸ் பாங்கிப் பற்று ... ... ... ... | 2500 | 0 | 0 | 2000 | 0 | 0 |
| | | 5 | நாஷனல் பாங்கிப் பற்று ... ... ... | 4500 | | 0 | 4000 | 0 | 0 |
| | | 6 | கடைச் செலவுப் பற்று ... ... ... .. | 10 | 0 | 0 | ... | .. | ... |
| | | | ஆக ரூ ... | 7010 | 0 | 0 | 17010 | 0 | 0 |

| வருஷம் மாதம். | தேதி. | பெயரேட்டுப் பக்கம். | பெயரேடு. | பற்று. ரூ. | அ. | ப. | வரவு. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | முன் பக்கம் நூ ... | 7010 | 0 | 0 | 17010 | 0 | 0 |
| 1910 எப்ரல் | 30 | 7 | இந்தியன் பாங்கிப் பற்று வரவு ... ... | 5000 | 0 | 0 | 1000 | 0 | 0 |
| | | 8 | க. தெ. கடைப் பற்று ... ... ... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| | | 9 | மெழுகுவர்த்தி விற்று வரவு ... ... ... | ... | ... | ... | 110 | 0 | 0 |
| | | 10 | கன்னையா பிரதர்ஸ் பற்று ... ... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| | | 11 | வீட்டுப் பற்று ... ... ... ... | 60 | 0 | 0 | ... | ... | ... |
| | | 12 | தர்மப் பற்று ... ... ... ... ... | 10 | 0 | 0 | ... | ... | ... |
| | | 13 | கமிஷன் பற்று வரவு ... ... ... | ... | ... | ... | 6 | 4 | 0 |
| | | 14 | பருத்திக்கொட்டை கொள்முதல்... ... ... | 1500 | 0 | 0 | ... | ... | ... |
| | | 15 | கூழையநாடார் வரவு ... ... ... | ... | ... | ... | 1500 | 0 | 0 |
| | | 16 | க. ரு. கதிரேசன் செட்டியார் பற்று ... ... | 2000 | 0 | 0 | ... | ... | ... |
| | | | குறிப்பு இருப்பு ... ... | 46 | 4 | 0 | | | |
| | | | ஆ ... | | | | | | |
| | | | அயன் தொகை பற்று வரவு நேர். ... | 19626 | 4 | 0 | 19626 | 4 | 0 |

# தமிழ் நாட்டுக் கணக்குப் பதிவு நூல்.

## நான்காவது பாகம்.



## பரிக்ஷை வினாக்கள்.

---

1. கணக்குப் பதிவு நூல் என்பது என்ன?

2. வரவு செலவு கணக்கு வைத்துக் கொள்வதில் என்ன பிரயோஜனம்?

3. வருமான வரி விதிக்கப்படாத மிராசுதார்கள், வருஷம் 1-க்கு ரூபாய் ஆயிரத்திற்குக் குறைந்த வரும்படியுள்ளவர்கள், இவர்கள் கணக்கு வைத்துக் கொள்ள வேண்டியது அவசியமா? அப்படியானால் காரணங்களை விளக்குக.

4. ஸாதாரண வீடுகளிலும் கடைகளிலும் என்னென்ன புஸ்தகங்கள் அவசியம் வைத்துக் கொள்ள வேண்டும்?

5. பல ஊர்களில் கடை வைத்தும் இதர பற்று வரவுகள் ஜாஸ்தி செய்து கொண்டும் வருபவர்களுக்கு என்னென்ன புஸ்தகங்கள் உபரியாய் வேண்டும்?

6. வரவு செலவு கணக்கு வைத்துக் கொள்ளும் வழியை விளக்குக.

7. சிட்டைக் குறிப்பு என்பது எவ்விதம் இருக்க வேண்டும்? அதன் பிரயோஜனத்தை விளக்குக.

8. தேதிவாரியாய்க் கணக்கு எழுதிவருவதில் முன் தேதிக்கணக்குக்களில் ஏதாவது எழுதவிட்டுப்போனால் அவைகளை எவ்விதம் எழுதவேண்டும்? அதை உதாரண மூலமாய் விளக்குக.

9. கணக்கு எழுதித்தான் பணம் பெட்டியில் இருந்து எடுப்பது, போடுவது என்னும் வழக்கத்தினால் என்ன பிரயோஜனம்?

10. பெ. சு. வெங்கடாசலம் செட்டியார் என்பவர் 1914 வருஷம் ஜனவரிமீ 7உ அடியிற்கண்ட விபரப்படி வரவு செலவுகள் செய்தார்:—

(a.) வீட்டிற்காக ரூ 200க்கு ஒரு பதக்கமும் ரூ 75க்கு ஒரு சிவப்புமோதிரமும் ராமஸாமிப்பத்தர் என்பவரிடம் வாங்கினார். அதற்கு ஷெ ராமஸாமிப் பத்தருக்கு ரூ 275க்கு இண்டியன் பாங்கிக்கு 3-ம் நம்பர் செக்கு ஒன்று கொடுத்தார்.

(b.) அ. சு. வசம் ரூ 300 கைமாற்று வாங்கினார்.

(c.) தம்முடைய காடிகாணச்செலவிற்காக முத்துப்பிள்ளை என்பவரிடம் கொள்ளு ரூ 1க்கு மரக்கால் 3 ஆகப்பேசி 1 மாதடயனில் கலம் 50 கொண்டுவந்து அளப்பதாய் ஷெயாரிடம் எக்ரீமெண்டு எழுதி வாங்கிக்கொண்டு ரூ 100 அட்வான்ஸ் கொடுத்தார்.

மேற்கண்ட 3 கணக்குக்களையும் சிட்டைக் குறிப்பில் எழுதிக்காட்டுக.

11. தமிழ்நாட்டுக் கணக்குக்களில் இருபதிவு என்பது என்ன? அவைகளை ஒரு உதாரண மூலமாய் விளக்குக.

12. அட்வான்ஸ் கொடுத்த கணக்குக்களை ஸெட்டில் செய்யும் காலத்தில் எப்படி தாக்கல் செய்யவேண்டும்? இதை ஒரு உதாரணமூலமாய் விளக்குக.

13. ஒருகடையில் இருந்துவரும் கைச்சாற்றுக்களை எவ்விதம் தாக்கல்செய்ய வேண்டும்?

14. 1913ஸு மார்ச்மீ 1உ சு. க. வெங்கட்டராமய்யர் என்பவர் கந்தசாமிபிள்ளை யென்பவரிடம் ஒரு பிராமிஸரி

நோட்டு எழுதிவாங்கிக்கொண்டு ரூ 300 கடன் கொடுத்தார். ஸ்ரீ 1-க்கு 100-க்கு ரூ 1 வீதம் ஸ்ரீ 10-க்கு வட்டிரூ 30 முன்னதாகப் பெற்றுக்கொண்டார். வெங்கட்டராமய்யருடைய கணக்கை அவருடைய சிட்டைக் குறிப்பில் எழுதிக் காட்டுக.

15. 1911ஹூ மேஸ்ரீ 8உ கல்கத்தா அ. ரு. ச கடை ஏஜண்டு சுப்பிரமணியன் செட்டியார் என்பவர். அ. கு. குலாம்மயிதீன் ராவுத்தருக்கு ரூ 500-க்கு வீடு ஈடு பந்தகக் கடன்பத்திரம் எழுதிவாங்கிக் கொண்டு முக்கால் வட்டிக்குக் கடன்கொடுத்தார். ஷை குலாம்மயிதீன் ராவுத்தர் 1912ஹூ மார்ச்ஸ்ரீ 7உ ஷைக்கு அஸல் ரூ 500-ம் வட்டி ரூ 37--8--0ம் கொண்டுவந்து கொடுத்தார். ஷை சுப்பிரமணியன் செட்டியார் கணக்கையும், குலாம்மயிதீன் ராவுத்தர் கணக்கையும் தனித் தனியாய் சிட்டைக்குறிப்பில் எழுதிக்காட்டுக.

16. 1910ஹூ ஜனவரிஸ்ரீ 1உ சென்னை சு. க. சவுரி முத்தாபிள்ளை யென்பவர், கிங்கு கம்பேனியார் வசம் ரூ 300 பெற்றுக்கொண்டு கல்கத்தா அ. மு. கதிரேசன் செட்டியாரைப் பணம் கொடுக்கும்படி ஒரு தெரிசனையுண்டியல் எழுதிக் கொடுத்தார். இதை ஆர்டர் உண்டியலாக எழுதினுர். ஷை சவுரிமுத்தாபிள்ளைக் கடையின் உண்டியலை ஷையாருடைய கணக்கில் தாக்கல் செய்துகாட்டுக.

17. உண்டியல் பற்று எழுதும் விதத்தையும் சொல்லி அதை ஒரு உதாரணமூலமாயும் விளக்கிக் காட்டுக.

18. லாபங்களை எந்தவிதமாய் வரவு வைத்தால் வருஷ முடிவில் வருமான வரி விதிக்கும் அதிகாரிகள் மனதுக்கேற்கக் கணக்குக் கொடுக்கலாம்.

19. சிட்டைக் குறிப்பிற்கும் அஸல் குறிப்பிற்கும் உள்ள வித்தியாஸத்தை விளக்குக.

20. (a) ஒரு கடையில் இருந்து எழுதிக்கொடுத்த உண்டியல்களுக்குப்பணம்கொடுக்கவேண்டிய இடத்தில் கொடுக்கப்பட்ட உண்டியல் நீங்கலாகக் கொடுபடாத பாக்கி உண்டியல்களைக் கணக்கு முடிக்கும் காலத்தில் எப்படிதாக்கல் செய்ய வேண்டும்?

(b.) பணம் வாங்கும்படி வாங்கியனுப்பிய உண்டியல்களில் பணம்வாங்கப்படாதவைகளை என்னசெய்ய வேண்டும்?

(c) ஷை இரண்டுவகை உண்டியல்களையும் உதாரணமூலமாய்த் தாக்கல் செய்து காட்டுக.

21. புதுக்கணக்கு எழுதவேண்டியது சிட்டைக் குறிப்பிலா அஸல் குறிப்பிலா?

22. சிட்டைக் குறிப்பின் அவசியத்தை விளக்கிக் காட்டுக.

23. செலவு கணக்கு எழுதுவதில் முக்கியமாய்க் கவனிக்க வேண்டியவைகள் எவை?

24. மொத்தமாய் எழுதவேண்டிய செலவுகளை எவ்விதம் தாக்கல் செய்யவேண்டும்?

25. லாபம் வரவு வைப்பதில் முக்கியமாய்க் கவனிக்க வேண்டியவைகள் எவை?

26. சிட்டைக் குறிப்பில் இருக்கும் பெயரேடு எறபடாத கணக்குகளை என்ன செய்ய வேண்டும்?

27. ஒருவருக்குக் கொடுக்க வேண்டிய பணத்திற்கு பதில்செக்குக் கொடுத்தால் அச்செக்கை எவ்விதம் கணக்கில் வரவு செலவு செய்ய வேண்டும்?

28. சிட்டைக்குறிப்பிலுள்ள எந்தக்கணக்குகளை அஸல் குறிப்பில் எழுதவேண்டும்?

29. அஸல் குறிப்பில் எழுதப்பட்டு பாச்கியுள்ள கணக்குகளை என்ன செய்யவேண்டும்.

30. "சிட்டை விபரப்படி" என்னும் வார்த்தையின் அர்த்தத்தையும் அதைஉபயோகப் படுத்த வேண்டிய இடங்களையும் விளக்குக.

31. ஒருகடையிலிருந்து ஒருதேதிக்காக முடித்து வரும் கணக்கை தாக்கல் செய்யு முன்னர் அக்கணக்கில் கவனிக்க வேண்டியவைகளை விளக்குக.

32. கணக்கு முடித்து வந்த தேதிக்கு முன், பிறத்தியில் பணம் வாங்கும்படி அக்கடைக்கு அனுப்பப்பட்டு பணம் வாங்கப்படாத உண்டியல்களையும் பணம் கொடுக்கும்படி எழுதிக் கொடுத்து பணம்கொடுபடாத உண்டியல்களையும் கணக்கு முடிக்கும் பொழுது எவ்விதம் தாக்கல் செய்ய வேண்டும்?

(a) கணக்கு முடித்து அனுப்பிய கடையில் நமக்காக அவர்கள் வாங்கியிருக்கும் உண்டியல் வட்டியையும், நமக்காக அவர்கள் கொடுத்திருக்கும் உண்டியல் வட்டியையும் நம்முடைய கடையில் எவ்விதம் தாக்கல் செய்ய வேண்டும்?

33. (b) "வட்டி கழித்து தாக்கல் செய்வது" "நடப்புக் கணக்கிற்கு வட்டி தாக்கல் செய்வது" என்ற இரண்டு வாக்கியங்களின் அர்த்தத்தை விளக்குவதுடன், அவைகளை உபயோகப் படுத்த வேண்டிய இடத்தையும் உதாரண மூலமாய் விளக்கிக்காட்டுக.

34. (a) குறிப்பில்லாமல் கணக்கு தாக்கல் செய்வது என்பது என்ன?
(b) குறிப்பில்லாமல் கணக்கு தாக்கல் செய்ய வேண்டிய அவசியத்தை விளக்குக.

35. (a) அயன் தொகை என்பது என்ன?
(b) அயன் தொகையால் என்ன பிரயோஜனம்?
(c) அயன் தொகையில் குறிப்பு இருப்பை எந்தக் கலத்தில் போட வேண்டும்?
(d) அயன் தொகை எடுக்கும் பொழுது எந்தெந்தக் கணக்குகளைக் கழித்துப் போடலாம்,

எந்தெந்தக் கணக்குகளைக் கழித்துப் போடக் கூடாது ?

(e) அப்படி கழித்துப் போடாமல் பற்றையும் வரவையும் தனித்தனி போடுவதில் என்ன பிரயோஜனம் ?

36. (a) லாப நஷ்டத்தைக் கண்டு பிடிப்பது எந்தக் கணக்கை வைத்துக் கொண்டு கண்டு பிடிக்க வேண்டும்?

(b) லாபம், அஸல்லாபம் இரண்டையும் விளக்குக.

(c) கண்டுபிடிக்கப்பட்ட அஸல் லாபம் ஸரிதான் என்பதை எப்படித் தெரிந்து கொள்ளுகிறது.

37. அட்டவணை எதற்காக வைத்துக்கொள்ள வேண்டியது?

38. எழுதியனுப்பப்படும் தபால்களுக்கு நகல் வைத்துக் கொள்ளவேண்டிய அவசியத்தையும் நகல் வைத்துக்கொள்ளும் வழியையும் விளக்குக ?

39. வரவு தபால்களை எவ்விதம் பயில் செய்து வைத்துக்கொள்ள வேண்டும்?

40. தபால் அனுப்பு வரவு விபரம் வைத்துக் கொள்ள என்னென்ன கலங்கள் ஏற்படுத்திக் கொள்ளவேண்டும் ?

41. (a) உண்டியல் என்பது என்ன?

(b) எத்தனைவகை உண்டியல்கள் உண்டு?

(c) ஆர்டர் உண்டியலுக்கும், பேரர் உண்டியலுக்கும், உள்ள வித்தியாஸத்தை விளக்குக.

(d) உண்டியல்களுக்கு கணக்கு வைத்துக் கொள்ளவேண்டிய அவசியத்தையும், வைத்துக் கொள்ளவேண்டியவழியையும் விளக்குக.

42. கைச்சாற்று வவுச்சர் பயில் புஸ்தகம் என்பது என்ன ?

43. உண்டியல் புஸ்தகத்தையும் அதன் பிரயோஜனத்தையும் விபரமாய் விளக்குக.

44. (a) கர்ரன்ஸி நோட்டு என்பது என்ன?
(b) அவைகளுக்குக் கணக்கு வைத்துக் கொள்ள வேண்டியது எதற்காக?

45. (a) டாக்ஸ் (tax) என்பது என்ன?
(b) இன்கம் டாக்ஸ் என்பது என்ன?
(c) ஒருவருக்கு ஏற்படக் கூடிய இன்கம் டாக்ஸ் இவ்வளவு என்பதைக் கண்டு பிடிப்பதற்கு முக்கியமான வழி எது?
(d) எவ்வளவு ரூபாய்க்கு மேல் ஸம்பாதிப்பவர்களுக்கு இன்கம் டாக்ஸ் ஏற்படுகிறது?
(e) நிலத்தில் வரும் வரும்படிகளுக்கு இன்கம் டாக்ஸ் உண்டா?
(f) ஸொந்தக்காரர்களால் வாஸம் செய்யப்படும் கட்டிடங்களுக்கு வருமான வரி உண்டா?
(g) அப்படி உண்டானுல் எவ்விதம் விதிக்கப் படுகின்றன?

46. 1910 வருஷம் மார்ச் மீ 31உ கல்கத்தா பெ. க. கருப்பன் செட்டியாருடைய கணக்கில் அடியிற்கண்ட பெயரேடுகள் பாக்கியிருக்கின்றன :—

(a) ஷை பெயரேடுகளில் குறிப்பில்லாமல் கணக்குதாக்கல் செய்து மிச்சமாயுள்ள பெயரேடுகளை விளக்குக.
(b) ஷை பெயரேடுகளைவைத்து, அயன்தொகை,
(c) அட்டவணை,
(d) அஸ்ஸெட்ஸ் லயேபிலிட்டீஸ், இவைகள் எழுதிக் காட்டுக.
(e) ஷை, பெ. க. கருப்பன் செட்டியாருடைய கணக்கில் என்ன லாபம் ஏற்படுகிறது?
(f) ஷை கணக்குப்படி அவருக்கு வருமானவரி என்ன ஏற்படுகிறது?

| பெயரேட்டு பக்கம் | பெயரேட்டு விபரம். | பற்று. ரூ. | அ. | ப. | வரவு. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | ஸ்வாமிகள் பற்று வரவு | ... | ... | ... | 7 | 8 | 0 |
| 8 | பங்கு முதல் வரவு ... | ... | ... | ... | 11,000 | 0 | 0 |
| 10 | ஆதாய வரவு ... ... | ... | ... | ... | 11 | 0 | 0 |
| 11 | தர்மப் பற்று வரவு ... | 147 | 0 | 0 | ... | ... | ... |
| 17 | வீட்டுப் பற்று வரவு ... | 670 | 0 | 0 | ... | ... | ... |
| 20/80 | இதர ஆஸாமிகள் பற்று வரவு ... ... ... | 6,000 | 0 | 0 | 2,000 | 0 | 0 |
| 81 | தளவாட ஸாமான் கொள்முதல் கணக்கு... | 120 | 0 | 0 | ... | ... | ... |
| 82 | வட்டிப் பற்று வரவு ... | 600 | 0 | 0 | 2,500 | 0 | 0 |
| 85 | வட்டம் கமிஷன் பற்று வரவு ... ... ... | 120 | 0 | 0 | 490 | 0 | 0 |
| 89 | வாடகைப் பற்று வரவு | 130 | 0 | 0 | 300 | 0 | 0 |
| 91 | லாப வரவு ... ... | ... | ... | ... | 5 | 0 | 0 |
| 93 | கடைச் செலவு ... ... | 300 | 0 | 0 | ... | ... | ... |
| 94 | அட்வர்ட்டயிஸ்மெண்டுச் செலவு ... ... | 60 | 0 | 0 | ... | ... | ... |
| 98 | ஜெவுளி வியாபாரப் பற்று வரவு எட்டில் பற்று நீக்கி அதிக வரவு | ... | ... | ... | 600 | 0 | 0 |
| 99 | நிலவரும்படி வரவு ... | ... | ... | ... | 200 | 0 | 0 |
| 108 | பலசரக்கு வியாபாரத்தில் வரவு நீக்கி அதிகப் பற்று ... ... | 180 | 0 | 0 | ... | ... | ... |
| 111 | மெழுகுவர்த்தி கொள்முதல் எட்டில் பற்று நீக்கி அதிக வரவு ... | ... | ... | ... | 85 | 0 | 0 |
| 115 | சார்ட்டர் பாங்கிப் பற்று | 2 800 | 0 | 0 | ... | ... | ... |
| 119 | வீடு கொள்முதல் பற்று | 3,000 | 0 | 0 | ... | ... | ... |
| 121 | நிலம் கொள்முதல் பற்று | 3,000 | 0 | 0 | ... | ... | ... |
| | | 17,127 | 0 | 0 | 17,198 | 8 | 0 |
| | இருப்பு ரூ 71-8-0 | | | | | | |

(*g*) ஷை கணக்குப்படி அஸல்லாபம் என்ன ஏற்படுகிறது?

(*h*) மேலே கண்டு பிடிக்கப்பட்ட அஸல்லாபம் ஸரி என்பதை ருஜுப்படுத்திக் காட்டுக.

47. அடியிற்கண்ட வைகளைத் தபால்மூலம் அனுப்ப வேண்டுமானால் என்ன சார்ஜ் ஏற்படும்?

(*a*) ரூ 3 எடையுள்ள ஒரு லெட்டர்.

(*b*) ரூ 40 எடையுள்ள ஒரு பார்ஸல்.

(*c*) ரூ 16-4-0 வஸூல் செய்யும்படி ஒரு ரயில்வே வீ. பி. ரெசீது.

(*d*) 10 ரூபா யெடையும் ரூ 800 பெறுமானமும் உள்ள ஒரு இன்ஷியூர்ட் பார்ஸல்.

(*e*) 14 ரூபாயெடையுள்ள ஒரு கணக்கு நகல் பாக்கெட்டு.

48. அடியில் கண்ட தந்திகளுக்கு என்ன சார்ஜ் ஆகும்?

(*a*) 9வார்த்தைகளடங்கிய ஒருஸாதாரணத் தந்தி

(*b*) 21 வார்த்தைகளடங்கிய ஒரு அவஸரத்தந்தி.

49. அடியிற் கண்ட ஸாமான்களை ரயில்வேபார்ஸல் மூலம் அனுப்பவேண்டுமானால் என்ன சார்ஜ் ஆகும்:—

(*a*) 23சேர்உள்ள ஒரு ரயில் பார்ஸல் 100மைலுக்கு அனுப்ப.

(*b*) 43 சேர் எடை உள்ள ஒருகாய்கரி மூட்டையை 250 மைலுக்கு அனுப்ப.

(*c*) 13 சேர் எடையுள்ள ஒருதுணிப்பார்ஸலை 12மைலுக்கு அனுப்ப.

50. திருச்சி கோவிந்தன் கம்பேனியார் லண்டன் பர்னட் அண்டு போஸ்டரிடமிருந்து ரூ 500 பெறுமான ஒருமிஷினை நேரில் வரவழைக்க வேண்டுமானால் எவ்வித ஏற்பாடுகள் செய்து வரவழைக்கவேண்டும். ஸாமான் திரிச்சிக்கு வந்து சேரும் வழியையும் பர்னட்டு அண்டு போஸ்டருக்குப்பணம் செலுத்த வேண்டிய வழியையும் விளக்குக.

